பேராசிரியர்

# அ.மு. பரமசிவானந்தம்

பதிப்பாசிரியர்

முனைவர் ம. இராசேந்திரன்

முனைவர் ச. சிவகாமி


உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES

பேராசிரியர்

# அ.மு. பரமசிவானந்தம்

பதிப்பாசிரியர்

முனைவர் ம. இராசேந்திரன்
முனைவர் ச. சிவகாமி

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES
இரண்டாம் முதன்மைச் சாலை, மையத் தொழில்நுட்பப்
பயிலக வளாகம், தரமணி, சென்னை - 600 113

## BIBLIOGRAPHICAL DATA

| | | |
|---|---|---|
| Title of the Book | : | Pērāciriyar A.Mu. Paramacivāṉantam |
| Editors | : | Dr. M. Rajendran<br>Dirctor (Additional Charge)<br>IITS, Taramani, Chennai - 600 113<br><br>Dr. S. Sivakami<br>Associate Professor<br>IITS, Taramani, Chennai - 600 113 |
| Publisher & © | : | International Institute of Tamil Studies<br>II Main Road, C.I.T. Campus,<br>Taramani, Chennai - 600 113.<br>Ph: 22542992 |
| Publication No. | : | 572 |
| Language | : | Tamil |
| Edition | : | First |
| Year of Publication | : | 2007 |
| Paper Used | : | 18.6 Kg TNPL Maplitho |
| Size of the Book | : | 1/8 Demy |
| Printing type used | : | 10 Point |
| No. of Pages | : | viii + 136 |
| No. of Copies | : | 1200 |
| Price | : | Rs. 40/- (Rupees Forty Only) |
| Printed by | : | United Bind Graphics<br>101-D, Royapettah High Road<br>Chennai - 600 004 |
| Subject | : | Biographical & Critical Studies on<br>A.M. Paramasivanantam |

**முனைவர் ம. இராசேந்திரன்**
இயக்குநர் (முழுக்கூடுதல் பொறுப்பு)
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சென்னை - 600 113

## முகவுரை

தமிழ்த் தொண்டுகளுக்காகத் தமிழறிஞர்கள் போற்றப் பெறும் காலம் இது.

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் பலவகைக் கருத்தரங்குகளை நடத்தி வருகின்றது.

நினைவில் வாழும் தமிழறிஞர்களைப் போற்றும் வகையில் 'தமிழறிஞர் வரிசைக் கருத்தரங்கம்' திங்கள் தோறும் இந்நிறுவனத்தில் நடத்தப்பெற்று வந்தது. அதன் முதல் சுற்றில் பதினாறு தமிழறிஞர்கள் பற்றியும் இரண்டாம் சுற்றில் பதினாறு தமிழறிஞர்கள் பற்றியும் ஆய்வுக் கட்டுரைகள் இக் கருத்தரங்குகளில் வழங்கப்பெற்றன.

ஆய்வுக் கட்டுரைகள் தொகுக்கப்பெற்று அடுத்தடுத்து வரும் கருத்தரங்குகளில் நூலாக வெளியிடப்பட்ட மரபும் இருந்தது.

சிறந்த தமிழறிஞர்களின் படைப்புகளை ஆவணப்படுத்துவதன் மூலம் அவர்கள் தம் மொழிக்கும் பண்பாட்டுக்கும் நாட்டுக்கும் ஆற்றிய அருந்தொண்டுகளும் வரும் தலைமுறை உணரும் வாய்ப்பு உருவாகும்.

காலந்தோறும் புதுப்புது இலக்கிய, இலக்கணங்கள் மற்றும் பல்துறைப் பண்பாட்டுப் புனைவுகளைப் பெற்று மொழி வளரும் பாங்கினையும் வெளிப்படுத்தும் நோக்கிலானது இக்கருத்தரங்கம்.

இத் தமிழறிஞர் வரிசைக் கருத்தரங்கு வாழ்க்கை வரலாற்றுக் கருத்தரங்காக அமையாமல் ஆய்வுக் கருத்தரங்கமாக அமைந்தது. அவ்வரிசையில் அ.மு.ப. பற்றிய கருத்தரங்கமும் அமைந்தது.

அ.மு.பரமசிவானந்தம் பற்றி இந்நிறுவனத்தில் 31.05.2004 இல் கருத்தரங்கம் நடந்தது. அது இவ்வரிசையில் அமைந்த 14ஆம் கருத்தரங்கம் ஆகும். அதில் ஐந்து கட்டுரைகள் படிக்கப்பெற்றன.

அறிஞர் அ.மு.பரமசிவானந்தத்தின் 'வாழ்க்கை வரலாறு', 'ஆய்வும் படைப்பும்', 'பயண இலக்கியம்', 'நாட்டுப்புறவியல் பங்களிப்பு' மற்றும் அவருடைய 'இதழியல் பணிகள்' என்று படிக்கப்பெற்ற கட்டுரைகள் தொகுக்கப் பெற்றன. **பேராசிரியர் அ.மு. பரமசிவானந்தம்** என்ற தலைப்பில் இப்போது நூல் வெளியிடப்பெறுகின்றது.

பேராசிரியர் அ.மு. பரமசிவானந்தம் அவர்கள் சுருக்கமாக அ.மு.ப. என அழைக்கப்பெறுபவர். அவரின் பன்முக ஆளுமையை இந்நூல் வெளிப்படுத்த உதவக்கூடும்.

அ.மு.ப. தம் இளமைப் பருவந்தொட்டே தமிழில் துடிப்புள்ள மாணவராகத் திகழ்ந்துள்ளார். படிப்படியாகத் தம் ஆளுமையை உழைப்பாலும் விடாமுயற்சியாலும் வெளிப்படுத்தியுள்ளார். அவற்றின் மூலம் சிறந்த தமிழ்ப் பேராசிரியராகவும், இதழாளராகவும் திகழ்ந்துள்ளார்.

தமிழ் மாணவர்களுள் தேர்ந்து படித்தறிவதற்கான புதிய பாடத்திட்டங்களைப் பல பல்கலைக் கழகங்களில் அறிமுகப் படுத்தியுள்ளார்.

தமிழ்ச் சமுதாயத்தின் ஓர் அங்கமான மலைவாழ் மக்களிடையே சென்று அவர்தம் பழக்க வழக்கங்களையும் அவர்களிடையே புழங்கும் பழந்தமிழ்ச் சொற்களையும் அறிந்துள்ளார். தமிழ் உரைநடை வளர்ச்சியை ஆய்ந்துள்ளார். தமிழ்நாட்டின் பாரம்பரியக் கலைச் செல்வங்களைப் பரப்பும் வகையில் ஆங்கிலத்தில் நூல்களும் எழுதியுள்ளார்.

அயல்நாடுகளுக்கும் சென்று இவற்றைச் சொற்பொழிவுகள் மூலமும் பரப்பியுள்ளார். தற்காலத் தமிழ்க் கல்விக்கு எவை முக்கியத் தேவையோ அவற்றை அறிந்து அ.மு.ப. செயல்பட்டுள்ளதைக் கண்டு வியக்க முடிகின்றது.

**மாண்புமிகு தமிழக முதல்வர் அவர்கள்** தொடர்ந்து இந்நிறுவன வளர்ச்சிக்கு ஆக்கமும் ஊக்கமும் அளித்து வழிநடத்தி வருகிறார்கள். **இந்நிறுவனத் தலைவராக மாண்புமிகு தமிழக முதல்வர்** அவர்கள், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தை நெறிப்படுத்திவரும் பாங்கினைத் தமிழகம் என்றென்றும் நன்றியுடன் போற்றும்.

இந்நிறுவனச் செயல்பாட்டுக்கு உறுதுணையாக இருந்துவரும் மாண்புமிகு தமிழக முதல்வர் அவர்களின் செயலாளர் முனைவர் **கி. இராசமாணிக்கம் இ.ஆ.ப.** (ஓய்வு) அவர்களுக்கும் தமிழ் வளர்ச்சி, அறநிலையம், செய்தி மற்றும் விளம்பரத் துறை **அரசுச்செயலாளர் திரு. து. இராசேந்திரன் இ.ஆ.ப.** அவர்களுக்கும் நன்றி.

இக் கருத்தரங்கப் பணிகளிலும் நூலாக்கப் பணிகளிலும் ஈடுபட்ட நிறுவன இணைப்பேராசிரியர் முனைவர் ச. சிவகாமியை மிகவும் பாராட்டுகிறேன். கட்டுரையாளர்களுக்கும் என் பாராட்டுகள்.

இந்த நூலைச் சிறந்த முறையில் மெய்ப்புத்திருத்தம் செய்த முனைவர் ஆ. தசரதனுக்கும், ஒளியச்சுக்கோப்புச் செய்த நிறுவனக் கணினியாளர் திரு. சு. கண்ணனுக்கும் இந்நூலை அச்சிட்ட யுனைடெட் பைண்ட் கிராபிக்ஸ் அச்சகத்தார்க்கும் என் பாராட்டுக்கள்.

நிறுவனப் பணிகள் செம்மையுறக் காலநேரம் கருதாமல் ஒத்துழைப்பு நல்கிவரும் கல்வி அலுவலர்கள், நிருவாகப் பணியாளர்கள், ஆய்வாளர்கள் ஆகியோருக்கு நன்றிகலந்த வாழ்த்துக்கள்.

சென்னை

**இயக்குநர்**

# உள்ளே

1. வாழ்க்கை வரலாறு 1

– ஆர். தமிழ்ச்செல்வி

2. ஆய்வும் படைப்பும் 23

– தி. மகாலட்சுமி

3. பயண இலக்கியம் 70

– சா. வளவன்

4. நாட்டுப்புறவியல் பணிகள் 94

– கி. மைதிலி

5. இதழ்ப்பணி 117

– முகிலை இராசபாண்டியன்

# கட்டுரையாளர்

முனைவர் முகிலை இராசபாண்டியன்
தமிழ்ப்பேராசிரியர்
மாநிலக் கல்லூரி, சென்னை

முனைவர் ஆர். தமிழ்ச்செல்வி
இணைப்பேராசிரியர்
இராணி மேரி கல்லூரி, சென்னை

முனைவர் தி. மகாலட்சுமி
ஆய்வு உதவியாளர்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சென்னை

முனைவர் கி. மைதிலி
இணைப்பேராசிரியர்
பச்சையப்பன் கல்லூரி
சென்னை

முனைவர் சா. வளவன்
தமிழ்ப் பேராசிரியர்
பச்சையப்பன் கல்லூரி
சென்னை

# வாழ்க்கை வரலாறு

ஆர். தமிழ்ச்செல்வி

வாழும் காலத்தில் சிறப்புற்றிருப்பவர் அல்லது மரணத்துக்குப் பிறகு புகழுக்குரியவராக உயர்ந்து விடுபவர் என்னும் இரண்டு வகையினரைப் பற்றியே வாழ்க்கை வரலாறுகள் எழுதப் படுகின்றன.

'வாழ்க்கை வரலாறு என்ற இரு கரைகளைக் கொண்ட ஆறு, இரு தண்டவாளங்களைக் கொண்ட இருப்புப் பாதை, இரண்டும் உரிய அளவில் உன்னத முறையில் இணையப் பெறுவதே வாழ்விலக்கியம்.'[1]

## வாழ்க்கை வரலாறு - விளக்கம்

'உண்மை நிகழ்ச்சிகளையும் அவைகளின் புதிய வடிவங்களையும் கொண்டு மனிதாபிமான நோக்கோடு கோத்து அமைக்கப்படும் ஒரு தனிமனிதக் கதையே வாழ்க்கை வரலாற்று இலக்கியம்[2] என்பர். வாழ்க்கை வரலாற்றில் எத்துறையைச் சார்ந்தவரும் தலைவராகலாம். தனிமனித வாழ்க்கை, வாழ்க்கை வரலாற்றில் சிறப்பிடம் பெறுகிறது.

'ஒருவரின் நாட்குறிப்புகள், உடன் உறைந்தோர் தரும் எண்ணங்கள், தகவல்கள், அவரைப் பற்றிப் பிறர் எழுதி வைத்துள்ள கருத்துகள் அல்லது தானே உடன்பட அவரது, பெருமை, சிறுமைகள், உணர்ந்தது போன்ற பலவற்றின் துணையுடன் வாழ்க்கை வரலாறு உருவாகின்றது[3].

இங்கு அ.மு. பரமசிவானந்தம் எழுதியுள்ள நூல்களை ஆதாரமாகக் கொண்டு வாழ்க்கை வரலாறு எழுதப்பட்டுள்ளது. (அ.மு.ப. மகன் திரு. மெய்கண்டான், வள்ளியம்மாள் கல்வி அறக்கட்டளைத் தலைவர், வழங்கிய 35க்கும் மேற்பட்ட புத்தகங்களாகும்). இனி அ.மு.ப. வாழ்க்கை வரலாற்றினைக் காண்போம்.

## தாயின் பெருமை

அ.மு.ப.வின் பெற்றோர் வேளாண்குடியைச் சேர்ந்தவர்கள். தாய் வள்ளியம்மை மிகவும் அமைதியானவர். தைரியமானவரும் கூட. தந்தை

ஊரில் உள்ள தீயவர்களுடன் கூடி, தீய வழியில் சென்று மனைவியைத் தனித்து விட்டபோதும் தாய் வள்ளியம்மை மனம் தளராது தனித்து நின்று தம் மகனை வளர்த்தவர். அ.மு.ப.வின் பெரியன்னை, பெரியப்பா அனைவரும் பாகப்பிரிவினை செய்து தனித்துச் சென்ற பிறகும் கூடத் தான் மட்டுமே துணிச்சலாக நின்று மகனை வளர்த்து ஆளாக்கினார். தாயிடமிருந்து அ.மு.ப.வுக்கு எவ்வளவு அன்பும், பாசமும் கிடைக்குமோ அந்தளவுக்கு அடியும் கிடைக்கும். ஆனால் அவையனைத்துமே தம் மகனை நல்வழிப்படுத்தவே மேற்கொண்டார். அ.மு.ப. 13 வயதில் தந்தையை இழந்த போது அவரின் அன்னை தைரியத்தைக் கைவிடாது மகனைக் கரையேற்றவே உயிர் வாழ்ந்து மகனின் பல முன்னேற்றங்களைக் கண்டு பெருமிதமும் கொண்டார்.

## குழந்தைப் பருவம்

அ.மு.ப. வேளாண்குடிகள் நிறைந்த வாலாஜாபாத்திற்கு அருகிலுள்ள 'அங்கம்பாக்கம்' என்ற கிராமத்தில் 5-7-1914ஆம் நாளில் பிறந்தார். இவருடைய பெரியன்னைக்குப் பிள்ளைகள் யாரும் இல்லாததாலும் இவரே முதல் ஆண் வாரிசு என்பதாலும் இவருக்கு அனைவரின் அன்பும் அரவணைப்பும் குறைவின்றிக் கிடைத்தன. பாட்டியுடன் அதிகாலையில் தோட்டத்திற்குச் சென்று பூக்கள் பறித்து வருவார். காலை 9 மணி ஆனதும் சாப்பிட்டுவிட்டு, பள்ளிக்குச் செல்வார். இப்படி எந்தவிதத் துன்பமும் இன்றி வளர்ந்து வந்தார். தாத்தாவின் கதைகளையும் பாட்டியின் அறிவுரைகளையும், அன்னையின் கண்டிப்பையும் பெற்று நல்மகனாகவே வளர்ந்தார். அ.மு.ப. உடன் பிறந்தார் எவரும் இல்லை. தாயின் புத்திமதிகளின் காரணமாக நல்லவர் யார்? தீயவர் யார்? சுற்றத்தாரின் இயல்பு என்ன என்பதை அ.மு.ப. தெளிவாகவே புரிந்து வைத்திருந்தார்.

## பள்ளிப் பருவம்

அ.மு.ப. தமது ஐந்தாம் வகுப்பு வரை தமது ஊரான 'அங்கம்பாக்கு'த்தில் உள்ள 'போர்டு' பள்ளிக்கூடத்தில் பயின்றார். இவர் ஐந்தாம் வகுப்பு படிக்கும் போதே பள்ளியில் நடைபெற்ற "அல்லி அர்ஜுனா" எனும் நாடகத்தில் "கிருஷ்ணன்" வேடத்தில் நடித்துள்ளார். அர்ச்சுனனுக்கு அல்லியை மணம் முடிக்கும் கிருஷ்ணன் பாத்திரம் இவருடையது. இவர் நாடகத்தில் நடித்த பாங்கினைக் கண்டு ஆசிரியர்களும் ஊரில் உள்ளவர்களும் மகிழ்ந்து பாராட்டினார்கள்.

அ.மு.ப. தமது ஆறாம் வகுப்புப் படிப்பிற்காக 'வாலாஜாபாத்' சென்று படிக்க வேண்டும். ஆனால் அவரின் அன்னை அதற்கு

அனுமதிக்க வில்லை. தம் ஒரே மகனை வெளியூருக்கு அனுப்பி விட்டு, தன்னால் இருக்க முடியாது என்று கூறிவிட்டார். அந்தச் சமயத்தில் வாலாஜாபாத்தில் இந்துமதப் பாடசாலையை நடத்தி வந்த 'மாசிலாமணி முதலியார்' வலிய வந்து அமுபவின் தாயிடம் பதமாக எடுத்துக்கூறி உடன் அழைத்துச் சென்றார்.

அ.மு.ப. ஆறாம் வகுப்பு படித்துக் கொண்டிருந்த போது ஓவிய ஆசிரியர் இவருக்குச் சரியாக ஓவியம் வரவில்லையென்று கன்னம் வீங்க அறைந்து விட்டார். அதனை அறிந்த அன்னை இனிமேல் 'நீ அந்தப் பள்ளிக்குச் செல்ல வேண்டாம்' என்று கூறிவிட்டார். பிறகு மாசிலாமணி முதலியார் மற்றும் ஓவிய ஆசிரியர் அனைவரும் வந்து மன்னிப்புக்கேட்டு மீண்டும் அ.மு.ப.வைப் பள்ளிக்கு அழைத்துச் சென்றார்கள். தமது எட்டாம் வகுப்பு வரை 'வாலாஜாபாத்' இந்துமதப் பாட சாலையிலேயே பயின்றார். பள்ளியின் தலைமையாசிரியர் 'வீரராகவாச்சாரியார்' வீட்டுப் பிள்ளையாகவே அ.மு.ப. வளர்ந்து வந்தார்.

இந்துமதப் பாடசாலையை நடத்தும் வா.தி. மாசிலாமணி முதலியார் பொதுப் பணியில் ஈடுபட்டவர். இதுபோன்ற தேர்தல்களிலெல்லாம் தலையிட வேண்டாம் என்று அனைவரையும் வற்புறுத்திய அவரே தேர்தல் சுழியில் சிக்கிக் கொள்ள நேரிட்டது. அவர் செங்கற்பட்டுக் கழக உறுப்பினர் பதவிக்குப் போட்டியிட்ட போது எதிரி வெளியிட்ட துண்டுப் பிரசுரங்களை எதிர்த்து வா.தி.மா.வுடனிருந்து பல வழிகளில் அ.மு.ப. உதவி செய்து வந்தார். அதன் காரணமாகவோ என்னவோ 15 ஆண்டுகளுக்கு இவரும் அந்த மாவட்டக் கழக உறுப்பினர் பதவிக்குப் போட்டியிட்டு அதில் வெற்றியும் பெற்றார்.

1927இல் சென்னையில் அகில இந்தியக் காங்கிரஸ் மகாசபை நடந்தது. அதற்காக வா.தி.மா. தலைமையில் சீவகாருண்ய நாடகம் ஒன்று நடத்தப்பட்டது. அதில் மாடும், ஆடும், கோழியும், கொசுவும் கூட்டம் கூடித் தாம் மக்களுக்குச் செய்யும் நன்மைகளை விளக்கி, அத்தனை நன்மை பெறும் மனிதன் அவைகளுக்கு எந்தெந்த வகையில் இன்னல் செய்கிறான் என்பதைக் காட்டும். அதில் அ.மு.ப. பறவை முதலிய விலங்குகள் மாநாட்டிற்கு 'இடப'த் தேவராகத் தலைமை வகித்தார். இவ்வாறு அடிக்கடி நாடகத்திலும் பங்கு கொண்டு முக்கியக் கதாபாத்திரங்களை ஏற்று நடித்தும் வந்தார்.

## உயர் படிப்பு

வாலாஜாபாத்தில் எட்டாம் வகுப்பினை முடித்து விட்டு மேற்படிப்பிற்கு அருகில் உள்ள காஞ்சிபுரத்திற்குச் செல்ல வேண்டும்.

ஆனால் அ.மு.ப.வின் தாயார் படித்தது போதும், வெளியூர் எல்லாம் செல்ல வேண்டாம்; வெளியூர் சென்ற பிள்ளைகள் தவறான பாதையில் சென்று விடுவார்களாம் என்றும் கூறித் தடுத்துவிட்டார். பின்னர் அ.மு.ப. பலவகையில் எடுத்துக்கூறிப் பாட்டியும் என்னுடன் வந்து எனக்குத் துணையாக இருக்கட்டும் என்று கூற அதன் பிறகே ஒருவழியாகச் சம்மதம் தெரிவித்தார் அன்னை. இதற்கு முக்கியக்காரணமாக இருந்து அ.மு.ப. செங்கற்பட்டு சென்று படிக்கட்டும் என்று அன்னையிடம் எடுத்துக் கூறியவர் வா.தி.மா. எனவே அ.மு.ப.வின் இறுதிப் பள்ளிப்படிப்பு செங்கற்பட்டில் அமைந்தது.

## அன்னையின் அறிவுரை

அ.மு.ப.வின் ஒழுக்கமான நடவடிக்கைகளுக்கு அவரின் அன்னையே முழுக்காரணம் என்றால் அது மிகையாகாது. பிறர் பொருளுக்கு ஆசைப்படக் கூடாது என்றும் பிறருக்குச் செய்யும் உதவிக்குக் கைம்மாறு எதிர்பார்த்தல் கூடாது என்றும் அவ்வாறு பிரதிபலனை எதிர்பார்த்துச் செய்தால் அதற்காக நமக்குப் பலமடங்கு தீமை ஏற்படும் என்றும் தெளிவுறுத்தினார். மேலும் நாம் வேதனைப்பட்டும், ஒழுக்கமாகவும், நேர்மையாகவும் சம்பாதித்த பொருள் நம்மை விட்டுப் போகாது என்றும் அப்படி காணாது போனாலும் திரும்ப அது கிடைக்கும் என்றும் அறிவுறுத்தினார்.

அ.மு.ப. தமது அன்னை மனம் குளிருமாறும், பெருமிதம் கொள்ளுமாறும் பல நற்செயல்களைச் செய்தார்.

> "ஈன்ற பொழுதிற் பெரிதுவக்கும் தன்மகனைச்
> சான்றோன் எனக்கேட்ட தாய்"

என்ற குறளுக்கு இணங்க அ.மு.ப.வைப் பிறர் பாராட்டும் போதும் அவர் பரிசுகளும் பதக்கங்களும் கொண்டு வந்து அன்னையிடம் காட்டும் போதும் தாயார் உள்ளம் பூரித்துப் போயிற்று.

## ஊழியர் சங்கம்

நாட்டு மக்கள் நல் உணர்வு பெற்று எழுந்து விடுதலைக்குப் பணிபுரியும் அந்நாளில் தாங்களும் ஏதேனும் செய்ய வேண்டும் என நினைத்து, சென்னைக் கல்லூரியில் பயின்ற மாணவர்கள் அரசியலில் ஈடுபட்ட போது நடத்திய 'பித்தன்' என்ற பத்திரிகை இதழில் உறுப்பினராகச் சேர்ந்தார். அதில் கட்டுரைகளும் எழுதினார். பிறகு சிறிது காலத்தில் அதன் தலைவராகவும் மாறினார்.

ஊழியர் சங்கத்தில் இருந்து கொண்டு பல கிராமங்களுக்குச் சென்று, அங்கு மக்கள் உயர வேண்டிய வகை பற்றியும் தூய்மையாக இருக்க வேண்டிய நிலைபற்றியும், 'கள்' குடிக்க வேண்டாம் என்று எடுத்துக் கூறியும் பிரசாரம் செய்து வந்தார். 1938இல் அரசியலில் ஈடுபட்ட போது காங்கிரஸ் உறுப்பினராக இருந்தார். அன்று முதல் கதர் ஆடையையே அணிந்தும் வந்தார்.

## அரசியலில் ஏற்பட்ட விளைவு

இந்நாளில் அரசியலில் மாணவர்கள் ஈடுபடக்கூடாது என்ற சட்டம் இருப்பது போல அந்நாளிலும் அரசியலில் ஈடுபட்ட மாணவர்களுக்குத் தண்டனை வழங்கப்பட்டது. இருப்பினும் அ.மு.ப. பள்ளியில் படித்துக் கொண்டே காங்கிரஸ் உறுப்பினராகப் பணியாற்றினார். அதற்கான தண்டனையையும் பெற்றார். குடும்பத்தில் உள்ள ஆதரவற்ற சூழ்நிலையையும், பிறவற்றையும் மறந்து, நாட்டு விடுதலை ஒன்றையே முன்னிறுத்திப் படிப்பைக் கூட விட நினைத்து, ஓரளவு ஆசிரியர்கள் தந்த தண்டனைகளையும் ஏற்றுப் படித்தார்.

இவ்வாறு உயர்நிலைப் பள்ளியில் பயிலும் போதே அரசியல் அலைகளால் ஓரளவு மோதப்பட்டும், சமூகச் சீர்திருத்தப் பணியில் ஓர் அளவு இறங்கியும் தொண்டாற்றினார். அன்னைக்கும் பாட்டிக்கும் யாதொரு மனத்தாங்கலும் வைக்காது அவர்கள் மொழிப்படி நடந்தும் அவர் கல்விக்கு - பள்ளியில் பயின்ற கல்விக்கு - இளமையை முடிக்கும் கல்விக்கு முற்றுப்புள்ளி வைத்தார். 1931இல் பள்ளியிறுதி வகுப்பில் வெற்றியும் பெற்றார்.

## குடும்ப வாழ்வு

அ.மு.ப.வுக்குப் பதினேழாவது வயதில் முதற் திருமணம் நடைபெற்றது. அது சொத்துக்கு ஆசைப்பட்டு நடத்திய திருமணம் என்பதாலும், பெண்ணுக்கு வேறொருவரின் பால் மனஈடுபாடு இருந்தது என்பதாலும் அ.மு.ப. திருமணமாகியும் சந்நியாசி போலவே இருந்தார். இதனால் ஊரில் உள்ள பலர் இவரைக் கேலியும் கிண்டலும் செய்தனர். மாமியார் வீட்டு மக்கள் இவரைப் 'புற' மெனவே கருதிய நிலை, இவருக்கு உண்டி, குடும்ப வாழ்வு என்ற உணர்வையே அரும்பச் செய்யாது, படிப்பில் கவனம் செலுத்த வழிகாட்டியாக அமைந்தது. இவ்வாறு முதல் திருமணம் அவர் (மணப்பெண்) விருப்பமின்றி நடைபெற்றதால் சிறப்பாக அமையவில்லை.

## கல்லூரிப் படிப்பு

அ.மு.ப. அன்னை, அவர் மேலே படிக்கச் செல்லக் கூடாது என்று ஆணையிட்டு இருந்தபடியால் அவர் மனம் மிகவும் வேதனையடைந்தது. அச்சமயம் சிதம்பரத்திலிருந்து "பிரகாசானந்தா" என்ற துறவி மூலம் அ.மு.ப.வுக்கு மறுவாழ்வு கிடைத்தது. பள்ளியிறுதி வகுப்பில் அவர் அதிக மதிப்பெண்கள் எடுத்திருந்தும் மேலே படிக்க முடியாத நிலையை அறிந்த துறவி, அ.மு.ப. அன்னையிடம் பலவிதமாகப் பேசினார். மேலும் வீட்டில் இருந்து கொண்டே - அன்னையார் விருப்பத்தினை நிறைவேற்றிக் கொண்டே - படிக்க வாய்ப்பு உண்டு என்றார். அதற்குச் சிதம்பரம் பக்கத்தில் உள்ள கல்லூரியில் தேர்வு எழுத வேண்டும் என்றும் எடுத்துக்கூறினார். அதற்குப்பின் அண்ணாமலைப் பல்கலைக்கழகத்திற்கு எழுத வேண்டும் என்றும் தேவையானால் சிதம்பரத்தில் உள்ள தங்களின் "மௌனசுவாமிகள்" மடத்தில் தங்கலாம் என்றும் வழி காட்டினார். அன்னையும் அவரின் கருத்துக்கு ஒருவாறு உடன்பட்டார்.

## அண்ணாமலைப் பல்கலைக்கழகம்

நுழைவுத் தேர்வு எழுதி அதில் வெற்றி பெற்றாலும் கூட அ.மு.ப. அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் நேரடியாகவே படிக்கும்படி நேரிட்டது. ஆரம்பத்தில் மறுத்த அன்னை பிறகு கண்ணீருடன் விடை கொடுக்க, அ.மு.ப. அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் வித்துவான் முதல் நிலை வகுப்பில் சேர்த்துக் கொள்ளப்பட்டார். தினந்தோறும் சிதம்பரம் மௌன சுவாமிகள் மடத்திலிருந்தே கல்லூரிக்குச் சென்று வந்தார். மடத்து அடிகளாகிய அருள்திரு சபாபதி சுவாமிகளும், அவருக்கு அண்ணலாரும் மடத்து நிர்வாகத்தைக் கவனித்துக் கொண்டு வந்தவருமான திரு. கோவிந்தசாமியும் அ.மு.ப. மீது அக்கறை காட்டி ஆதரித்தனர்.

அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் தமிழ் பயிலுவோருக்கு உதவித்தொகை முதலாண்டுக்கு 12 (அ) 13 ரூபாய் வழங்கப்பட்டது. மடத்தில் தங்கிய காலத்தில் இந்த உதவித்தொகை பன்னிரண்டில் மாதச் செலவு போக மிகுதியாவதைச் சேர்த்து வைத்து, அன்னை தன்னைக் காண வந்த போது அவர் கைகளில் வழங்கி ஆசி பெற, அந்தத் தாயின் கண்கள் கண்ணீரில் மூழ்கின என்று சொன்னால் மிகையாகாது.

## தமிழில் ஈடுபாடு

அ.மு.ப. அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் பயின்ற காலத்தில் தமிழ்ப் பேராசிரியர் அனைவருடனும் நன்கு கலந்து பழகினார்.

இவர் பயிலத் தொடங்கிய முதலாண்டில் விபுலானந்த அடிகளார் தமிழ்த்துறைத் தலைவராக இருந்தார். அவருக்குப் பின் இருந்த ஒவ்வொரு பேராசிரியரும் சிறந்த கல்வி அறிவும் தெளிந்த சிந்தையும் செம்மை ஒழுக்கமும் பெற்றவர்களாகத் திகழ்ந்தனர். அ.மு.ப. திருக்குறளிலும், கம்பனிலும் மூழ்கக் காரணமாக இருந்தவர் ரா.பி. சேதுப்பிள்ளை.

இரண்டாமாண்டு, அ.மு.ப. தமிழ்ச் செயலாளராக இருந்த போது, "காக்கா பிடித்தல் கற்றறிந்தோர்க் காகாது" என்ற பொருளைக் கொண்டு நடத்திய சொற்போர் போட்டியில் ரா.பி. சேதுப்பிள்ளை முன் மொழிபவராக இருந்தார். அ.மு.ப. கல்வி வளர்ச்சியில் அவர் மிகுந்த அக்கறையும் காட்டினார்.

## இலக்கியத்தில் ஈடுபாடு

சர்க்கரைப் புலவர் என்ற முதுபெரும் புலவர் சிறந்த இலக்கிய விமர்சகராக இருந்ததாலும், எல்லாத் தமிழ்ப் பாடல்களும் அவர் உள்ளத்திலிருந்து உதட்டில் உருண்டோடிவரும் பாங்கினாலும், புராண இதிகாச இலக்கியங்களைப் பல நுணுக்கங்களோடு அவர் நடத்தியதாலும் அவரிடம் பயின்றபான்மை அமுப.வை இலக்கியத்தில் ஈடுபாடு கொள்ள வைத்தது.

"பொன் ஓதுவார் ஓர் இலக்கணக்கடல்" என்று சொன்னால் "கந்தசாமியார் மற்றொரு இலக்கணக் கடல்." மேலும் சிவப்பிரகாசர், கலியாணசுந்தரம் பிள்ளை, பலராமையா, பழநியப்பப்பிள்ளை போன்ற நல்ல அறிஞர்களின் ஆசியால் அ.மு.ப. "தமிழாசிரியன்" என்று சொல்லிக் கொள்ளும் தகுதியைப் பெற்றார்.

இரண்டாம் ஆண்டு பயின்ற போது அ.மு.ப. அண்ணாமலைப் பல்கலைக்கழகத் தமிழ்ப் பேரவையின் அமைச்சராகப் பணியாற்றினார். இதற்கு அ. சிதம்பரநாதனார் தலைவர். இதன் கூட்டங்களில் பேராசிரியர்கள் பாரதியார், சேதுப்பிள்ளை, வரலாற்றுப் பேராசிரியர் சீனிவாசாச்சாரியார் போன்றவர்களும் பிறதுறை வரலாற்றுப் பேராசிரியர்களும் கலந்து கொண்டு இவரை ஊக்குவித்தனர்.

மேலும் முதிர்ந்தோரான - அறிவில் சிறந்த ஆறுமுக முதலியார், ஏ.சி. செட்டியார் ஆகியோருடன் நெருங்கிப் பழகி அவர்தம் அறிவுரைகளையும் பெற்றார்.

## படிப்பை இடையில் விடல்

பல்கலைக்கழகத்துக்குப் படிக்கச் சென்ற அ.மு.ப. நான்காண்டுகள் படித்து முடிக்காது, இடையிலே இரண்டாண்டில் வந்து

விட்டார். ஓர் ஆய்வுப் பொருளின் காரணமாக - கொள்கை விளக்க அடிப்படையில் இவருக்கும் இவரின் ஆசிரியர் கந்தசாமியாருக்கும் மாறுபாடு ஏற்பட்டது. இதன் காரணமாக அ.மு.ப. கல்லூரியை விட்டு நின்று விடத் தீர்மானித்தார். இருப்பினும் துறைத்தலைவர் பாரதியாருக்கும் இந்தச் செய்தி எட்டியது. துணைவேந்தர் சர்.எஸ்.இ. அரங்கநாதனுடன் கலந்து பேசி, இடையில் நின்றாலும் கூடத் தேர்வு எழுத அனுமதித்தார்.

தேர்வும் சிறப்பாக எழுதி அதில் வகுப்பில் முதல் மாணவனாக வெற்றி பெற்றார். இருப்பினும் அ.மு.ப. மேற்கொண்டு படிக்கச் செல்லவில்லை. இரண்டாண்டுகளுக்குப் பிறகு திருவண்ணாமலையில் சைவசித்தாந்த சமாச ஆண்டு விழா நடைபெற்றது. அதற்குத் தலைவர் விபுலானந்த அடிகளார். பாரதியார் சொற்பொழிவும் இருந்தது. அ.மு.ப. அக்கூட்டத்திற்குச் சென்ற போது அவர்கள் இருவரும் இவரை அழைத்து 'வீரன்' என்று பெயர் சூட்டினர்.

அ.மு.ப. அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் வெறும் ஏட்டுப் படிப்பினை மட்டும் பயிலாது வாழ்வின் அடிப்படைக்குத் தேவையான எண்ணற்ற பாடங்களையும் படித்தார். இவ்வாறு அ.மு.ப. அவர்கள் பல்கலைக்கழகத்தினை விட்டு இடையில் நீங்கிய போதும் அவரிடமிருந்த அன்பும் பாசமும் குறையாது அனைத்துப் பேராசிரியர்களும், புகழ்ந்து போற்றியதற்குக் காரணம் அவரின் சீரிய ஒழுக்கமும், படிப்பில் இருந்த ஆர்வமும், தமிழ் மீது கொண்ட பற்றுமே முக்கியக் காரணம் என்று சொல்லலாம்.

## பள்ளிப் பணி

அ.மு.ப. ஆசிரியனாகும் வாய்ப்பு வா.தி.மா. மூலம் அவர் படித்த வாலாஜாபாத் இந்து மதப் பாடசாலைப் பள்ளியிலேயே அமைந்தது. தமிழ், கணக்கு இன்னும் பிற வகுப்புகளும் நடத்தும் வாய்ப்பும் கிடைத்தது. அன்று தொடங்கிய ஆசிரியப் பணியே அவரை மெல்ல மெல்ல வளர வைத்து, பல்கலைக்கழகப் பேராசிரியராக்கிச் சிறக்கச் செய்தது. இத்தகைய வளர்ச்சிக்குக் காரணமாக இருந்த இந்துமதப் பாடசாலையில் இவரது ஆசிரியப்பணி ஓராண்டு மட்டுமே நிலை பெற்றது.

## திரு. வி.க. சந்திப்பு

அ.மு.ப. நண்பர்களில் ஒருவரான, காஞ்சிபுரம் குமரன் அச்சக உரிமையாளர் தவசி. குப்புசாமி முதலியார், புதிய கட்டடத்திற்குத் தம்

அச்சகத்தை மாற்றும் விழாவில் அவருக்கு முக்கியப்பணி கொடுத்திருந்தார். அன்று தான் இவருக்குத் திரு. வி.க.வைச் சந்தித்துப் பேசிப் பழகும் வாய்ப்புக் கிட்டியது. திரு. வி.க. அ.மு.ப.விடம் படிப்பை விடாது தொடர வேண்டும் என்றும் அது மேன்மேலும் அவரை வளரச் செய்யும் என்றும் அறிவுறுத்தினார்.

அதே சமயத்தில் அ.மு.ப. சென்னைப் பல்கலைக்கழகத்தில் தனியாகச் சென்று படித்து உயர்ந்தார். மேலும் ஐதராபாத் உஸ்மானியப் பல்கலைக்கழகப் பேராசிரியராகத் தமிழக அரசாங்கம் அவரை அனுப்பியது. அங்கே அவரை வரவேற்று விருந்தளித்த பல பெரியவர்களின் அறிமுகமும் பெற்றார்.

## துறவு வாழ்க்கை

இவ்வளவு சிறப்புப் பெற்ற அ.மு.ப. மண வாழ்வு மிகவும் மோசமாக இருந்ததின் காரணமாக அவரின் அன்னையும், உடன் பணியாற்றியவர்களும் மறுமணம் செய்து கொள்ள வற்புறுத்தினர். அதற்கு மனம் ஒன்றாத அ.மு.ப. ஒருநாள் 'துறவு' மேற்கொண்டு திருத்தணிகை சென்றார். இருப்பினும் அங்குச் சென்றபிறகு இறைவன் அருளால் மனம்மாறி மீண்டும் இல்லம் திரும்பினார்.

இதன் பிறகு சென்னையில் வித்துவான் தேர்வு எழுதி அதில் வெற்றியும் கண்டார்.

## காஞ்சியில் வாழ்வின் தொடக்கம்

பெரும்பாணாற்றுப் படையும், மணிமேகலையும் பிற பிற்கால இலக்கியங்களும் புகழ்பாடும் காஞ்சியில் உள்ள "ஆண்டர்சன் உயர்நிலைப் பள்ளி"யில் தமிழாசிரியர் பொறுப்பு ஏற்றார். அதிலும் சிக்கல் ஏற்பட்டது. அச்சமயத்தில் இந்து மதப் பாடசாலையில் இருந்து அ.மு.ப.வுக்கு அழைப்பு வந்தது. தலைமை ஆசிரியர் 'ஜோசப்' என்பவர் 'அவன் என் மாணவன், அவனை நானே எடுத்துக் கொள்வேன்' என வாதிட்டார். அதே சமயத்தில் 'ஆண்டர்சன் பள்ளியின் தலைமையாசிரியர் ஞானாதிக்கம் 'அவன் என் வட்டத்தைச் சேர்ந்தவன், மேலும் நான்தான் அவனை வரவழைத்து எல்லா ஏற்பாடும் செய்தவன், எனவே நான் விடமாட்டேன்' என்று கூற, சுமார் 15 நிமிட வாக்குவாதத்தின் பிறகு ஞானாதிக்கமே வெற்றி பெற்றார்.

அதன்பிறகு அ.மு.ப. தினமும் பள்ளிக்குக் கோட்டும் சூட்டும் 'கிராப்' தலையுமாகச் செல்வதைக் கண்ட ஊரார் அனைவரும் வியந்து பார்த்தனர். அவருடன் பணிபுரியும் ஆசிரியர்களும் அவரைப் பாராட்டினர்.

காஞ்சியில் அ.மு.ப.வின் உள்ளம் கவர்ந்தவர்களுள் விசுவநாத ஐயர், ஆத்மானந்த அடிகளார் போன்றவர்கள் குறிப்பிடத் தக்கவர்கள்.

## காஞ்சியில் மறுமணம்

பலரின் வற்புறுத்தலுக்கு இணங்க, தன் அன்னையின் உறவினர் மகளையே மணமுடிக்க முன்வந்தார். பழங்கால மணமுறைப்படி அ.மு.ப. திருமணம் நடைபெற்றது. 'நலுங்'கின் போது மணப்பெண், அ.மு.ப. கன்னத்தில் அப்பளத்தைக் கொண்டு ஓங்கி அறைந்து விட்டார். அதன் காரணத்தைப் பின்னர் அப்பெண்ணிடம் கேட்டபோது, முன்னரே அவள் பெற்றோர் அவருக்கு அப்பெண்ணைக் கொடுக்க இசைந்ததாகவும் அவளும் மனமுவந்ததாகவும், ஆனால் அவர் வேறு திசையில் சென்றதால் உண்டாகிய கோபமே அந்தச் செயலாக உருவெடுத்ததெனக் கூறி மன்னிப்பும் வேண்டினார். அவர்தான் அன்புள்ளம் கொண்ட 'சந்திராமணி' ஆவார்.

## கம்பன் வீட்டில் இல்லற வாழ்வு

அ.மு.ப.வின் இல்லற வாழ்வு காஞ்சி அரச வீதியில் உள்ள ஒரு வீட்டில் தொடங்கியது. அந்த வீட்டின் சிறப்பு 'கச்சி உலா'வில் கூறப்பட்டுள்ளது. இறைவன் வீதி உலா வருகின்ற பொழுது ஏகம்பன் மாட வீதிகள் மூன்றைக் கடந்து பின், கச்ச பாலயம் கடந்து, கம்பன் வீடுதாண்டி, குமரக்கோட்டம் தாண்டிச் சென்றதாகக் குறிக்கப்பட்டுள்ளது. ஆகவே கம்பன் வீடு காஞ்சிபுரம் அரசவீதியில் கச்சபாலயத்துக்கும் குமரக்கோட்டத்துக்கும் இடையில் இருந்தது. தெருவின் மேலண்டை வாடையில் உயர்ந்து வளர்ந்த வேப்பமரத்தின் அடியில் கலைமகளும் வீற்றிருப்பாள். அதுதான் அ.மு.ப. இல்லறம் நடத்தச் சென்ற வீடு ஆகும்.

காஞ்சியில் ஒரு சில ஆண்டுகளே அ.மு.ப. பணியாற்றினாலும் பல நண்பர்கள் அவருக்குக் கிடைத்தனர். அவர்களுள் பச்சையப்பர் உயர்நிலைப் பள்ளியில் பணியாற்றிய துரைசாமி ஐயர், பரமசிவ முதலியார், அவர் மகன் கலியாண சுந்தரனார், கச்ச பாலய முதலியார், தேவராச முதலியார், இராசம் செட்டி & சன்ஸ் போன்றவர்கள் குறிப்பிடத் தக்கவர்கள் ஆவர்.

## இந்தி எதிர்ப்பு

அ.மு.ப. காஞ்சியில் வாழ்க்கை நடத்திக் கொண்டிருந்த போது, தேர்தல் கொந்தளிப்பு நடைபெற்றுக் கொண்டிருந்தது. காங்கிரஸ்

பெருவெற்றி பெற்றுக் கொண்டிருந்தது. அப்போது தமிழகத்தில் ச. இராசகோபாலாச்சாரியார் முதலமைச்சர் பொறுப்பு ஏற்றார். இந்தி பயின்றால் சிறப்பு - ஆங்கிலத்தில் பேசினால் சிறப்பு என்று கூறி அனைவரும் இந்தி பயில வேண்டுமென்று கூறினார். இதன் காரணமாக அ.மு.ப. இந்தி எதிர்ப்புக் கூட்டங்களில் கலந்து கொண்டு பேசினார். பல கூட்டங்களில் தலைவராகவும் இருந்தார். இதன் காரணமாக அரசியல் சூழலில் சிக்கிய அ.மு.ப. வெற்றியும் பெற்றார். காங்கிரஸ் சார்பாகவே இருந்து கொண்டு பிரச்சாரம் செய்தார்.

இதன் காரணமாகப் பலரின் வெறுப்புக்கு ஆளாகினார். இருப்பினும் இவருக்கு உறுதுணையாகக் காளப்பர், இராசகோபால் முதலியார், மாகறல் முதலியார், இளையனார் வேலூர் சின்னசாமி முதலியார், நடேச முதலியார், காவாந்தண்டலம் பச்சையப்ப முதலியார், வாடாதவூர் மலைக் கொழுந்து முதலியார், அவளூர் துரைசாமி நாயகர், பேரறிஞர் அண்ணா, சட்டமன்றத் தலைவராக இருந்த புலவர் கோவிந்தன் போன்ற பல அன்பர்களும், உடன் இருந்து உதவினார்கள்.

இருப்பினும் அ.மு.ப. அதன் பிறகு தேர்தலில் ஈடுபடக்கூடாது என்று திட்டமான முடிவினை எடுத்தார். அதில் இறுதி வரை உறுதியாகவும் இருந்து வந்தார். இருப்பினும் அவரின் செயலைக் கண்டு, அரசாங்கமே கவர்னர் நியமனமாகப் பல்கலைக்கழக அறிஞர்குழு உறுப்பினராக மூன்று முறையாக, ஒன்பது ஆண்டுக்கு நியமித்தது.

## சொற்பொழிவுக் கூட்டங்கள்

அ.மு.ப. அரசியலிலும், மொழிப்போரிலும் சிக்கிக் கொண்டிருந்த போது, சமய இயலும் அவர் வாழ்வில் இடம் பிடித்தது. அதன் காரணமாகச் சைவ சித்தாந்த மகாசபைக் கூட்டங்களுக்குத் தவறாது சென்று வந்தார். அத்துடன் வெளியூர் திருக்கோயில் விழாக்களில் நடைபெறும் சொற்பொழிவுகளிலும் பங்கு கொண்டார். திருச்செந்தூர் சென்று சொற்பொழிவுகளும் ஆற்றினார். மேலும் கோவையில் நடைபெற்ற சமய மாநாடுகளுக்கும் சென்று வந்தார்.

## தமிழ்க்கலை அச்சகம்

தம் நண்பர்களான காளப்பர், இராசகோபால் ஆகியோருடன் அ.மு.ப. இணைந்து ‘தமிழ்க்கலை அச்சகம்’ என்ற அச்சகத்தைத் தொடங்கினார்கள். அதற்கு முன்னரே அ.மு.ப. ‘தமிழ்க்கலை’ என்ற இதழை நடத்தி வந்தார். எனவே தமிழ்க்கலை நாட்டிற்கும் மொழிக்கும் நல்ல சேவை செய்தது. அது போலவே ‘தமிழ்க்கலை அச்சகமும்’ நன்கு

பொது மக்களுக்கு உதவிற்று. இதற்குத் தவசி குப்புசாமி முதலியார் உறுதுணையாக நின்றார்.

## அன்னையின் பிரிவு

இதற்கிடையில் அ.மு.ப.வின் மனைவியர் இருவரும் கருவுற்றனர். முதல் மனைவிக்கு ஆண் மகவும், இரண்டாமவர்க்குப் பெண் மகவும் பிறந்தனர். ஆனால் முதல் மனைவியையும், மகனையும் பார்க்க முடியவில்லை. மகனுக்கு 'மயில்வாகனன்' எனவும், மகளுக்கு 'மங்கையர்க்கரசி' எனவும் பெயர் சூட்டினார். ஆனால் 'மயில்வாகனன்' மூன்று திங்களில் நோய்வாய்ப்பட்டு இறந்து போனான். அதற்கு முன்னரே அ.மு.ப.வைப் பாசத்துடனும், நேர்மையுடனும், ஒழுக்கத்துடனும் வளர்த்தி நல்வழிப்படுத்திய 'வள்ளியம்மை' ஒரு தைத்திங்களில் காலமானார். அந்தத் துயர நிகழ்ச்சியைத் தாங்க இயலாத அ.மு.ப.வின் சோகநிலையைச் சொல்ல வார்த்தைகளில்லை.

## உலகப் போர் பற்றிய ஆய்வு

உலகம் என்றும் அமைதியில் வாழ்ந்ததில்லை. இனி வாழவும் போவதில்லை. உயிரினம் தோன்றிய நாள் தொட்டு ஒன்றை ஒன்று விழுங்கப் பார்க்கும் போராட்டம் நடைபெற்றுக் கொண்டேதான் இருக்கிறது. அதன் காரணமாகவே மனிதன் ஒரு தலைமுறையிலேயே பல போர்களை உண்டாக்கிச் செத்து மடிகிறான். 1939ஆம் ஆண்டு உலகப் போர் மூண்ட போது அ.மு.ப. தமிழ்க்கலையில் அப்போர் மூள வேண்டிய சூழ்நிலை, காலம், இயற்கை நிலை, நினைத்தால் தடுத்திருக்கக் கூடிய வாய்ப்பு எல்லாவற்றையும் விளக்கி எழுதினார்.

அதுபோலவே நம் நாட்டில் அன்று நடைபெற்ற எல்லாப் போராட்டங்களிலும் மேற்கொள்ள வேண்டிய முறை - எல்லை - காரணம் ஆகியவற்றை ஆராய்ந்து புள்ளி விவரங்களோடு வெளியிட்டார். அத்தகைய கட்டுரையைப் படித்து விட்டுப் பலரும் அ.மு.ப.வுக்குப் பாராட்டுக் கடிதங்கள் எழுதி அனுப்பினார்கள்.

உலகப் போரின் நிலை பற்றியும் அதில் நம்நாடு கலந்து கொள்ள வேண்டிய தேவை பற்றியும் நம் நாட்டு மக்கள் பொன்னாலும், பொருளாலும், மக்களாலும் பிற தியாகங்களாலும் எவ்வெவ்வாறு உதவ வேண்டும் என்பது பற்றியும் விளக்கமாகப் பல சொற்பொழிவுக் கூட்டங்களில் எடுத்துக் கூறினார்.

## 'இராவ் சாகிப்' பட்டம்

அ.மு.ப. உலகப் போரினைப் பற்றிச் செய்த ஆய்வினையும் ஆற்றிய சொற்பொழிவுகளையும் அறிந்த ஆங்கில அரசு அவருக்கு 'இராவ்சாகிப்' என்ற கௌரவப் பட்டத்தை அளிக்க முன் வந்தது. இருப்பினும் எந்தவிதப் பதவிக்கும், பட்டத்திற்கும் ஆசைப்படாத அ.மு.ப. அந்தப் பட்டத்தினைக் கௌரவமாக மறுத்து விட்டார். இதனால் பலரும் அவரைக் கடிந்து கொண்டார்கள். ஆனால் எதற்கும் செவிகொடாத அ.மு.ப. எப்போதும் போல அன்னைத் தமிழுக்கும் நாட்டுக்கும் சமுதாயத்துக்கும் அவரால் ஆன பணிகளைச் செய்து கொண்டு காலம் கழித்து வந்தார்.

## ஆங்கில ஆர்வம்

போரின் காரணமாகத் தாள் தட்டுப்பாடு உண்டாகத் தமிழ்க்கலை வெளியீடும் நிறுத்தப்பெற்றது. எனினும் நேரத்தை வீணாக்க விரும்பாத அ.மு.ப. மேலே படிக்க எண்ணினார். 1942இல் இது நிகழ்ந்தது. அதன்பிறகு சில ஆண்டுகள் கழித்து ஆங்கிலம் பயில வேண்டிய சூழ்நிலை ஏற்பட்டதால் அதில் தேர்வுகள் எழுதி வெற்றியும் பெற்றார்.

பிறகு 'பி.ஓ.எல்' படிக்க விரும்பி அதற்குண்டான ஆங்கிலப் பாடங்களை மினர்வா கல்லூரியில் பயின்று அந்தத் தேர்விலும் வெற்றி கண்டார். இதற்கிடையில் போரின் தீவிரம் அதிகரித்துக் கொண்டே சென்றதால் அ.மு.ப. தம் பணிகளுக்கிடையில் போர் அமைதிப் பணிக்கும் ஆவன செய்து கொண்டே வந்தார்.

## கிறித்துவ சமயத்தில் ஈடுபாடு

அ.மு.ப. காஞ்சி நகரில் வாழ்ந்த காலத்தில் சமய வாழ்வில் மிகுந்த ஈடுபாடு பெற்றார். சமய நெறி போற்றும் கிறித்துவப் பள்ளியில் பணியாற்றியதும் அதன் காரணம் என்று கூடக் கூறலாம். கிறித்துவ நூல்கள் பலவற்றைப் படித்தார். காஞ்சியில் பணியேற்ற பிறகு சமய நூல்களை மிகவும் விரும்பிப் படித்தார். சிலவற்றைப் படித்துவிட்டுக் கிறித்துவ ஆசிரியர்களிடம் வாதிடவும் செய்தார்.

இதன் காரணமாகக் கிறித்துவப் பணியாற்றிய 'மக்ளின்' தம்பதியர், அதன் பிறகு வந்த 'நியுபிகின்' போன்றோர் நெருங்கிய நண்பர்களானார்கள். இதில் 'நியுபிகின்' தமிழில் ஈடுபாடு கொண்டு அ.மு.ப.விடம் விரைவில் தமிழ் கற்று, சமயக் கூட்டங்களில் தமிழிலும் பேசினார். இவர்களோடு பழகியதன் காரணமாக அ.மு.ப. அடிக்கடி

கிறித்துவக் கோயிலுக்குச் செல்லுதல் அதிகமாயிற்று. இயேசுவின் புகழ்பாடித் தமது 'தமிழ்க்கலை'யில் பத்துப்பாடல்களையும் வெளியிட்டார். அதே போன்று 'பாட்சா' என்ற முகமதியரும், நாத்திகவாத தேவராச முதலியாரும் மிக நெருக்கமானார்கள்.

இப்படிப் பல சமயநெறிகளில் ஈடுபட்டிருந்தாலும் அவைகளுக்கிடையில் அ.மு.ப. சைவசமய ஒழுக்கத்திலிருந்து சிறிதும் வழுவாமல் இருந்தது வியப்புக்குரிய ஒன்றாகும்.

## மெய்கண்டார் பிறப்பு

இதற்கிடையில் மங்கையர்க்கரசி பிறந்து மூன்று ஆண்டுகள் ஆகியிருந்த நிலையில் ஆண்மகவு இல்லையே என்ற நிலையைப் போக்க, சீர்காழியில் உள்ள முக்குளநீர் தோய்ந்து, கயிறுசாத்தி வேண்டிக் கொள்ள, 'சந்திராமணி' கருவுற்றார். பத்தாம் மாதம் அழகிய ஆண்மகவு ஒன்று பிறந்தது. அதற்கு 'மெய்கண்டான்' எனப் பெயர் சூட்டினார். இவரின் செயலைக் கண்டு ஆரம்பத்தில் கேலி செய்த தேவராஜ முதலியார் போன்றவர்களும் வியந்தனர் என்று சொன்னால் அது மிகையாகாது.

## காஞ்சி வாழ்க்கையின் நிறைவு

அ.மு.ப. காஞ்சியில் எட்டு ஆண்டுகளே வாழ்ந்திருந்த போதிலும், அந்த எட்டு ஆண்டுக் காலம் அவர் வாழ்வில் எதிர்பாராத வகையில் பலப்பல அனுபவங்களையும், வாழ்வின் சூழல்களையும் பெற அவருக்கு உதவியது எனலாம். இளமைப் பருவம் கடந்து காளைப் பருவமாகக் கழிந்த அந்த எட்டு ஆண்டுகளில் அவர் காஞ்சியில் நல்லவரோடு பழகிய நலம் பெற்றிராவிடின், அவர் பிற்காலம் எப்படி அமைந்திருக்கும் எனச் சொல்ல முடியாது. கிராமங்களிலிருந்து காஞ்சிபுரத்திற்கு அக்காலத்தில் படிப்பிற்காகவும் பிற செயல்களுக்காகவும் வந்த அவர் உறவினர் சிலர் நிலைகெட்டதால் அவர் அன்னையார் அவரைக் காஞ்சிபுரம் அனுப்பவே அஞ்சினார். அவர் அச்சத்தைப் போக்கும் வகையில் அ.மு.ப. எச்சரிக்கையுடன் நடந்து கொண்டு, நல்ல பெயருடன் காஞ்சியைக் கடந்து சென்னை வந்து சேர்ந்தார்.

## சென்னை வாழ்க்கையின் தொடக்கம்

சென்னை வாழ்க்கை இன்பமான நிலையிலேயே தொடங்கப்பெற்றது என்றாலும் கூட, 1944 போர் நடைபெற்றுக் கொண்டிருந்த காலம். எனவே அ.மு.ப. சென்னையில் கால் வைத்த போது இடநெருக்கடி உண்டாகியிருந்தது.

"சுழன்றும் ஏர்ப்பின்னது உலகம் அதனால்
உழன்றும் உழவே தலை"

என்ற எண்ணமே அவர் உள்ளத்தில் குடி கொண்டிருந்தாலும் சென்னையில் மிகப் பழைய பச்சையப்பன் கல்லூரியில் தமிழாசிரியர் பதவி பற்றிய விளம்பரம் வந்தது. இவரும் ஒரு விண்ணப்பம் அனுப்பினார். ஒருவருக்கு என விளம்பரம் செய்திருந்த போதிலும் மூவர் அதற்கெனத் தேர்ந்தெடுக்கப் பெற்றனர். அ.ச. ஞானசம்பந்தம், க. அன்பழகன், அ.மு.ப. ஆகிய மூவரும் 1944 ஜூன் இறுதி வாரத்தில் ஒருவர்பின் ஒருவராகத் தமிழ்த்துறையில் விரிவுரையாளராகச் சேர்ந்தார்கள்.

இதன் காரணமாகப் புலவர் அன்புகணபதி, மு. வரதராசனார், மொ.அ. துரை அரங்கனார் போன்ற பெருமக்களோடு கலந்து பணியாற்றும் பேற்றினைப் பெற்றார்.

## வள்ளியம்மாள் கல்விக்கூடம்

இதற்கிடையில் மறைந்த அன்னைக்கு நிலைத்த நினைவாக ஏதேனும் கல்வி, கைத்தொழில் பற்றிய நிலையம் ஒன்றைத் தொடங்க வேண்டுமென்ற எண்ணம், மறைந்த தினத்திலிருந்து அவர் உள்ளத்தில் ஊசலாடிக் கொண்டு இருந்தமையால் சென்னையில் "வள்ளியம்மாள் கல்விக் கூடத்தை" 1968இல் தொடங்கினார்.

## பச்சையப்பனில்

1944ஜூன் 27ஆம் தேதி சென்னை பச்சையப்பன் கல்லூரியில் விரிவுரையாளராகப் பணி ஏற்றார். அன்று கல்லூரி முதல்வர் பி.வி. நாராயணசாமி நாயுடு, துறை முதல்வர் மோசூர் கந்தசாமி முதலியார் அத்துறையில் இருந்த மு. வரதராசனார் ஆகியோரும் மற்றவர்களும் அன்புடன் வரவேற்றனர். அ.மு.ப. சென்னை வாழ்வு இவ்வாறு தொடங்கியது.

## எம்.லிட். ஆய்வுப் பட்டம்

பச்சையப்பனில் தமிழாசிரியராகப் பணியாற்றிக் கொண்டே 'தேவாரத்தில் வரலாற்று ஆய்வு' என்ற ஆய்வினைச் செய்து எம்.லிட், ஆய்வுப் பட்டத்திற்கான தேர்வினை எழுதிப் பட்டமும் பெற்றார். இதற்கு மூலகாரணமாக இருந்தவர் ரா.பி. சேதுப்பிள்ளை. 1961இல் துறைத்தலைவராகப் பொறுப்பேற்றார். இடையில் 1958-59இல் மதுரைப் பல்கலைக்கழகம் தொடங்குவதற்கு முன்னோடியாக, சென்னைப்

பல்கலைக்கழகச் சார்பில் அங்கே முதுகலை தொடங்கப் பெற்ற தியாகராசர் கல்லூரியில் துறைத் தலைவராகச் சேர்ந்தார். பின்பு 1966-67இல் தமிழக அரசின் சார்பில் ஐதராபாத் உஸ்மானியப் பல்கலைக்கழகத்தின் துறைத்தலைவராக ஓராண்டுக் காலம் பணியாற்றினார்.

## பச்சையப்பனில் முப்பது ஆண்டு அனுபவங்கள்

1944 முதல் 1961இல் தமிழ்த்துறைத் தலைமைப் பொறுப்பேற்ற பின்னும் மாணவர்களை வெறும் படிப்பில் மட்டுமின்றி, பேச்சு, நடிப்பு ஆகியவற்றிலும் சிறந்தவராக்க முயன்று கொண்டிருந்தார். அதன் பிறகு நாட்டு ஒருமைப்பாட்டு மாநாட்டிற்கும் சென்று வந்தார்.

1965இல் கல்லூரியின் துணை முதல்வர் பொறுப்பு அவருக்குக் கிட்டிய போது அந்தப் பொறுப்பு தனக்கு வேண்டாம் என்றும் தாம் அமைதியாகப் பணியாற்றவே விரும்புவதாகவும் கூறி அப்பொறுப்பினை மறுத்து விட்டார். ஆனால் அண்ணா முதல்வரானபின் அவர் சொல்லைத் தட்டாமல் துணை முதல்வராகவும் பணியாற்றினார்.

இதற்கு இடையில் 1947இல் வாலாஜாபாத்தில் உயர்நிலைப் பள்ளிக்குழு அமைத்து, அதன் செயலாளராக இந்து உயர்நிலைப் பள்ளியினைத் தொடங்கினார். மேலும் 1955இல் ஷெனாய் நகரில் செயலாளராக இருந்து 'திரு. வி.க. பள்ளி'யையும் தொடங்கினார்.

1944 முதல் 1976 வரை முப்பது ஆண்டுகள் தொடர்ந்து பச்சையப்பன் கல்லூரியிலேயே பணியாற்றினார். அக்காலத்தில் துறைக்கெனத் தனி நூலகம் ஒன்றினையும், புது அலமாரிகளும், பல புதிய நூல்களும், வாங்கித் துறைக்கெனத் தனி நூல்நிலையம் கண்டார். மேலும் தட்டச்சுக்கென, ஆங்கிலத்திலும், தமிழிலும் ஒவ்வோர் இயந்திரமும் வாங்கினார்.

பணியாற்றிய காலத்தில் பல்வேறு பொறுப்புகளையும் ஏற்றுக் கொண்டார். துணை முதல்வரான பிறகு சில பொறுப்புகள் தனியாக விடப்பட்டன. அதற்கு முன்னர்ச் சில ஆண்டுகள் நூல்நிலையப் பொறுப்பும், சில ஆண்டுகள் கூட்டுறவுப் பண்டகசாலைப் பொறுப்பும், சில ஆண்டுகள் விளையாட்டுக் குழாம் பொறுப்பும் ஏற்றுச் சிறப்புடன் செயலாற்றினார்.

## மதுரைக்கு இடப்பெயர்வு

அ.மு.ப.வின் ஆருயிர் துணைவியார் 1958 சனவரி மாதம் காலமானார். மதுரையில் பல முதுநிலை வகுப்புகள் 1958இல் தொடங்கத்

திட்டமிடப்பட்டன. அந்த அடிப்படையில் மதுரைத் தியாகராசர் கல்லூரியில் தமிழ் முதுகலை வகுப்பு தொடங்கினர். அப்போதைய விதிப்படி, அதற்குமுன் சில ஆண்டுகளாயினும் முதுகலை ஆசிரியராயிருந்தவர் ஒருவர் ஆசிரியர் குழுவில் இருந்தால்தான் அந்த முதுகலை வகுப்பு தொடங்க இயலும். இதனால் முதல்வர் இராமநாதப் பிள்ளை, அ.மு.ப.விடம் ஓராண்டாவது வந்து வகுப்பினை நடத்தியாக வேண்டுமென வற்புறுத்த, இசைந்தார்.

மதுரை வாழ்வு தாயின் கருவில் தங்கும் குழந்தையின் வாழ்வாகப் பத்து மாதங்களே அமைந்த ஒன்றாயினும் அ.மு.ப. அங்கே பெற்ற வாழ்க்கை அனுபவங்கள் பலப்பல. சொற்பொழிவுகள் பல ஆற்றியுள்ளார். மதுரை திருவள்ளுவர் கழகத்திற்காகப் 'பத்துப்பாட்டி'னைத் தொடராகச் சொற்பொழிவாற்றினார். மேலும் மதுரையில் இருந்த காலத்தில் தான் பம்பாய் தமிழ்ச் சங்கத்தாரால் அவர்தம் பாரதிவிழாவில் பேச அழைக்கப் பெற்றார்.

மேலும் "தமிழகப் புலவர் குழு" உருவான போது அதில் உறுப்பினராகவும் இருந்தார். தமிழ் நாட்டுக் கோயில்களின் புகழை, ஆங்கிலேயர்கள் அறிய வேண்டும் என்ற நோக்கத்துடன் "Ancient Temples of Tamil Nadu" என்ற நூலை வெளியிட்டார்.

இவ்வாறு மதுரையில் இருந்து கொண்டு பல பணிகளைச் செய்தும், பல சொற்பொழிவுகளையும் நிகழ்த்திய அ.மு.ப. பல நண்பர்களைப் பெற்று ஆண்டின் இறுதியில் மார்ச்சு மாதக் கடைசியில் சென்னை வந்து மீண்டும் பச்சையப்பனில் தமது பணியைத் தொடர்ந்தார்.

## வடக்கு நோக்கி

1966இல் தமிழக அரசின் பரிந்துரையின் பேரில் உஸ்மானியப் பல்கலைக்கழகத்தில் தமிழ்த்துறைத் தலைவராகப் பணியாற்ற அழைப்பு வந்த போது அங்குச் சென்றார். அவ்வாறு பணியாற்றிக் கொண்டிருக்கும் போது செகந்திராபாத்தில் உள்ள 'மாபூப்' எனும் உயர்நிலைப் பள்ளி மற்றும் 'கீட்ஸ் பள்ளி' ஆகிய இரு பள்ளிகளுக்கும் சென்று அங்குள்ள தமிழாசிரியர்களைக் கண்டு பேசி மாணவர்களுடன் கலந்து மகிழ்வார்.

அ.மு.ப. ஐதராபாத் சென்றதின் நோக்கமே அப்பல்கலைக் கழகத்தே தமிழில் டாக்டர் பட்டம் பெற வாய்ப்பினை ஏற்படுத்த வேண்டும் என்பதாகும். எனவே பலர் இதில் பதிவு செய்து பட்டமும் பெற்றனர். அதே சமயத்தில் அ.மு.ப. பல்கலைக்கழகத்தில்

பணியாற்றினாலும் பெரும்பாலும் நகரிலுள்ள தமிழ் மக்களோடு நன்கு கலந்து பழகினார்.

பல்கலைக்கழகப் பணி அளவில் சிறியதாக அமையினும், அங்கிருந்த தமிழர் அனைவர் உள்ளத்திலும் ஓர் எழுச்சியினை உண்டு பண்ணினார்.

1966-67இல் உத்திரப் பிரதேசத்தில் கீழ்த்திசை மொழி பயிற்றுவோர் மாநாடு நடைபெற்ற போது அம்மாநாட்டிற்குச் சென்று வந்தார். காசி இந்துப் பல்கலைக்கழகத் தமிழ்ப் பாடநூல் குழுவில் அ.மு.ப., தில்லிப் பல்கலைக்கழகப் பேராசிரியர் ஆறுமுகம் மற்றும் சித்தலிங்கையாவுடன் உறுப்பினராக இருந்தார்.

அ.மு.ப. ஐதராபாத்தில் இருந்த போது மற்றொரு புதுப்பணி அவருக்கு வந்து சேர்ந்தது. மராட்டிய மாநிலத்துப் பள்ளி இறுதித் தேர்வு, இடைநிலைத் தேர்வு ஆகியவற்றில் தமிழில் வினாத் தயாரிக்கும் பணியில் சிறப்பு மேற்பார்வையாளராக இருக்குமாறு வேண்டி இருந்தது. இப்பணி, தொடர்ந்து 1979 முடிய பன்னிரண்டு ஆண்டுகள் நடைபெற்றது.

## மலேயாவில் தமிழ்ப்பணி

1948இல் மலேயா அரசு புதுப் பல்கலைக்கழகம் ஒன்றை நிறுவ ஏற்பாடு செய்தது. அதில் இந்திய மொழி ஒன்றினை அப்பல்கலைக் கழகத்தில் அமைக்கக் கருதி அதற்காக அ.மு.ப.வுக்கு அழைப்பு விட்டிருந்தது. அ.மு.ப. சுமார் ஒன்றரை மாதம் சிங்கப்பூர் தொடங்கிப் பினாங்கு வரையில் பல ஊர்களைச் சுற்றி, கருத்தறிந்தும் சொற்பொழிவாற்றியும் திரும்பினார். அதன் பயனாகத் 'தமிழன் கண்ட மலேயா' என்ற நூலையும் வெளியிட்டார். அது அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தே பட்ட வகுப்பிற்கும் பிற பல்கலைக்கழகங்களிலும் பாடமாக இருந்தது. அ.மு.ப. தமது சொற்பொழிவுகளை "மலேயாச் சொற்பொழிவுகள்" என வெளியிட்டார்.

தமிழே மலேயாப் பல்கலைக்கழகத்தில் வைக்கத் தகுதி பெற்றது என்ற திட்டமான முடிவை எழுதினார். நேரிலும் விளக்கிக் கூறினார். அதுபோன்றே பல்கலைக்கழகம் தொடங்கப்பட்ட போது இந்திய மொழித்துறை என்ற பிரிவினை அமைத்து, அதில் தமிழையே இடம் பெறச் செய்தார்கள்.

அ.மு.ப. 1958இல் மலேயா சென்ற போது கோலாலம்பூர் 'தமிழ் நேசன்' இதழ் 'மலேயாப் பல்கலைக்கழகத்தில் தமிழ்ப்பிரிவு அவசியம்

என்று வலியுறுத்திய பேராசிரியர் பரமசிவானந்தம் வருகை என்று அவர் படத்துடன் மூன்று பத்தித் தலைப்பிட்டு அவர் வாழ்வையும் பிறவற்றையும் தெளிவாக எழுதி வெளியிட்டது.

## பத்திரிகைப் பணி

அ.மு.ப. பச்சையப்பன் கல்லூரியில் பணியாற்றிக் கொண்டே வேறுசில பொதுப்பணிகளையும் மேற்கொண்டார். அதில் ஒரு பகுதிதான் பத்திரிகைத் துறை. போரின் காரணமாகத் 'தமிழ்க்கலை' இதழ் இடையில் நிறுத்தப்பட்டது. மீண்டும் அதனைத் தொடங்கும் ஆர்வம் ஏற்பட, சைவசித்தாந்த சமாசத்தின் துணை ஆசிரியராக இருந்த சமயத்தில் இராயப்பேட்டை முனிவர் திரு. வி.க. உதவியுடன் சென்னையில் மீண்டும் 'தமிழ்க்கலை'யைத் தொடங்கினார். மு.வ., ரா.பி. சேதுப்பிள்ளை போன்றோரும், அ.மு.ப.விடம் பயின்ற மாணவர்களும் 'தமிழ்க்கலை' இதழுக்குக் கட்டுரையும், கவிதைகளும் எழுதி ஆசிரியரை ஊக்குவிக்க, ஐந்தாண்டுக் காலம் சென்னையில் 'தமிழ்க்கலை' திங்கள் இதழாக வெளிவந்தது.

அ.மு.ப. தமிழ்க்கலையில் தொடர்ந்து திருப்பதி முதல் சென்னை வரையில் ஊர் ஊராக மக்கள் தொகை - மொழி பற்றிய கட்டுரைகள் பல எழுதி வெளியிட்டார். 1931இல் தான் மொழிவாரி மக்கள் தொகை எடுக்கப் பெற்றது. எனவே அந்த அடிப்படையில் வெளியிட்டார்.

'சித்தாந்தம்' இதழில் துணையாசிரியராக இருந்து கொண்டு பல கட்டுரைகளும் கவிதைகளும் எழுதினார். எனவே அ.மு.ப. சென்னைக்குக் குடிவந்த பிறகு துணைச்செயலாளர் துணையாசிரியர் பொறுப்பு அவருக்கு வழங்கப்பட்டது. தலையங்கம் எழுதும் பொறுப்பும், பிழை திருத்தும் பொறுப்பும் இணைந்தன.

'கூட்டுறவு' என்னும் மாத இதழினை நடத்த ஓர் ஆசிரியர் குழுவினை நியமித்த போது அதில் அ.மு.ப.வும் ஓர் உறுப்பினராக இருந்தார்.

மேலும் 'பாரததேவி' என்ற நாளிதழின் பொறுப்பாசிரியராகவும், மேலாளராகவும் செயலாற்றியது முக்கியமான ஒன்றாகும். அதன் பிறகு அந்த நாளிதழை அ.மு.ப.வே முன்னின்று நடத்தும்படி ஆனது.

இடையில் 'சுதேசமித்திரனிலும்' அடிக்கடிக் கட்டுரைகளும் எழுதிக் கொண்டிருந்தார். 'அமுதசுரபி' என்னும் பத்திரிகை இதழில் அ.மு.ப. சீவகன் வரலாற்றைத் தொடர்ந்து எழுதி வந்தார். பின் அது தனி

நூலாக அமைய, பல்கலைக்கழகமும் அதைப் பட்ட வகுப்பிற்குப் பாடநூலாக அமைத்தது.

மேலும் 'தென்றல்', 'தினசரி', 'தமிழ்நாடு' போன்ற நாளிதழ்களிலும் கட்டுரைகள் பல எழுதியுள்ளார். இவையன்றி வேறுசில இதழ்களுக்கும் கட்டுரைகள் எழுதினார். இலண்டன், இலங்கை, மலேயா நாடுகளில் வெளியான பத்திரிகைகள், இதழ்கள், வடநாட்டுத் தமிழ்ச்சங்க மலர்கள், சில சிறப்பு மலர்கள் ஆகியவற்றிலும் கட்டுரைகள் எழுதியுள்ளார். வானொலியிலும் சொற்பொழிவுகள் ஆற்றியுள்ளார். இவ்வாறு பல வகையில் அ.மு.ப.வின் பத்திரிகைப் பணி இடையறாது நடைபெற்று வந்தது சிறப்புக்குரியது.

## கல்விப் பணிகள்

பச்சையப்பனில் பணியாற்றிக் கொண்டிருந்த போது ஆசிரியராக இருந்து மாணவர்களுக்குப் பாடம் சொல்லியும் பண்பை உணர்த்தியும் வழிகாட்டிக் கொண்டிருந்த ஆண்டுகளில் வேறுவகையில் பொதுமக்கள் நலம் கருதி, கல்விப்பணிகள் சிலவும் மேற்கொள்ள வேண்டிய நிலை உண்டாயிற்று. அவற்றுள் முக்கியமானவை வாலாஜாபாத் உயர்நிலைப் பள்ளி அமைப்பு, செனாய்நகர் திரு.வி.க. பள்ளி தொடக்கம், அன்னை வள்ளியம்மாள் கல்வி அற வளர்ச்சி என்ற மூன்றும் முக்கியமானவை.

1947இல் 'வாலாஜாபாத் உயர்நிலைப் பள்ளி' ஒரு நல்ல நாளில் மாண்புமிகு பக்தவச்சலம் தலைமையில் அண்ணா வாழ்த்துரையுடன் பல நல்லவர்தம் முன்னிலையில் தொடங்கப் பட்டது.

அ.மு.ப. பயின்ற இந்துமதப் பாடசாலையில் ஒரு மகளிர் உயர்நிலைப்பள்ளியும் ஆசிரியர் பயிற்சிப் பள்ளி ஒன்றும் பலரின் உதவியுடன் தொடங்கப்பட்டது.

மீண்டும் சென்னையில் சேத்துப்பட்டில் "செனாய் நகர் உயர்நிலைப் பள்ளிக்குழு" தோற்றுவிக்கப்பட்டது. இதற்காகப் பல முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டு 1955இல் "திரு.வி.க. பள்ளி" என்ற பெயரில் செனாய் நகரில் உயர்நிலைப் பள்ளி உருவானது.

இவ்வாறு தனிப்பட்ட முறையில் செயல்பட்டு இரு பள்ளிகளைத் தொடங்கியதோடு, புருடோத்தம முதலியார் துணையுடன் செங்கல்பட்டு மாவட்டத்தில் பலப்பல பள்ளிகளை, உயர்நிலைப் பள்ளிகளைத் தொடங்க உதவியுள்ளார்.

### பிறபணிகள்

பச்சையப்பன் கல்லூரியில் முப்பது ஆண்டு அ.மு.ப. பணியாற்றியிருந்தாலும் கூடக் கல்லூரியிலும், வெளியிலும் அவர் கலந்து கொண்ட நிகழ்ச்சிகள் பல. தொடக்கத்தில் பல சமய மாநாடுகளில் பங்கு கொண்டார். சைவ சித்தாந்த சமாசத்தின் ஆண்டு விழாக்களில் தவறாமல் கலந்து கொள்வார்.

### இலக்கியப்பணி

ஆசிரியர் அ.மு.ப. எழுதிய நூல்கள் 85க்கும் மேல். தற்போது கிடைக்கும் நூல்கள் 36. அவை:

1. இளமையின் நினைவுகள், 2. கொய்த மலர்கள், 3. துன்பச் சூழல் (நாவல்), 4. மக்கட் செல்வம், 5. பெண், 6. மனிதன் எங்கே செல்கிறான்? 7. தாயின் மணி வயிற்றில், 8. தொழில் வளம், 9. வெள்ளிவிழாச் சொற்பொழிவுகள், 10. மலைவாழ்மக்கள், 11. சிறுவர்களுக்கு, 12. வானொலி வழியே, 13. நாலும் இரண்டும், 14. பத்தொன்பதாம் நூற்றாண்டு உரைநடை, 15. புதிய கல்வி முறை, 16. கவிதை உள்ளம், 17. சாத்தனார், 18. மு.வ. தமிழ்த் தொண்டு, 19. வையைத் தமிழ், 20. கங்கைக் கரையில் காவிரித் தமிழ், 21. தமிழ்நாட்டு விழாக்கள், 22. காஞ்சி வாழ்க்கை, 23. கவிதையும் வாழ்க்கையும், 24. வழுவிலா மணிவாசகர், 25. ஏழு நாடுகளில் எழுபது நாட்கள், 26. திரும்பிப் பார்க்கிறேன் திகைத்து நிற்கிறேன், 27. வரலாற்றுக்கு முன் வடக்கும் தெற்கும், 28. தமிழர் வாழ்வு, 29. ஓங்குக உலகம், 30. தாய்மை, 31. கல்வி எனும் கண், 32. ஆனந்த முதல் ஆனந்த வரை, 33. சான்றோர் வாக்கு (குறள் வழி), 34. நல்லவை ஆற்றுமின் (வானொலி பேச்சு), 35. அருந்திறலாளர் அ.மு.ப., 36. அம்மையும் அப்பனும்.

### அ.மு.ப. பற்றிய ஆராய்ச்சி

பச்சையப்பன் ஆடவர் கல்லூரியைச் சார்ந்த நான்கு மாணவர்கள் அவரது இலக்கியங்கள் குறித்து ஆராய்ச்சி செய்துள்ளனர். இராணி மேரி கல்லூரியைச் சார்ந்த எம்பில் மாணவி செல்வி செ. சுமதி 'அ.மு.ப.வின் தமிழ்ப் பணி - ஓர் ஆய்வு' என்ற தலைப்பில் இவ்வாண்டு (2003 - 2004) ஆராய்ச்சியினை மேற்கொண்டுள்ளார். அதற்கு நானே நெறியாளராக இருப்பது குறிப்பிடத்தக்கது.

அ.மு.ப. பற்றிப் பேச வேண்டுமெனில் மணிக்கணக்கில் பேசலாம். அவர் 15-08-2001 அன்று காலை கல்லூரியில் சுதந்திர தின

விழாவில் கொடியேற்றம் முடிந்த பிறகு மாரடைப்பில் காலமாகியுள்ளார். இந்நிகழ்ச்சி அவரது நாட்டுப்பற்றைக் காட்டுவதாக உள்ளது. அமர வாழ்வினை எய்தும் முன் அதனை அவரே உணர்ந்து இறுதியாக எழுதியுள்ள பாடலின் பொருள்:

> இறைவா, நீயும் இறைவியும் ஒன்று. நான் சிவசக்தியால் ஆக்கப் பெற்றவன். ஆதால் நானும் சிவசக்தியும் ஒன்று. இனி நானும் உன் அன்பர்களும் ஒன்றாகும்படி ஈடு இல்லாத இறைவா அருள்புரிவாயாக

என்பதாகும்.

## முடிவுரை

அ.மு. பரமசிவானந்தம் வாழ்க்கையில் பாதிநாள் இன்பமாக இருந்தாலும் ஆரம்பக் காலக்கட்டத்தில் பல்வேறு இன்னல்களுக்கும், ஆளாகியுள்ளார். சமயம், தத்துவம், ஆன்மீகம் போன்ற பல்வேறு துறைகளிலும் ஈடுபட்டுத் தம்மை உயர்த்திக் கொண்டார். இருப்பினும் தமிழ்ப் பேராசிரியர் அ.மு.ப. என்று நமக்கு அவரை அடையாளம் காட்டியது அவர் பச்சையப்பன் கல்லூரியில் மேற்கொண்ட முப்பது ஆண்டுக் காலக் கல்விப்பணியே ஆகும். இத்தகைய சிறப்பு வாய்ந்த அ.மு.ப.வை வாழ்த்த வார்த்தைகளில்லை என்று சொன்னால் அது மிகையாகாது.

### அடிக்குறிப்புகள்

1. வாழ்க்கை இலக்கியம், மது.ச. விமலானந்தம், ப. 11.
2. சாலினி இளந்திரையன், வாழ்க்கை வரலாற்று இலக்கியம், ப. 62
3. ச. சிவகாமி, தமிழ் வாழ்க்கை வரலாற்றிலக்கியம், ப. 11.

# ஆய்வும் படைப்பும்

தி. மகாலட்சுமி

தமிழாசிரியராக, எழுத்தாளராக, கவிஞராக, சொற்பொழிவாளராக, இதழாசிரியராக, வரலாற்றாய்வாளராக விளங்கிய பேராசிரியர் அ.மு. பரமசிவானந்தம் பல்துறை ஈடுபாடும், சிறந்த புலமை நலனும் கொண்டவர். இத்தகைய பன்முகங்களைக் கொண்ட பல்கலைச்செல்வராக இவர் விளங்கியதால் பல்வேறு துறைகளில் தம்முடைய படைப்புகளை நல்கியுள்ளார். தமிழக வரலாறு, சமுதாயமும் பண்பாடும், கவிதையுள்ளம், வழுவிலா மாணிக்கவாசகர், 19ஆம் நூற்றாண்டின் உரைநடை வளர்ச்சி, துன்பச்சூழல், கறை படிந்த உள்ளம், கொய்த மலர்கள் என ஆய்வுகளாகவும் படைப்புகளாகவும் 80க்கும் மேற்பட்ட நூல்கள் இவரால் தமிழ் கூறு நல்லுலகுக்கு வழங்கப்பட்டுள்ளன. ஒரு சில ஆங்கில நூல்களையும் இவர் எழுதியுள்ளார். இவற்றுள் சிலவற்றின் நோக்கும், போக்கும், சிறப்பும் பற்றிக் காண்போம்.

## I. ஆய்வுகள்

### வரலாறு

மக்கள் சமுதாயத்தின் சமூக, சமய வளர்ச்சி, மக்கள் அமைத்துக் கொள்ளும் வாழ்க்கை முறை, மக்கள் ஒருவரோடு ஒருவர் கலந்து பழகும் முறை, அவர்களுடைய உடை, உணவு, உறையுள், அவற்றை ஆக்கி அளிக்கும் முறை, அவற்றை மற்றவர்களோடு பகிர்ந்து கொள்ளும் பண்பாடு, விளையாட்டு, வேடிக்கை, கடவுளையும் அரசனையும் போற்றிய விதம், உள்நாட்டு வெளிநாட்டு வாணிப வளன், பொருளாதார ஏற்றத் தாழ்வு போன்றன பற்றிக் கூறுவது வரலாறாகும்.

அவ்வகையில் தமிழக வரலாறு (1962), வரலாற்றுக்கு முன் வடக்கும் தெற்கும் (1961), ஆனந்த முதல் ஆனந்த வரை போன்ற வரலாற்று நூல்களை அ.மு.ப. படைத்துள்ளார். இவர் எழுதிய Tamil Nadu through the Ages (1960) எனும் ஆங்கில நூலின் விரிவான தமிழாக்கமே 'தமிழக வரலாறு' எனும் நூலாகும்.

நீலகண்ட சாஸ்திரியாரின் சோழர் வரலாறு, தென் இந்திய வரலாறு, சேசஐயங்காருடைய திராவிட இந்தியா, மற்றும் சில நூல்கள் தமிழ்நாட்டு வரலாற்றைக் கண்முன் கொண்டு வந்து காட்டுவன. எனினும் எதுவும் தொடர்ச்சியாக வரலாற்றுக் காலத்துக்கு முன் தொடங்கி இன்றுவரை தமிழக வரலாற்றை வரையறுத்துக் காட்டவில்லை. 2000 ஆண்டுகளுக்கு முற்பட்ட தமிழக வரலாற்று நிலையை வரிசையாக வகைப்படுத்தி வெளிக் கொணர்வது அவ்வளவு எளிதன்று. எனினும் அத்துறையில் இவர் மேற்கொண்ட முயற்சியே இந்நூல் (ப. 14).

இந்நூலின் வரலாறு மிகப் பழங்காலந்தொட்டு இன்று வரை முறைப்படுத்தி எழுதப் பெற்றுள்ளது. நீலகண்ட சாஸ்திரியாருடைய சோழர் வரலாறும், ஹீராஸ் பாதிரியார், கோபாலன் ஆகியோருடைய பல்லவர் வரலாறும், பி.டி. சீனிவாச ஐயங்கார், கனகசபைப் பிள்ளை ஆகியோரின் தமிழக வரலாறும், சதாசிவ பண்டாரத்தாரின் சோழர், பாண்டியர் வரலாறுகளும் இதற்குப் பெருந்துணை செய்துள்ளன. இவர்கள் காலத்தைப் பற்றி விரிவாக எழுதிய கருத்துகளைச் சுருக்கி, ஆய்ந்து கண்ட பல புதிய குறிப்புகளோடு சேர்த்துக் கோவை செய்யப்பட்டதே இந்நூல் (ப.15).

இவர் சில வரலாற்றுக் கட்டுரைகள் படித்திருப்பினும் வரலாற்றுத் துறையில் இந்நூல் முதல் முயற்சியாகும்.

தமிழ்மொழி இலக்கிய ஆசிரியராகத் தம் வாழ்க்கையைத் தொடங்கிய இவர், இலக்கியத்தில் காணப்படும் வரலாற்றுக் கருத்துகளை வடித்தெடுத்து, தமிழக வரலாற்றைப் படைத்த பேராசிரியராக விளங்குகிறார். இவர் இலக்கியம் எனும் ஆழ்கடலினுள் மூழ்கி, அரிய வரலாற்று முத்துகளைக் கொணர்ந்து கொடுத்துள்ளார். "அவரிடத்துப் பயின்றதன் பயனாகவே என்னைப் போன்ற சிலருக்கு வரலாற்றுப் பைத்தியம் பிடித்திருக்கிறது. தமிழ்ப் பேராசிரியர் ந. சஞ்சீவி, 'இந்திய விடுதலைப் போராட்ட வரலாற்றிலும்', அடியேன், 'பண்டைய இந்திய வரலாற்றிலும்' ஆர்வம் கொண்டமைக்கு நம் பேராசிரியர் தமிழறிவோடு வரலாற்று உணர்வைக் குழைத்துத் தந்தமையே காரணமாகும்" என்கிறார் க. த. திருநாவுக்கரசு.

தமிழக வரலாறு முறையாக எழுதப்படாமைக்கும், சிறப்புடன் போற்றப்படாமைக்கும் உரிய காரணத்தை ஆசிரியர், "பரந்த பாரத நாட்டு வரலாற்றை எழுதிவரும் பெரியவர்கள் காவிரிக் கரை நாகரிகத்தைப் பற்றிக் கவலைப்பட்டதாகத் தெரியவில்லை. காரணம் தலைநகர்

டெல்லிக்குத் தொலைவில் அமைந்துவிட்டது தான்" (ப. 57) என்று வருத்தத்தோடு குறிப்பிடுவார். "இருப்பினும் ஆதிச்ச நல்லூர் போன்ற இடங்களில் அகழ்ந்தெடுத்த பொருள்களும், தமிழர்களது வரலாறு காணவேண்டும் என்ற அவாவும் ஓரளவு காவிரிக்கரை நாகரிகத்தை ஆராயத் தூண்டுகின்றன" (ப. 57) என்றும் கூறுகிறார்.

மனிதன் தோன்றிய இடம் மறைந்த குமரிக் கண்டம் என்பதைப் பல இடங்களில் சுட்டிச் செல்லுகிறார் (பக். 48, 77). சிலர் இழந்த லெமூரியாக் கண்டமாகிய பழந்தமிழகமே உலக மக்களினத்துக்கும் மொழிக்கும் நாகரிகத்துக்கும் தொட்டிலாய் இருந்து, பெற்று வளர்த்துப் பிறநாடுகளுக்கு அனுப்பியது என்பர் (பக்.77) என்று கூறுமிவர் குமரியில் தோன்றிப் பிற இடங்களுக்கும் சென்று இருப்பர் (ப. 62) என்று தன் ஏற்பையும் தெரிவிக்கிறார். அத்துடன் தமிழ்க்குடிகள் இந்த நாட்டில் பிறந்தவர்களா? அன்றி வெளிநாட்டில் இருந்து வந்தவர்களா என்ற ஆராய்ச்சி இன்னும் முடிந்தபாடில்லை (ப. 62) என்கிறார்.

இப்படி இன்னும் முடிவு காணப்படாதவை மிகுந்துள்ளதை நூல் முழுமையிலும் காட்டுகிறார். அவை பற்றி இதுவரை வந்துள்ள ஆய்வு முடிவுகளுள் தாம் ஏற்றுக் கொள்ளும் கருத்து எது என்பதையும் கூறுகிறார்.

ஒரு கருத்துக்கு எழுந்த ஆய்வு முடிவுகள் சிலவற்றை எடுத்துக்காட்டுகள் கூறி மறுக்கிறார். மறுப்பதுடன் தாம் ஏற்கும் கருத்தைச் சான்று காட்டி நிறுவுகிறார்.

பாடலியைத் தலைநகராகக் கொண்டு வாழ்ந்து வந்த செல்வம் நிறையப் பெற்ற நந்தரைப் புதியதாய் வந்த மோரியர் வென்று தம் நாட்டை விரிவாக்கினர் (ப. 102) என்கிறார் ஆசிரியர். இதற்குச் சங்கப் பாடல்களைக் குறிப்பாக மாமூலனாரின் (அகம். 251, 265) பாடல்களைச் சான்றாகக் காட்டுகிறார். காட்டி மாமூலனார் குறித்த மோரியர், பாடலியில் ஆண்ட சந்திரகுப்த மன்னன் பரம்பரையினரே என்று முடிக்கிறார்.

இதனைச் சிலர் மறுப்பதற்காகக் கூறும் காரணங்களை நூலில் கூறி அக்கருத்துகளை எடுத்துக்காட்டுகள் கூறி மறுக்கிறார். வையாபுரியை மறுக்கும் ஆசிரியர், "மோரியர் ஓர் இனத்தைக் குறிக்கவில்லை. மோரியர் என்ற சொல் ஓரியர் ஆகவே இருக்க வேண்டும் என்றும், வையாபுரி புதுப்புது வகையில் ஆராய்ச்சி செய்தலும், சொற்களை வேண்டியவாறு மாற்றுதலும் பொருந்துவனவாகா. இவர் தாராநாத் கூறுவதையும்

மறுக்கிறார். மறுக்கும்போது தாராநாத் 300 ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்தவர். எனவே அவர் கூற்றுப் பொருந்தாது. இன்னும் 300 ஆண்டுகளுக்குப் பின் வாழ்ந்த இவர் கூற்று மட்டும் ஏற்கக் கூடியதோ? இன்றைய வரலாற்று ஆசிரியர் கூறும் ஒவ்வொன்றும் எப்படிப் பொருந்துவதாகும். எனவே வரலாறே இல்லையாகி விடுமே" (பக். 103-105) என்கிறார்.

மேலும், "மோரியர் பற்றி மாமூலர் கூறியுள்ளதால் அவர் நான்காம் நூற்றாண்டில் வாழ்ந்தவர் என்பது உறுதியாகி விடும். ஆனால் அதற்கும் முன்பே தமிழ் இலக்கியம் தழைத்திருந்தது என்ற உண்மை ஏற்றுக் கொள்ளப்பட வேண்டும் என்ற ஒன்றிற்காக அறிஞர்கள் இவ்வாறு வலிந்து பல கருத்துகளைப் புகுத்தல் முறையன்று" (ப. 106) என்கிறார்.

வரலாறு எழுதுபவன் நடுநிலையோடு செயல்பட வேண்டும். சங்ககாலம் கி.பி. 4ஆம் நூற்றாண்டுக்குத் தள்ளப்பட்டு விடுமே என எண்ணி உண்மையை மறுக்கக் கூடாது. முயன்றவரை, இயன்றவரை கிடைக்கும் உண்மைகள் தமிழின் தொன்மையை உயர்த்தினால் போதும். பொய்மை என்ற ஒன்றை உயர்த்த வேண்டிய தாழ்ந்த நிலையில் தமிழக வரலாறு இல்லை என்ற தம் உணர்வை இவ்வெடுத்துக் காட்டில் மட்டுமல்ல வேறு பல இடங்களிலும் இவர் பெருமிதத்துடன், வீறுடன் கூறிச் செல்கின்றார்.

இங்ஙனம் தாம் ஏற்கும் கருத்துகளுக்குக் காட்டுகளைக் கூறி நிறுவும் இவர், பல இடங்களில் விரிவு கருதியோ, பின் வருபவர் தம் கருத்துக்கான ஆதாரங்களைத் தேடட்டும் என்றோ தாம் மறுப்பதையும், சரியென்று ஏற்றதையும் சான்று காட்டாது விடுகிறார். காட்டு:

> குலோத்துங்கன் 2 – இவன் மேல் பிள்ளைத் தமிழ்ப் பாடினார் கூத்தர். தமிழில் தண்டியலங்காரம் செய்த தண்டியாசிரியர் இவன் அவைக்களப் புலவருள் ஒருவர். கம்பர், சேக்கிழார் இருவரும் இவன் காலத்தவர் என்பர். அக்கூற்று ஆராய்தற் குரியது. இருவரும் ஒரே காலத்தவர் அல்லர் என்பது பலருடைய கருத்தாகும். அதுவே உண்மையும் கூட.

ஏற்புக்கும், மறுப்புக்கும் சான்று காட்டாத இவர் பல இடங்களில் மறுக்கும் கருத்திற்குச் சான்று காட்டாது, ஏற்கும் கருத்துக்கு மட்டும் சான்று தருகிறார். காட்டு:

குலோத்துங்கன் 3 – "இராசாதிராசனுக்குப் பின் பரகேசரி குலோத்துங்கன் பட்டத்துக்கு வந்தான். இவன் யார் என்பது தெரியவில்லை. இவனை இரண்டாம் இராசராசன் தம்பி என்றும், கொங்குச் சோழர் பரம்பரையினர் என்றும் கூறுவார் கூற்றுப் பொருந்தாது. இவன் இரண்டாம் இராசராசன் பழையாறையில் இறக்கும்போது விடப்பட்ட இரண்டாண்டுக் குழந்தையே எனக் கொள்ளல் பொருத்தமாகும்" (ப. 261). இவன் இரண்டாம் இராசராசன் கட்டிய இராசராசேச்சுரத்தைத் தன் தந்தை கட்டியதாகக் கூறிக் கொள்வதே இதற்குச் சான்றாகும் (263).

பண்டாரத்தார் இம்மன்னன் இரண்டாம் இராசராசனின் புதல்வனாய் இருத்தல் வேண்டும் என்பர்.[2]

பிறர் கருத்தை ஏற்கும் இவர் அக்கருத்து முடிந்த முடிபல்ல என்று கூறிச் செல்லுமிடங்களையும் காணமுடிகிறது. காட்டு:

அச் சுந்தரசோழன் (985–1014) தமிழ்ப் புலவர்களை ஆதரித்தவன். வீரசோழியத்தில் இவனைப் பற்றிய இருபாடல்களில் தலைநகரம் பழையாறை[3] என்று பண்டாரத்தார் கூறுவது ஈண்டு எண்ணத்தக்கது.

பிறரது வேறுபட்ட கருத்துகளைக் கூறிவிட்டு அதில் எது சரி என்ற கருத்துக்கு வரமுடியாதபோது தம் கருத்தை வெளிப்படுத்தாமல் செல்வதையும் பல இடங்களில் பார்க்க முடிகிறது. காட்டு:

சேக்கிழார் 3ஆம் குலோத்துங்கன் காலத்தில் பெரிய புராணம் பாடினர் என்பர் சிலர். இரண்டாம் குலோத்துங்கன் காலத்தில் இருந்தவர் என்பர் சிலர். கம்பருக்கு முற்பட்டவர் என்பது பலர் கருத்து (ப. 265).

ஊகத்தின் அடிப்படையில் பல இடங்களில் பேசுகிறார். காட்டு:

மெய்கண்டார் மூன்றாம் இராசராசன் காலத்தில் வாழ்ந்தவர் என்பர் (ப. 269).

இவர்களுக்கு விருந்து நடைபெற்றிருக்கும் (ப. 273).

வெளிநாட்டார் அடிக்கடி வந்திருப்பார்கள்.

இங்ஙனம் ஆய்வுக் கருத்துகளைக் கூறுவதற்கு நல்ல உத்திகளைப் பின்பற்றியுள்ள இவர் இந்நூலில் இன்னும் பல சிறப்புறு கருத்துகளை

எடுத்துக் காட்டுகிறார். இவனுக்கு இராசராசன் என்ற பெயர் கி.பி. 1004க்கு முன்பே நிலைத்து விட்டது (ப. 231) என்று காட்டுடன் கூறுமிடத்தைச் சான்றாகக் கூறலாம். அதுபோலவே கோயில் கர்ப்பக்கிரக இலிங்கத்தின் அடியில் சில இடங்களில் எலும்புகள் இருப்பதைப் பற்றிக் கூறவரும் பகுதியையும் சிறப்புறத் தந்துள்ளார். அப்பகுதியில் சொல்லப்பட்ட சில கருத்துகள்: புத்தர்தம் வழிபாட்டில் இலங்கை நாட்டுக் கண்டி நகரில் எலும்பாகிய பல்லே முக்கியமாகப் போற்றப்படுவது போன்று அன்று தமிழ்நாட்டிலும் எலும்பினுக்கு ஏற்றம் தந்து போற்றினார்களா என்பதும் தெரியவில்லை. சிறந்த அடியவர்களை அடக்கம் செய்த இடங்கள் பிற்காலத்தில் பெருங்கோயில்கள் ஆயின போலும். எனினும் இந்த இரண்டும் பற்றிய ஆதாரம் இல்லை. ஆகையால் எதையும் திட்டமாகக் கொள்ளமுடியாது (பக். 275, 276).

இங்ஙனம் நூல் முழுவதும் அமையும் ஆய்வுச் சிந்தனைகளின் வழிப் பல சிறப்புறு கருத்துகளை எடுத்து விளக்கியுள்ளார். சிறுசிறு நிகழ்வுகளிலும்கூடத் தம்கருத்தை வெளிக்காட்டுகிறார். காட்டு:

> **சோழன் தலைகொண்ட கோவீர பாண்டியன் என வீரசிம்மன் பாராட்டப் பெற்றுள்ளான். சோழருள் ஒருவர் தலையைப் போரிலோ அன்றி வேறு வகையிலோ கொய்து கொண்டவன் ஆதல் வேண்டும் (ப. 227).**

கல்வெட்டுகள், செப்பேடுகள் மட்டுமின்றி இலக்கியங்களில் கூறப்பட்டுள்ள பல செய்திகளையும் ஆதாரமாகக் கொண்டு விளக்கியுள்ளமை இந்நூலுக்குச் சிறப்பைச் சேர்ப்பதாக அமைகிறது. மன்னர்கள் பட்டமேற்ற ஆண்டு, அவர்கள் செய்த போர்கள், செய்த பணிகள், சிறப்புப் பெயர்கள், மனைவியர், புதல்வர், மன்னர்களுக்கு உதவிய அரசாங்க அதிகாரிகள் முதலான செய்திகளை விரிவாக விளக்கியுள்ளார்.

## வரலாற்றுக்கு முன் வடக்கும் தெற்கும்

இந்நூல் வடவர் பண்பாட்டையும், தமிழர் பண்பாட்டையும் பற்றி விளக்குகின்றது. வடக்கும் தெற்கும் நீண்ட நெடுங்காலமாகப் பண்பாட்டுத் தொடர்புடையனவாய் இருந்திருக்கின்றன என்பதை நூலில் வலியுறுத்துகிறார். சங்க காலத்துக்கு முன்பே வடக்கும் தெற்கும் இணைந்திருந்தன. வடஇந்தியாவில் வாழ்ந்த ஆரியர் சங்க காலத்துக்கு முன்பே தமிழ்நாட்டிற்கு வந்திருப்பர். அதுபோது தம் சாதி வேறுபாடு முதலியவற்றை இங்குப் புகுத்தி இருப்பர் என விளக்குகிறார்.

"இது முதல் முயற்சி. வரலாற்றுக்கு முன் தெற்கையும், வடக்கையும் இணைத்துப் பார்த்துத் தொகுத்து எழுதியவர் உளரோ என எண்ணுகிறேன்" (ப. 7) என ஆசிரியரே கூறுவதால் இவ்வகையில் இது தமிழில் எழுந்த முதல் நூல் எனலாம்.

இந்நூல் முன்னுரையில், "அண்மையில் இந்து மாபெருங் கடலை ஆழ்ந்து ஆராய்ந்த எழுபது பேரைக் கொண்ட இரசியாவின் விஞ்ஞான அறிவுக் குழுவினர் அம்மாக்கடலின் அடிப்பொருள்களை ஆராய்ந்ததன் பயனாக அங்கே 1000 லட்சம் ஆண்டுகளுக்கு முன் நிலப்பரப்பு இருந்ததென்றும், இலங்கைக்குத் தென்கிழக்கில் 550 கல் தொலைவில் ஆழ்கடலாக 10,000 அடி உயர மலை உள்ளதென்றும் முடிவு செய்து அந்த உண்மையை உலகுக்கு உணர்த்தியுள்ளனர்" (ப.5) என்று கூறுவது தமிழக வரலாற்றில் மனிதன் தோன்றிய இடம் குமரிக்கண்டம் என்பதை வலுப்படுத்துகிறது.

வடசொல் பற்றிக் கூறும்போது "வடசொல் என்பது ஆரிய மொழியைக் குறித்ததாகாது. தமிழில் வடசொல் எனவே குறிக்கப் பெறுவன வேங்கடத்துக்கு அப்பால் வழங்கப்பட்ட தெலுங்கு தொடங்கி இன்றைய காஷ்மீர் வரையிலும் கூடக் கொள்ளலாம். வடசொல் ஆரிய மொழியாகிய சமஸ்கிருதத்தைத்தான் குறிப்பதென்பதற்குச் சான்று இல்லை. பின் வந்த நன்னூலார் அவர் காலத்துக்கு ஏற்ப, வடமொழியை ஆரியம் என்னும் பெயரால் விளக்கியிருந்தார் என்றாலும் தொல்காப்பியர் அந்த வகையில் சொல்லவில்லை" (ப. 97) என்கிறார். இக்கருத்து மேலும் ஆய்வுக் குரியதாகும்.

அகத்தியர் ஆரியப் பண்பாட்டின் காவலர். அதைத் தென்னாட்டில் பரப்புவதற்கு முயன்ற பெரியார் என்று கூறுவாரை மறுத்து தமிழ்நாட்டு அகத்தியர் வேறு; வடநாட்டு அகத்தியர் வேறு (ப. 82) என்று கூறுகிறார்.

தோல்வியுற்ற இரணியன், சூரபதுமன், இராவணன் ஆகியோர் தமிழர் எனும் கருத்தை மறுத்து அனைவரும் ஆரிய மரபினரே என்கிறார். தோல்வி மனப்பான்மையை விட்டுத் தமிழர் வெளிவருவாராயின், இதை ஏற்பர் (ப. 130) என்றும் கூறுகிறார். தவறு செய்பவனும், தோல்வி அடைந்து இறப்பவனும் தமிழன் என்று நம்மிடையே ஊறியுள்ள தாழ்வு மனப்பான்மை என்னும் குறைபாடு பல தவறுகளுக்கு வழி வகுக்கும் என இதன் வழி உணர்த்துகிறார். ஆசிரியரின் இக்கருத்தும் மேலாய்விற்குரியது.

புராணங்களில் சொல்லப்படுகின்ற மகேந்திர மலை, இலங்கை போன்ற இடங்களும், அவற்றை ஆண்ட தலைவர்களும் நம் நினைவுக் கெட்டாத தொல்பழங்காலத்தில், இந்துமாக்கடலுள் மூழ்கிய குமரிக்கண்டத்தில் வாழ்ந்தவராவர் (பக். 18-19) என்ற இவரின் கருத்து நல்லதொரு சிந்தனையைத் தூண்டுவதாகும். தொடக்கக் கால வரலாற்று நிகழ்ச்சிகளைப் புராணங்கள் எடுத்துக் காட்டுகின்றன என்ற இவரது சிந்தனை பலரை இது போன்ற சிந்தனைகளில் ஈடுபட வழிகாட்டுகிறது.

இராமாயண, பாரதக் காலங்களில் தமிழ்நாடு வடநாட்டோடு தொடர்பு கொண்டிருந்தது. அத்தொடர்பு தமிழரின் பண்பாடும், பிறவும் கெடாத வகையில் நட்பு முறையில் சிறப்புற அமைந்திருந்தது என்பது ஆசிரியரின் துணிபு.

பண்பாடு பற்றித் தெரிவிக்கப்பட்டுள்ள கருத்துகள் சிலவற்றை எடுத்து, ஆய்வுக்குட்படுத்தி அவை தவறுடையன என்று தெளிவுறுத்துகிறார்.

> **வரலாற்றை ஆராயும் நல்லாசிரியர் தத்தம் கொள்கையைப் புகுத்தாமலும், மனம் போன வழி போகாமலும், உள்ள ஆதாரங்களை வைத்துக் கொண்டு, ஓர்ந்து கண்ணோடாது தம் நூல்களை எழுதின் அப்போது தான் உண்மை வரலாறு உலகுக்குப் புலனாகும்**[4]

என்று கூறும் ஆசிரியர் தம் நூல்களிலும் இப்பண்பைப் பின்பற்றியுள்ளார்.

## பண்பாடு

தமிழ்ச் சமூகத்தின் தனித்துவச் சிறப்பை எடுத்து இயம்பிய சான்றோர்களில் அ.மு.ப. முக்கியமானவர். இடைக்காலத் தமிழர்களின் தனித்துவ வரலாற்றுச் சிறப்பைச் சமுதாயமும் பண்பாடும் (1962), சமயமும் சமூகமும் (1958), தமிழ்நாட்டு விழாக்கள் (1956) போன்ற நூல்களில் எடுத்துக் காட்டுகிறார். இவை தவிர Ancient Temples of Tamil Nadu, Gleanings of Tamil Culture (1959), என்ற ஆங்கில நூல்களிலும் காட்டியுள்ளார்.

## சமுதாயமும் பண்பாடும்

தமிழர்கள் வரலாற்றுப் பெருமை அற்றவர்கள், வடநாட்டுப் பண்பாட்டுச் செல்வாக்கைப் பெற்று வாழ்ந்தவர்கள் என்கின்ற கருத்தாக்கம் நீண்ட காலம் தமிழ்ச் சமூகத்தில் நிலவியது. அதன் பிறகு

தொல்லியல் ஆய்வு மற்றும் சில ஆய்வுகள் இக்கருத்தின் பொய்மையை வெளிக்கொணர்ந்தன.

மேற்சொன்ன கருத்து ஒருபுறமிருக்க, தமிழர்கள் தனித்த வரலாறு பெற்றவர்கள், வட ஆரியருடன் எவ்விதமான உறவுமற்றுத் தனித்து வளர்ந்தவர்கள் என்ற கருத்தும் பேசப்பட்டது. இக்கருத்துகளின் அடிப்படைகளில் உள்ளவற்றை இந்நூலில் சுட்டிக்காட்டுகிறார்.

சமுதாயம் பற்றிய நூல்கள் தமிழில் எழுதப்படாத காலத்தில், ஆசிரியர் முதன் முதலாகச் சமூகவியல் அடிப்படையில் சமுதாயமும் பண்பாடும் என்ற இந்நூலை எழுதியுள்ளார்.

> *சமுதாயமும் பண்பாடும் ஒன்றையொன்று பற்றிப் படர்வன. பண்பாடு எத்தனையோ வகையில் பரந்த உலகில் வாழ மக்களின் மனம், சூழல், இயற்கை, இன்னவற்றிற்கேற்ப அமைந்து விரிந்ததாகக் காணப்பெறினும் அனைத்தின் அடிப்படையும் ஒன்றாகவே முடியும் என்பதாகக் காட்ட முயன்றிருக்கிறேன் (ப. 13).*

என்று கூறுகின்றார்.

மேத்யு அர்னால்டு பண்பாடு என்பதற்கு "மனிதன் சிந்தித்தவற்றுள்ளும் செய்தவற்றுள்ளும் எது சிறந்ததோ அது பண்பாடாகும்" என்ற வரையறையைத் தருகிறார். இக்கருத்தின் வழி சமூகத்தை நோக்கினால், 'யாதும் ஊரே யாவரும் கேளிர்', 'மனத்துக்கண் மாசிலன் ஆதல், 'ஒன்றுபட்டால் உண்டு வாழ்வு', 'தீதும் நன்றும் பிறர்தர வாரா' போன்றவை பண்பாட்டில் சிறந்தவை ஆகும். இது எக்காலத்திற்கும் எந்நாட்டிற்கும் பொருந்தும். எனவே தமிழ்ச் சமூகத்தின் பண்பாடு பிறருக்குப் பொருந்துமென்றால் பிற சமூகத்தின் பண்பாடும் தமிழ்ச் சமூகத்திற்குப் பொருந்தும் என்பது தானே உண்மை.

தமிழர்களின் பண்பாட்டில் வடநாட்டவரின் செல்வாக்கும் உள்ளது. எனினும் அது தமிழ்ச் சமூகத்தின் இயல்பிற்கு ஏற்றவாறு இயைந்து செயல்படுகிறது. இத்தகைய இயல்பு அனைத்துச் சமூகத்திலும் உள்ளமை வரலாற்றின்வழி அறியமுடிகிறது.

இந்நூலின் பண்பாட்டுப் பகுதி இக்கருத்தினைத் தெளிவுறுத்துகின்றது. இதன்வழி, 'வேற்றுமையில் ஒற்றுமை காண்பதும் தனிமனித சமுதாயத்தின் இயல்பு (ப. 124) ஆயினும், வேற்றுமையில் ஒற்றுமை காண்பதே, பன்மையில் ஒருமை காண்பதே சமுதாய வரலாறு உணர்த்தும் உண்மை' என அறிவிக்கிறார்.

## சமயமும் சமூகமும்

உயர்ந்த ஒழுக்கத்தைப் பண்பாடு என்கின்றோம். இது மக்களைப் பண்பாட்டில் மேம்பாடுடையவர்களாக மாற்றுகிறது. இப்பண்பாடு வாழ்வை வளமுடையதாக்குகிறது. இது மனித வாழ்வியலின் அனைத்துக் கூறுகளிலும் வெளிப்படுகிறது. அவ்வகையில் சமயம், வழிபாடு, திருவிழாக்கள் வழியாகப் புலப்படும் பண்பாட்டினை இந்நூலிலும், தமிழ்நாட்டு விழாக்கள் என்ற நூலிலும் காட்டுகின்றார்.

சமயமும் சமூகமும் என்ற இந்நூல் ஆசிரியரின் மனப்பக்குவத்தைப் படம் பிடித்துக் காட்டுகிறது. "சமயம் அன்று மட்டுமின்றி இன்றும், என்றும் மனித வாழ்வுக்குத் தேவையான ஒன்று என்ற கருத்தே நூல் முழுவதும்"[5] (பக். 4) இழையோடிச் செல்லுகிறது. இவர் சமயம் பற்றிக் கூறும்போது,

> **சமயம் என்பது மக்களது நலம் கருதி ஆக்கப்பட்ட ஒன்றே என்பதும், அவரவர் எண்ணப்படியே எண்ணியது முடியா நிலையில் தமது சிந்தைக்கும் செயலுக்கும் அப்பாற்பட்ட பொருள் ஒன்று உண்டு என்று உணர்ந்து, அவ்வுணர்ச்சி வழியே அன்பு கொண்டு அறப்பணி ஆற்றுவதே என்பதும் அதுவே மக்கள் வாழ்க்கை மலரச் செய்வது என்பதும் தேற்றம் (ப. 374)**

என்று எக்காலத்திற்கும், எத்தகைய நிலையினருக்கும் பொருந்துமாறு கூறுகிறார்.

"ஒன்றிய உணர்வு வாழ்க்கையே சமரசம்" (ப. 30). சமயத்தின் அடிப்படை சமரசம், சாதி வேறுபாடற்ற சமூகத்தைக் காணச் சமயம் உதவும் என்பது ஆசிரியரின் நம்பிக்கை எனக் சு.த. திருநாவுக்கரசு கூறுகிறார்.

சமயநெறிதான் மனிதனுக்கு, அவனது வாழ்விற்கு வழிகாட்டியது, இது உலகப் பொதுமை என ஆசிரியர் காட்டுகிறார். உலக நாடுகளில் சமய வழிப்பட்ட நெறிமுறைகளை 18ஆம் நூற்றாண்டில் கடைப்பிடித்தனர். ஆனால் இவரது காலத்தில் சமயம் மட்டுமின்றிப் பகுத்தறிவு வழிப்பட்ட வாழ்க்கை நெறிமுறை தமிழ்ச் சமூகத்தில் பெரிதும் ஆற்றலோடு செயல்பட்டது, இன்றும் செயல்படுகிறது. இருப்பினும் சமயம் பற்றிய இவரது கருத்துகள் சிறந்த கருத்துக் களஞ்சியம் என்றால் அது மிகையில்லை.

சைவத்தின் தொன்மைச் சிறப்பைக் கூறுமிவர் அதைக் கடைப்பிடிப்பவர்களிடையே நிலவும் சீர்கேடுகளைக் கண்டு வருந்தி,

> இன்று சைவன் அவன் கொள்கையைக் காற்றில் பறக்க விட்டான். நாடு வாழத் தான் வாழ வேண்டும் என்ற சைவ சமயம், நாடு வருந்தத் தான் மட்டும் வாழ வேண்டும் என்ற மக்களால் ஆளப்படுகிறது (ப. 66)

என்று கூறுகிறார். இது சைவத்திற்கு மட்டுமல்ல அனைத்துச் சமயத்தினருக்கும் பொருந்தக் கூடிய ஒன்றாகும்.

## தமிழ்நாட்டு விழாக்கள்

"தமிழ்நாட்டு விழாக்கள் பல. அவற்றுள் தமிழருக்கேயுரிய விழாக்கள் சில. விழாவெடுப்பதன் நோக்கம் மக்களிடையே உள்ள வேற்றுமைகள் நீங்கி, பண்பும், பாசமும் வளருவதற்கு அது உதவும் என்பதாகும். இதன் மூலம், நாமும் நலம் பெறலாம், நாடும் நலிவு நீங்கிச் சிறப்புறலாம்". எனவே, நாட்டை வாழ்விக்க வரும் ஒரு நல்ல நாளாகவே விழாவை ஆசிரியர் கூறுகிறார்[6].

"இந்நூலில் பண்டைக்கால விழாக்கள் சிலவும், இக்கால விழாக்கள் பலவும் விளக்கப்பட்டுள்ளன. தென்றல் தவழும் சித்திரை விழா முதல், விழாவும் விளையாட்டும் வரை பல செய்திகள் இந்நூலினுள் இடம்பெற்றுள்ளன. ஜகதீசஐயரின் South Indian Festival's என்னும் நூல் அறுபதாண்டுகளுக்கு முன்னர் எழுதப் பட்டது. அதற்குப் பிறகு நம் பேராசிரியரே அப்பொருள் பற்றி, முதன் முதல் தமிழில் நூல் எழுதியுள்ளார் என்பர்."[7]

Gleanings of Tamil Culture (தமிழ்ப் பண்பாட்டின் சிறப்புமிகு ஒளிச்சுடர்கள்) - இந்த ஆங்கில நூலானது சொற்பொழிவுகளின் வழி உருவாகிய கட்டுரைத் தொகுப்பாகும். ஆசிரியர் நன்றியுணர்ச்சியின் பால் தம் படைப்புகளை உஸ்மானியப் பல்கலைக்கழக அந்நாள் துணைவேந்தர் டாக்டர் டிஎஸ். ரெட்டி, தெ.பொ. மீனாட்சி சுந்தரனார் போன்றோருக்குக் காணிக்கையாகப் படைக்கும் வழக்கத்தைப் பின்பற்றியுள்ளார். அவ்வகையில் இந்நூலை உலக அமைதிக்கும், அதைப் பெறுபவருக்கும் படைத்துள்ளார்.

இந்நூலில் இடம் பெற்றுள்ள தேவார காலத்திய தமிழர் சமுதாயம் என்ற சிறந்த கட்டுரையில், தேவார ஆசிரியர்கள் புலால் உண்பதைக் கண்டிக்கவில்லை. திருஞான சம்பந்தர் தேவாரத்தில் புலால் உண்ட சில பக்தர்கள் பேசப்படுகின்றனர் (ப. 58) என்று ஆராயத்தக்க கருத்தை எடுத்துக் கூறுகிறார்.

அடுத்து, சுந்தரர் இறைவனிடம் காம்பு, நேத்திரம் எனும் பொருள்களைத் தரும்படி வேண்டுகிறார். மூக்குக் கண்ணாடி தமக்கு வேண்டுமெனச் சுந்தரர் கேட்டார் என்று சு. சோமசுந்தரம் செட்டியார் இதற்குப் பொருள் தருகிறார். அ.மு.ப. இக்கருத்தை மறுக்கும் வகையில் பிங்கல நிகண்டில் காம்பும் நேத்திரமும் உயர்ந்த வகைப்பாட்டினைக் குறிக்கும் சொற்களாகச் சொல்லப்பட்டுள்ளதைக் காட்டியுள்ளார் (ப. 56).

"தமிழ் இலக்கியத்தில் ஆற்றுப்படை எனும் கட்டுரை முழுநிறைவானது, வரலாற்று நோக்கில் அமைந்தது. Ancient Glory எனும் கட்டுரையில் புலன் இன்பம் சாராத ஆன்ம நேயமே (Platonic Love) தமிழருடைய அன்பின் ஐந்திணை என்று ஐயா குறிப்பிட்டுள்ளார். இதை நாம் நன்கு ஆராய்ந்து முடிவுகாண வேண்டிய நிலையில் உள்ளோம்"[8] (ப. 173).

தமிழ்நாட்டுக் கோயில்களின் புகழை, ஆங்கிலேயர் அறிய வேண்டும் என்ற நோக்கத்துடன் Ancient Temples of Tamil Nadu என்ற நூலை வெளியிட்டுள்ளார்.

இதுகாறும் பார்த்தவற்றால் ஆசிரியர் தமிழருக்குத் தனிப்பண்பாடு உண்டு எனக் கூறினும் வடவர் பண்பாட்டின் தாக்கம் பன்னெடுங் காலத்திற்கு முன்பே தமிழர் வாழ்வில் பதிந்து விட்டது என்பதையும் காரணங்கள் காட்டி ஏற்கின்றார்.

வேற்றுமையில் ஒற்றுமை காண முயல்வதே ஒவ்வொருவரும் பெறத்தக்க படிப்பினை என்பதை உணர்த்துகிறார்.

சமயம் மனிதனை மனிதனாக வாழச் செய்கிறது என்றும் தமிழக வரலாற்று உருவாக்கத்தில் இதற்கும் கணிசமான பங்குண்டு என்றும் தெளிவுபடுத்துகிறார்.

## உரைநடை

தமிழ் உரைநடை வரலாறு, 19ஆம் நூற்றாண்டின் தமிழ் உரைநடை வளர்ச்சி (1965) ஆகியவை இவர் எழுதிய உரைநடை நூல்களாகும். இவற்றுள் இரண்டாம் நூல் கல்கி நினைவுச் சொற்பொழிவில் நிகழ்த்திய மூன்று நாள் பொழிவுகளின் வழி உருப்பெற்றதாகும்.

## 19ஆம் நூற்றாண்டின் தமிழ் உரைநடை வளர்ச்சி

இந்நூல் தமிழ் உரைநடையின் தோற்ற வளர்ச்சியையும், வாழ்வின் பல்வேறு சமுதாயத் துறைகளில் அரசியல் - வாழ்வியல் - கல்வி - பண்பாடு - ஆட்சிமுறை ஆகிய வழிகளில் உரைநடை வளர்ந்த வகையினையும் விளக்குகிறது. இதன்வழி உரைநடையின் இயல்பும், அது வளர்ந்த சூழலும், பத்தொன்பதாம் நூற்றாண்டில் உரைநடை அமைந்த விதமும் தெளிவாக்கப்படுகின்றன. கல்வெட்டுகள், இலக்கிய இலக்கண நூல்கள் போன்றவற்றை இவற்றிற்கு ஆதாரமாகக் காட்டுகிறது.

## பத்தொன்பதாம் நூற்றாண்டு

ஒரு வடிவம் பெற்ற உரைநடை என்பது வெகு காலத்திற்குப் பிறகுதான் தமிழ்மொழியில் தோன்றத் தொடங்கியது. இருப்பினும் இன்று அது மகத்தான வளர்ச்சி பெற்றுள்ளது. இந்த வளர்ச்சியின் தொடக்கம் 19ஆம் நூற்றாண்டிலேயே மலரத் தொடங்கியது. இதைப் பல கட்டுரைகள், பெரியோர் எழுதிய கடிதங்கள் ஆகியவற்றைக் கொண்டு அழகாகச் சித்திரிக்கிறார் ஆசிரியர் (தமிழக முதல்வர் பக்தவத்ஸலம் முன்னுரை, ப.6).

எனவே உரைநடை வீறுகொண்டு பெருகிய காலம் இக்காலம் எனலாம். இக்காலத்தில்தான் (1835) அச்சு எந்திரம் வைத்துக் கொள்ளும் உரிமையைச் சுதேசிகளுக்குக் கம்பெனியாரின் ஆட்சி வழங்கியது. அதற்கு முன்னர்த் தமிழில் கிறித்துவ சமயம் சார்ந்த பிரச்சாரங்கள் அச்சிடப்பட்டன; சமயத்தைக் கிண்டல் செய்து, விமர்சனத்துக் குள்ளாக்குவது போன்றன வெளிவந்தன.

இந்நூற்றாண்டின் மத்திய காலத்தில் இருந்த ஆக்க இலக்கியங்கள் உரைநடையில் வெளிவந்தன. வீரமாமுனிவர் எழுதிய பரமார்த்த குருகதை தொடங்கி, வேத நாயகம் பிள்ளையின் பிரதாப முதலியார் சரித்திரம் வரை சிறப்புறு படைப்புகள் பல வெளிவந்தன. இந்நூற்றாண்டின் இறுதியில் திறனாய்வு, ஒப்பாய்வு போன்றனவும், சிறுகதை, பழம் இலக்கியத்திற்குப் பதிப்பு, உரை போன்றனவும் பெருவாரியாக வந்தன.

இவற்றைப் பற்றிய விரிவையெல்லாம் நூலில் சுட்டும் ஆசிரியர் எவ்வகையில் எல்லாம் உரைநடை கையாளப்பட்டது என்றும் கூறுகிறார். கடிதம், அரசு ஆணை, சட்டம், ஆக்க இலக்கியம், திறனாய்வு, உரை விளக்கம் போன்றவற்றின் வெளியீடுகளைப் பட்டியல் இட்டுக் காட்டுகிறார்.

இருபதாம் நூற்றாண்டின் பிந்திய கால உரைநடை கிட்டத்தட்ட ஒரு பொதுமை நிலையைப் பெற்று இருக்கிறது. சொற்களைப் பிரித்துச் சொல்வதும், பொதுவான எளிய கருத்தாக்கமும் பிந்திய கால உரைநடையின் ஒருமைப்பாடு ஆகும். ஆனால் பத்தொன்பதாம் நூற்றாண்டில் உரைநடையானது அவ்வளவு எளிதில் விளங்குவதாக இல்லை. வசன நடை என்பதே ஒரு புதிய பாணியாகக் கைக்கொள்ளப்பட்டது. சந்தி பிரிக்காதவை, வடமொழி - தமிழ்மொழிக் கலப்பு, மணிப்பிரவாள நடை, மிடுக்கான நடை, செறிவான நடை, இனிய நடை, கடின நடை, செம்மை நடை, எழுத்துப் பிழை, இலக்கணப் பிழை, பேச்சுத்தமிழ், கொச்சைத் தமிழ் போன்ற பல கூறுகளைத் தன்னகத்தே கொண்டு எழுந்த இவ்வுரைநடைகள் தாமும் வளர்ந்து தமிழ் உரைநடை வளரவும் உதவின.

ஓலைச்சுவடியில் இருந்து ஏட்டிற்கும், ஏட்டில் இருந்து அச்சுப் பதிப்பிற்கும் என்ற நிலைகளை உரைநடை எட்டியது. அதோடு மேலை நாட்டுத் தாக்கத்தினால் எழுந்த உரைநடை வளர்ச்சி கதை, கட்டுரை, நாடகம், கவிதை எனப் பலவற்றிலும் ஆதிக்கம் செலுத்தியது. இராமலிங்கம் பிள்ளை, ஆறுமுக நாவலர், சி.வை. தாமோதரம்பிள்ளை, தனிநாயக அடிகளார் போன்று எல்லோரும் பல உரைநடைகளைத் தமிழுக்குக் கொணர்ந்தனர். வடமொழி ஆதிக்கம், செய்யுள் கலந்த பண்டித நடை, சில ஆங்கிலச் சொல் கலப்பு போன்றவை தமிழ் உரைநடையாக இருந்திருக்கின்றன. இது பொதுநிலை ஆக இருக்க, ஒவ்வொரு ஆசிரியரும் தங்களுக்கான தனிப்பட்ட நடையை உருவாக்கி இருந்தனர்.

சூரிய நாராயண சாஸ்திரி (பரிதிமாற் கலைஞர்) எழுதிய வசனம் மிகவும் கடின நடையுடையது. அம்மாதிரியான கடின வசனம் பெரும்பாலார்க்குப் பயன்படாது. விளங்க வைத்தல் என்பதைக் கொண்டு வசனம் எழுத வேண்டும். கவியானது கடினமாயிருந்தாலும் குற்றமில்லை. வசனம் கடினமாயிருந்தால் பெரும்பயன் அளிக்காது. ஆதலின் எளிய நடையில் எழுதுவதுதான் உசிதம். ஸ்ரீமான் வேத நாயகம் பிள்ளை, ஸ்ரீமான் செல்வக்கேசவராய முதலியார் ஆகிய வித்துவான்கள் எழுதிய வசனந்தான் நமக்கு வழிகாட்டக் கூடியது. அவர்களுடைய வசனநடை மிகவும் பாராட்டற்பாலது. ஏனெனில் எளிய நடையில் எழுதுவது, கடின நடையில் எழுதுவதைப் பார்க்கிலும் வருத்தமான காரியம் (பக்97,98) என்ற கருத்து தனிநபர் ஒருவருடைய உரைநடை கடினமாக இருத்தல் கூடாது என்பதைக் காட்டுகிறது. எனவே தனி ஆசிரியர்களது நடையை ஆராய்வதும் உரைநடை வளர்ச்சியை அறிவதில் துணைபுரியும்.

இது இப்படி இருக்க மக்கள் பயன்பாட்டிற்குத் தேவையான பொதுமக்கள் உரைநடை இலக்கியத்தில், "பல சொற்கள் புரியா நிலையிலும் உள்ளன. சில ஆங்கிலச் சொற்கள் அவ்வவ்வாறே தமிழில் எழுதப்பெற்றுள்ளன. சில பெயர்களும், வினை முடிபுகளும் மிகக் கொச்சையாகவே வழங்கப்பெறுகின்றன. சில மெய் எழுத்துகள் புள்ளி பெறவும் இல்லை. எனினும் இவற்றால் மக்கள் தங்கள் கருத்தைத் தாராளமாகப் பரிமாறிக்கொண்டார்கள் என்பது தெளிவு" (ப.78) என்கிறார்.

## உரைநடை

இந்நூலில் ஆசிரியர் தமிழில் தோன்றிய இலக்கியத்தின் முதல் வடிவம் உரைநடைதான் என்கிறார். இக்கருத்தையே **உரைநடை வரலாறு** என்ற நூலிலும், **உரைச் செல்வம் – மரபும் பண்பாடும்** என்ற கட்டுரையிலும் வலியுறுத்துகிறார். இவரது படைப்புகளில் வேறு பல இடங்களிலும் இக்கருத்தே இழையோடுகிறது. எனவே இது பற்றிச் சற்று விரிவாகக் காண்போம்.

மனிதன் பேசத் தொடங்குவதே முதல் செயல். அதன் பிறகே படைப்புகளைப் படைக்கிறான் என்று கூறுமிவர் இதற்கான பல சான்றுகளை மிக விரிவாகக் கூறுகிறார். அவற்றுள் சில:

1. உள்ளத்துத் தோன்றிய எண்ணத்தை மற்றவருக்கு உணர்த்த நினைத்த மனிதன் எண்ணி எண்ணி எழுத்தெழுத்தாக உச்சரித்து, சொல்லின் பின் சொல்லாக மெல்ல உரைத்திருப்பானன்றோ? எனவே முதலில் தோன்றியது உரை எனக் கொள்ளல் பொருத்தமானதாகும் (ப.15).

2. தமிழ் இலக்கியத்தில் இவ்வுரைநடை முன்தோன்ற, நெடுங்காலத்துக்குப்பின் இவ்வுரைநடைபோன்று அமைந்த சூத்திரங்கள் - நூற்பாக்கள் தோன்றின. பின்னரே பாட்டு தோன்றிற்று என்பது பொருந்தும் (ப.17).

3. இந்நாட்டுப் பிறமொழிகளைக் காட்டிலும் தமிழில் பழங்காலத்திலேயே உரையும் சூத்திரமும், பாட்டும் ஒன்றன் பின் ஒன்றாகத் தோன்றி வளர்ந்து வாழ, அவற்றைத் தொல்காப்பியர் தொகுத்துக் கூறி இலக்கண வரம்பினை உறுதி செய்தார் எனக் கொள்வது பொருத்தமானது (ப.18).

4. தமிழில் 'செய்யுள்' என்ற ஒரு சொல் உள்ளது என மேலே கண்டோம். செய்யப்படுவன அனைத்தும் செய்யுளே. எனவே

உரைநடையும் செய்யப்படுவதுதானே. 'ஆம்'. எனவே உரைச் செய்யுள் எனக் கொள்ளலாமா? கொள்ளலாம் (ப.18).

5. தமிழில் உரைநடை வளர்ந்தாலும் அதன் வரலாற்றைத் தொடர்ச்சியாக அறிய முடியவில்லையே என்பதை எண்ணும்போது சற்றே வருத்தம் உண்டாக்கத்தான் செய்கிறது (ப.23).

இவற்றின்வழி உரைநடை முதலில் தோன்றியது; அடுத்தே செய்யுள் போன்றன தோன்றின; பிறமொழிகளைக் காட்டிலும் தமிழ்மொழி வேறுபட்டுச் சிறப்புத் தகுதி பெறுகிறது; வரலாற்று ஆதாரம் இல்லாத குறை இருப்பினும் உரைநடையே முதலில் தோன்றியது என நிறுவுகிறார்.

இக்கருத்துகளுக்குச் சிலம்பின் முன்னுரையாக அமைந்த உரையிடையிட்ட பாட்டுடைச் செய்யுள் என்ற அடியினை ஆதாரமாக எடுத்துக் காட்டுகிறார். அடுத்து இடைக்காலத்தில் தோன்றிய இறையனார் களவியல் உரையைச் சான்றாகக் காட்டுகிறார். இவற்றின் வழியே உரைநடையை இலக்கிய ஆக்கத்தில் பயன்படுத்திய முறையை நிறுவுகிறார். அடுத்து 12ஆம் நூற்றாண்டில் எழுந்த உரை ஆசிரியர்களின் உரைகளில் உரைநடை செழித்தோங்கி இருந்தமையைக் கூறுகிறார். இங்ஙனம் வளர்ந்த உரைநடை 19ஆம் நூற்றாண்டில் வெளிவந்த ஆக்க இலக்கியங்கள், அரசு ஆணைகள், கடிதங்கள் போன்றவற்றின்வழிச் செம்மாந்த நிலையை எட்டியது என்கிறார்.

சமூகத்தின் பண்பாட்டுச் செயல்களை வெளிப்படுத்துவதில் இலக்கியம் முக்கியப் பங்கு வகிக்கிறது. இது சமூகத்தின் பொது விருப்பத்தைக் கலைஞன் வழியாக வெளிப்படுத்தும் அழகியல் அம்சமாகும். எஸ். வையாபுரிப்பிள்ளை, "மனிதனுடைய செயல்களைக் காட்டிலும் அவனது ஆன்ம இயல்பினை உணர்த்துவதுதான் அதற்குச் சிறந்த பயன்" என்கிறார். இக்கருத்து இலக்கியத்தின் முதன்மைக் குணமான அழகியல் உணர்வைக் குறிக்கிறது. மனிதனுடைய, படைப்பாளியினுடைய மனம், அவனது அகவுலகோடும், புற உலகோடும் எவ்வாறு செயல்படுகிறது என்பதைக் கூறும்போது அழகியல் தன்மையுடன் படைப்பு அமைந்து விடுகிறது.

உலகில் உள்ள அனைத்து மொழியிலும் இலக்கியச் செயல்பாடு வாய்மொழியாக இருந்து பின்பு செய்யுள் வடிவத்தில் வெளிவந்துள்ளது. தமிழிலும் பத்துப்பாட்டு, எட்டுத்தொகை போன்றன தொடங்கி

வள்ளலார் வரை அனைத்துமே செய்யுள் வடிவத்திலேயே வெளிவந்தன. இக்கருத்தை எஸ். வையாபுரிப்பிள்ளை,

> உலகத்துள்ள இலக்கியங்களில் உரைநடையில் உள்ளவை காலத்தால் பிற்பட்டவை; செய்யுளில் இயன்றவை காலத்தால் முற்பட்டவை. எகிப்து மொழியிலுள்ள ஆதி நூல்களுக்கு முந்திய இலக்கியம் உலகத்துள்ள எம்மொழியிலும் இல்லை; இவற்றுள் சில செய்யுள் வடிவில் உள்ளன. நமது தமிழ்மொழியிலும் இப்போது அகப்படும் இலக்கியங்கள் எல்லாவற்றுள்ளும் மிக முந்தியது செய்யுளால் இயன்றதே

என்கிறார்.

எந்திர உற்பத்தி மனிதனைச் சமமானவனாக மாற்றியது. தர்க்க விளைவாகச் சமூகத்தில் பங்கு எடுத்துக் கொள்ள வேண்டிய அவசியத்தை அனைவர்க்கும் ஏற்படுத்தியது. சட்டத்தின் முன் அனைவரும் சமம், அனைவருக்கும் ஓட்டுரிமை போன்றன வாழ்வை ஒத்த மதிப்பு உடையதாக மாற்றின. இவ்வாழ்வின் கலை வெளிப்பாடாக உரைநடை அமைந்தது. இவ்வெளிப்பாடு ஐரோப்பியர் வருகையை ஒட்டி அமைந்தது. இது குறித்து கா. சிவத்தம்பி,

> மேனாட்டார் வருகையின் பின்னரே ஆக்க இலக்கியம் வசனத்தில் அமைக்கப்படலாயிற்று. பண்டைக் காலந்தொட்டு வசனப் பிரயோகம் தமிழ் இலக்கியத்தில் இருந்து வந்த தெனினும் மேனாட்டார் வருகைக்கு முன்னர் தர்க்க ரீதியான விடயங்களை எடுத்து விளக்குவதற்கும் செய்யுள் இலக்கியத்தை விளக்குவதற்குமே அது பெரிதும் கையாளப்பட்டது. அக்காலத்தில் கவிதையே முதலிடம் பெற்றது. அக்காலக் கல்வி முறைக்கும் இதுவே ஏற்றதாக விருந்தது

என்கிறார்.

படைப்புகள் காலத்தின் தேவையை ஒட்டியே வெளி வருகின்றன. அக்காலமே இலக்கியத்தின் உருவம், உள்ளடக்கம் போன்றவற்றைத் தீர்மானிக்கின்றது. எனவே அ.மு.ப. இலக்கியத்தில் உரைநடை தான் முதலில் தோன்றியது என்று கூறினாலும் உரைநடையில் ஆக்க இலக்கியம் தோன்றியது பத்தொன்பதாம் நூற்றாண்டில்தான் என்று கூறுதல் இயலும்.

## கட்டுரை

எல்லோரும் வாழ வேண்டும், கங்கைக் கரையில் காவிரித் தமிழ், கட்டுரை பத்து, கொய்த மலர்கள், சிறுவர்களுக்கு, நல்லவை ஆற்றுமின், நாலும் இரண்டும், மலேயா சொற்பொழிவுகள், மானுடம் வென்றது, வானொலி வழியே போன்றன இவருடைய கட்டுரைத் தொகுப்புகள் அடங்கிய நூல்களாகும். வானொலியிலும், பிற இடங்களிலும் நிகழ்த்திய உரைகளும், இதழ்களுக்கு எழுதிய கட்டுரைகளும் மேற்கூறிய நூல்களாக வடிவெடுத்துள்ளன.

## வானொலி நூல்கள்

வானொலி உரைகளின் வழியே உருவாகிய வானொலி வழியே என்ற நூலில் தமிழ் இலக்கியமும், நாட்டு ஒருமைப்பாடும், தொல்காப்பியம் கண்ட தமிழகம், பாவை, வாய்மொழி இலக்கியம், ஐம்படைத்தாலி, காவடிச் சிந்து, மலைவாழ் மக்கள், தமிழ் இலக்கியம் - உரைநடை நோக்கு ஆகிய எட்டுக் கட்டுரைகள் இடம் பெற்றுள்ளன.

நாலும் இரண்டும் என்ற வானொலி உரைகளின் வழி உருவாகியுள்ள நூலில் அடக்கமுடைமை, செய்தக்க அல்ல கெடும், அறிமின் அறநெறி, ஊழ்வினையும் ஆள்வினையும் முதலான 26 கட்டுரைகள் உள்ளன. திருக்குறள், நாலடியார், அறநூல்கள் முதலியவற்றில் கூறப்பட்டுள்ள பொருண்மைகளை அடிப்படையாகக் கொண்டு இக்கட்டுரைகள் எழுந்துள்ளன.

வானொலியில் சிறுவர் பகுதியில் ஆற்றிய உரை சிறுவர்க்கு எனும் நூலாக உருவாகியுள்ளது.

இவர் எழுதிய கட்டுரைகள் நூலாகியமை மட்டுமன்றி இவர் படைப்புகளைப் பற்றிப் பிறர் எழுதிய கட்டுரைத் தொகுப்பு ஒன்றும் நூலாக வெளிவந்துள்ளது. 1974 இல் வெள்ளிவிழாச் சொற்பொழிவு என்ற பெயரில் வந்த இந்நூலில் அ.மு.ப. ஆசிரியர், புதினம், சிறுகதை, பயணநூல், நாடகம், பொதுத் தொண்டு, பத்திரிகையாசிரியர், வரலாறு, பண்பாடு, கதை, பழங்குடி ஆராய்ச்சி ஆகிய பொருண்மைகளில் கட்டுரைகள் இடம்பெற்றுள்ளன. மு.வ.வின் படைப்புகளைப் பற்றிய கட்டுரைகளும் இதில் உள்ளன.

இவரது மானுடம் வென்றது (1965), கங்கைக் கரையில் காவிரித் தமிழ் (1956), கொய்த மலர்கள்(1960) என்ற மூன்று நூல்களில் கூறப்படும் சிறப்புகளைக் காண்போம். இவற்றுள் மானுடம் வென்றது என்ற நூல்

பல துறைகளில், பல காலங்களில், பல இதழ்களில் இடம்பெற்ற இலக்கியக் கட்டுரைகளின் தொகுப்பு. இதிலுள்ள 14 கட்டுரைகளை ஆசிரியர் காப்பியம், உலகியல், சமயம், மொழியியல் என்ற நான்குவகைத் தலைப்புகளில் பாகுபடுத்தியுள்ளார். முதல் கட்டுரையின் தலைப்பே இந்நூலின் பெயராக உள்ளது. இந்நூலிலுள்ள கட்டுரைகளின் மையக்கருத்துகளையும், சிறப்புறு கருத்துகளையும் காண்போம்.

## காப்பியம்

மானுடம் வென்றது - கம்பன் வாழ்ந்த காலத்துக்கு முன்பே தமிழ்நாட்டில் வாழ்ந்த பழம்பெரும் புலவர்கள் இராம இராவணரைப் பற்றிய பல்வேறு வரலாற்றுக் குறிப்புகளைத் தத்தம் நூல்களில் எடுத்தாண்டிருப்பது காட்டுகளுடன் விளக்கப்படுகிறது.

சங்க இலக்கியம், சிலப்பதிகாரம், சீவகசிந்தாமணி ஆகியவற்றில் இராமாயண நிகழ்ச்சிகள் உள்ளன. குலசேகர ஆழ்வார் இராமன் வரலாறு முழுவதையும் தாலாட்டாகப் பாடுகிறார். சைவ அடியார் இராவணனைப் பாராட்டுகின்றனர். மனிதப் பிறவி மேலானது, அவன் மனிதனாக வாழ்ந்தால் எவற்றாலும் அவனை வெல்ல முடியாது.

வித்தார கவி - இது பெருங்காப்பியங்களில் அமைவது. பிரபந்தங்களும் இதனுள் அடங்கும். சிந்தாமணியில் சாந்தமும் கலந்து ஒன்பது சுவைகள் உள்ளன. இதில் காதல் ததும்பும் பகுதிகள் சில எடுத்துக்காட்டப்படுகின்றன.

சிற்றிலக்கியம் – குறவஞ்சி -குறவஞ்சியின் தோற்றம், நூல் சிறப்பு ஆகியன கூறும் ஆசிரியர் சிறப்பான பகுதிகள் சிலவற்றை எடுத்துக் காட்டி விளக்குகிறார்.

இளங்கோ பொய் சொல்லவில்லை - வரலாற்றுச் சிறப்புமிக்க உறையூர் கோழிநகர் என்ற பெயரினைப் பெற்ற வரலாறு விளக்கப்படுகிறது. சிலம்பில் இளங்கோவடிகள், முன்பு ஒருகால் யானையுடன் போர் செய்து வெற்றி கொண்ட கோழியின் பெருமையை நினைந்து, அக்கோழியின் பெயராலேயே கோழிநகர், கோழியூர் என உறையூர் பெயர் பெற்றது என்பர்.

முறஞ்செவி வாரணம் முன்சமம் முறுக்கிய
புறஞ்சிறை வாரணம் புக்கனர் புரிந்தென் (சிலம்பு. 10)

கோழி யானையின் மத்தகத்திருந்தால், எத்தகைய மதயானை ஆனாலும் அடங்கும் என்பதை உண்மையில் நிகழ்ந்த

நிகழ்வையும், அந்நிகழ்வு குறித்து எழுதிய இதழ்களையும் எடுத்துக் காட்டி நிறுவியுள்ளார். இதன்வழிப் பொய்கலவாத சிலப்பதிகாரமானது மெய்நூல் எனக் கூறுகிறார்.

இன்று யானையின் பயன்பாடு குறைவு. இக்காலக் கட்டத்தில் இவ்வுண்மை அறியப்பட்டது என்றால், யானையின் பயன்பாடு முக்கியப் பங்கு வகித்த, மன்னனுடைய படை வலிமையை யானைப்படையைக் கொண்டு தீர்மானித்த அக்காலக் கட்டத்திலும் இது போன்ற உண்மை நிகழ்வு எதிர்பாராமல் நடந்து பயன்பாட்டிற்கு வந்திருக்கலாம். தலபுராணம் இது உண்மையில் நிகழ்ந்த நிகழ்வு என்பதைச் சான்றுடன் தருகிறது. இருப்பினும் யானையைக் கட்டுப்படுத்த வேண்டிய தேவை காரணமாகப் பல உத்திகளைக் கையாண்டபோது இவ்வுண்மை அறியப்பட்டிருக்கலாம்.

இவ்வாறு ஆராய்ந்தால் தமிழ் இலக்கியங்கள் காட்டும் கற்பனை, கட்டுக்கதை என ஒதுக்கப்பெறும் பல நிகழ்வுகள் உண்மையென நிறுவப்படலாம்.

ஆருயிர் மருந்து, காஞ்சி வாழ்க்கை, மணிபல்லவம், முப்பெரும் காப்பியங்கள் போன்றன இவர் எழுதிய காப்பியப் படைப்புகளாகும். அமுதசுரபி எனும் பத்திரிகை இதழில் சீவகன் வரலாற்றை இவர் தொடர்ந்து எழுதி வந்தார். பின் அது தனி நூலாக அமைந்தது. பல்கலைக் கழகம் இந்நூலைப் பட்ட வகுப்பிற்குப் பாடநூலாக வைத்தது.

## உலகியல்

### பாரதி உலகக்கவிஞர்

பொருளாதாரம், மக்கள் இனம், சமயம் ஆகிய பல துறைகளை ஆராய்ந்த பாரதியார், அவை அனைத்தும், ஒன்றிய உலகஉணர்வை உருவாக்கப் பாடுபடுவனவாகவே அமைய வேண்டும் என்கிறார்.

### முடிவு கட்டி விடாதீர்கள்

பேரண்டம், பஞ்சபூத நிலைக்களன் பற்றிய ஆய்வு முடிவுகள் மேலும் தொடரப்பட வேண்டியவை.

### குடவோலை முறை புதியதன்று

மக்களாட்சி முறைக்குரிய குடவோலை முறை பழமைவாய்ந்த ஒன்று. இன்று நம்மால் ஆக்கப்பெற்றுச் செம்மையுற்ற பலவற்றை நம் முன்னோர் நம்மினும் மேம்பட்ட வழியில், சிறந்த வகையில் செயலாற்றிச் சிறந்திருப்பர்.

## சமயம்

### சுந்தரர் தேவாரம்

ஆண்டவனை உள்ளத்தால் போற்றினால் இம்மைக்குத் தேவையானவற்றையும், மறுமைக்கு மோட்சத்தையும் தருவார் எனச் சுந்தரர் கூறுகிறார்.

### கண்ணனும் களிறும்

ஆயர்குலப் பெண்களின் ஆடையைக் கண்ணன் கவர, பின் அவர்கள் ஆடையை வேண்ட, மரத்துக் கிளைகளை ஒடித்து எறிந்தான் என்பது தவறு. நீராடும் மகளிர் ஆடையின்றித் தம் உடலை மறைக்க நினைத்த நிலையில் அஞ்சல் என்று சொல்லி அருகில் வேறு ஆடை இன்மையின் தழையையாவது உடுத்தி வெளிவரட்டும் என்ற கருணையுள்ளத்தில் கிளைகளை ஒடித்தான்.

கடவுள் நெறி என்பது உயிர்களின் அக-புற வாழ்வுகளை மாசு உறா வகையில் ஓம்புவதே.

### தென்னாட்டுக் கோயில்கள்

கோயில்கள் சிறப்பானவை; பயன்பாடுடையவை; கல்வெட்டு, பட்டயம், கலை போன்றவை ஆராயப்பெறின் கோயில்களின் பயன்பாடு இன்னும் சிறக்கும்.

### சமயமும் மொழியும்

மொழிகளும், சமயநெறிகளும் ஒன்றை ஒன்று பற்றியே எவ்விடத்தும், எக்காலத்தும் வாழ்கின்றன.

## மொழியியல்

திருநிறை இலக்கியம் - சங்க இலக்கியம் முதல் பாரதி வரை திரு என்ற சொல் செல்வம், அழகு, நல்வினை, அணிவகை, தெய்வம், மேன்மை, வாழ்வு, வற்றாவளம் போன்ற பொருள்களில் வழங்கி வருகின்றது.

### உரைச்செல்வம்

மொழியின் மரபினையும் பண்பாட்டு அடிப்படையினையும் மறந்து எழுதப்பெற்றவை காலத்தால் மெல்ல அப்புறப்படுத்தப் படுகின்றன; மறந்தமையே உரைநடை நூல்கள் அதிகமின்மைக்குக் காரணம்.

## நல்ல தமிழ் நூல் (1961)

இவர் அமுதசுரபி இதழில் எழுதிய எல்லோரும் புரிந்து கொள்ளும் வகையில் எழுத்து, சொல் என்ற இரண்டின் அடிப்படை இலக்கண அமைதிகளைப் பற்றிய பத்துத் தொடர் கட்டுரைகள் எழுதினார். இவற்றுடன் யாப்பு, அணி ஆகிய இரண்டு கட்டுரைகளையும் சேர்த்து வெளியிட்டதே நல்ல தமிழ் என்ற நூல். மொழி தொடர்பான இந்நூலில் பண்டிதம் இல்லாத எளிய மக்களுக்குப் பிழையில்லாத தமிழை எப்படி எழுதலாம் என்று கூறியுள்ளார். இதில் எழுத்து வகைகள், சொற்களின் அமைப்பு, சொற்றொடர் ஆக்கம், மயக்கம், அடிப்படை அமைதிகள் என அடிப்படை இலக்கணத்தைத் தெளிவாக விளக்குகிறார்.

**கங்கைக் கரையில் காவிரித் தமிழ்** என்ற இந்நூலில் கல்கத்தா தமிழ் மாணவர் மன்றத்தின் ஆண்டு விழாவின்போது இவர் நிகழ்த்திய உரைகள் இடம்பெற்றுள்ளன. இதில் சங்ககாலந்தொட்டு உரை நிகழ்த்தும் அன்று வரை வளர்ந்த தமிழ் இலக்கிய மரபை ஒட்டிய ஏழு கட்டுரைகள் பேசப்படுகின்றன. இவ்விழா முடிந்த பின் அதே ஆண்டு (1956) இக்கட்டுரைகளின் தொகுப்பு நூலாகியுள்ளது.

இந்நூலில் இடைக்காலத்தில் வாழ்ந்த கம்பர், சேக்கிழார் போன்ற பெரும்புலவர் தம் வரலாற்றையும், அவர் வழித் தமிழ் இலக்கியம் வளர்ந்த வகையினையும் கூறுகிறார். அத்துடன் இந்த நூற்றாண்டில் அதிலும் அவர் வாழுங்காலத்துத் தமிழ் இலக்கியத்தின் வாழ்வு எத்தகையது என்று காட்டுகிறார். இந்நூல் 1978 இல் ஐந்தாம் பதிப்பைக் கண்டுள்ளது என்பது குறிப்பிடத்தக்கது.

வரலாற்றுக் காலம் தொட்டு இக்காலம் வரை தமிழ் வளர்ச்சியினை ஒருவாறு காட்டும் இக்கட்டுரைகளின் மையக் கருத்துகளையும், சிறப்புறு செய்திகளையும் பற்றிக் காண்போம்.

கலையும் வாழ்வும் - கலை வாழ்வோடு கொண்ட தொடர்பு, கலை தோன்றவும், கலையை அனுபவிக்கவும் தேவைப்படும் நல்ல உள்ளம், கலை கலைக்காக மட்டுமல்ல, வாழ்விற்கும்தான் போன்ற செய்திகள் கூறப்படுகின்றன.

ஆசிரியர் விஞ்ஞானம் வேறு, கலை வேறு என்பார் கூற்றை மறுத்துக் கலைக்குள் விஞ்ஞானம் அடங்கும் என்கிறார். கலை சமூகத்தின் விருப்பத்தை உண்டாக்குவது, வெளிப்படுத்துவது விஞ்ஞானம். அவ்விருப்பத்தைச் செயலாக நடைமுறைப்படுத்துவது கலை.

மனிதனுடைய அக உண்மைகளைக் (poetical truth) கூறுவது கலை. விஞ்ஞானம், பொருள்களின் உண்மையைக் கூறுவது. இவ்வாறு அடிப்படையைப் புரிந்து கொண்டால்தான் மேலும் மேலும் வளர்ச்சியடைதல் இயலும்.

தமிழ் இலக்கிய வளர்ச்சி - மொழியின் தோற்றம் தொடங்கிப் பாரதி வரை இலக்கிய வளர்ச்சி காட்டப்படுகிறது.

காப்பிய உலகம் - மக்கள் வாழ்வுக்குப் புறம்பாக அமைந்து, வாழ்வோடு பொருந்தாத இலக்கியங்கள் வாழ்வாங்கு வாழ்வதில்லை.

சேக்கிழார் தந்த செல்வம் - இயற்பகை நாயனார் தன் மனைவியை எவனுக்கோ கொடுப்பதைச் சுட்டிச் சேக்கிழாரைப் பலர் குறை கூறுவர். ஆசிரியர், சேக்கிழார் எப்படிக் குற்றவாளியாக முடியும்? உள்ளதை உள்ளவாறு வரலாற்றுக் கண்வழி ஆராய்ந்து எழுதிய கதையிலே இதைவிட்டு வேறு எந்தக் கற்பனையை நுழைப்பது? என்று கூறுவதுடன் சேக்கிழார் இயற்பகையார் செயலைத் தவறு எனக் கண்டிக்கிறார். வந்த அடியவரிடம் தன் மனைவியை ஒப்படைக்க, அவன் அழைத்துச் செல்வதைக் கண்ட, அருகில் உள்ள சுற்றத்தார் வன்மையாக எதிர்த்தனர். தடுத்தனர், போரிட்டு இறந்தும் பட்டனர் என்று காட்டுவதன் வழி அச்செய்கை சமுதாய விரோதமானது என்பதைத் திட்ட வட்டமாக விளக்குகிறார் (ப77).

கம்பர் என்ன சொன்னார் - தமிழ் மக்களை இழித்துரைக்கும், ஆரியனைத் திராவிடன் வென்ற கம்பராமாயணம் தமிழ்நாட்டுக்கு வேண்டாத ஒன்று என்பார் கருத்தை மறுத்து, கம்பன் பச்சைத் தமிழன், இராமன், இராவணன் இருவரும் ஆரியரே என்று நிறுவுகிறார்.

புகழேந்தியார் - இவருடைய இயற்பெயரும், குலமும், பிறவும் தெரியவில்லை. தெரியாதிருப்பதுதான் நல்லது. இந்த அநாகரிக உலகத்தில் ஊரும், குலமும் அறியும் வகையில் வள்ளுவரும் பிறரும் இருந்திருப்பின் இந்நேரம் புதைக்கப்பட்டிருப்பார்களோ என அஞ்சுகிறார்.

பாரதியாருக்குப்பின் - இவருக்குப்பின் தமிழ் இலக்கியம் வளர்ச்சி குன்றி மறைந்து விட்டது என்பார் கூற்றை மறுத்து, “எந்த மொழியும் ஓர் எல்லையில் நின்று தன் இலக்கிய வளர்ச்சிக்கு முற்றுப்புள்ளி வைத்து விடுமானால் அது செத்த ஒன்றாகி விடுமே யன்றி வாழ்வதாகாது. நம் தமிழ்மொழி என்றும் வளரும் மொழியாகவே உள்ளது” (ப137) என்கிறார்.

## கொய்த மலர்கள்

பல இதழ்களுக்கு எழுதிய கட்டுரைகளின், சில சொற்பொழிவுகளின் தொகுப்பே **கொய்த மலர்கள்**. இதிலுள்ள 17 கட்டுரைகளும் வெவ்வேறு காலத்தில் வெவ்வேறு தேவை கருதி எழுதப்பட்டவை. இருப்பினும் சில பொருள் வகையில் ஒத்துள்ளன. **கடவுள், மொழி, உள்ள அழகு, உடல் அழகு** பற்றிய கட்டுரைகள் இதில் இடம்பெறுகின்றன. மக்கள் வாழ்வுக்கும், சமுதாயத் தேவைக்கும் இன்றியமையாத பொருளின் அடிப்படையில் இவை அமைகின்றன. இக்கட்டுரைகளின் மையக் கருத்துகளையும், சிறப்புறு கருத்துகளையும் காண்போம்.

**கைத்தறி ஆடைகள், வண்ண ஆடைகள், உடையும் தையற் கலையும்** என்ற முதல் மூன்று கட்டுரைக்ள் ஆடை பற்றியன.

1. ஆடை மனிதப் பண்பாட்டின் மைல்கல். ஆடை பற்றிய அறிவை இலக்கியங்கள் வழி அறியலாம் : எந்திர (மில்) வளர்ச்சி கைத்தறி வளர்ச்சியைப் பாதிக்கிறது.

2. தமிழர் 5000ஆண்டுகளுக்கு முன்பிருந்தே ஆடைகளுக்கு வண்ணங்களிட்டு உடுத்தி வந்தனர்.

3. பழங்காலந்தொட்டு விளங்கிய தையற்கலை இன்று சிறந்து விளங்குகிறது.

இம் மூன்று கட்டுரைகளுமே காலங்காலமாக இருந்து வரும் ஆடை பற்றிய அறிவை மேலும் வளர்ப்பதற்குச் சேர்ந்து உழைப்போம் என்று கூறுவதாக அமைகின்றன.

**சங்ககாலச் சைவம்** - சமயம் மக்களை ஒப்ப மதிக்கும் தகையது; கடவுள் ஒருவனே; சிவ சமயம் தமிழகத்தில் தொன்மையான முதன்மைச் சமயம்.

## பேர் வேண்டேன்

மன்னர் பொறாமைக்கு ஆளான வாதவூரார் ஊர் வேண்டேன், பேர் வேண்டேன் என்று எண்ணி இறைவனை நாடிச் சென்றவர். பொறாமைக்கு ஆளாக வைக்கும் புகழைத் தேடாதீர்கள். மேலும் தேடிய புகழ் வாழுங்காலம் வரையே நிற்கும். உண்மைப் புகழ் என்றென்றும் நிற்கும்.

**உயிர்த்துன்பம் உன் துன்பம்** - மரம் செடிகளுக்கு உயிர் உண்டு என்பதை வங்க அறிஞர் வசு அண்மையில் தான் கண்டுபிடித்தார். ஆயின் இவ்வுண்மை தொல்காப்பியர் காலந்தொட்டு இன்றுவரையுள்ள இலக்கியங்களில் ஒலிக்கிறது.

சமதர்மச் சமுதாயம் - சமதர்ம உணர்ச்சி அன்று முதல் இன்று வரை புலவர்களால் வற்புறுத்தப்படுகிறது. இன்று இதை அரசியல் கட்சிகள் பின்பற்றுகின்றன. இதனை எட்ட, சாதி, சமயம், கட்சி போன்ற வேறுபாடுகளை மறந்து உளம் ஒன்றிச் செயல்பட்டு முன்னேறுவோம் என அறிவுறுத்துகிறார்.

வெற்றிக்கு வழி - அரசு தீட்டிய திட்டங்களுக்குச் செலவு செய்த பணம் மிகப் பெரிது, பயனோ மிகமிகச் சிறிது என்று கூறி அதற்கான காரணங்களை அலசி, தீர்வுகளைக் கூறித் திட்டம் தீட்டுமுன் எண்ணிப் பின் செயல்பட, அதுவே வெற்றிக்கு வழி என்கிறார்.

எல்லைப் போராட்டம் - விலங்கு, தனிமனிதன், குடும்பம், வீதி, நாடு, உலகம் இவற்றிடையே எல்லைப் போராட்டம் என்று இல்லையோ அன்றுதான் நாடும், உலகும், நாமும் வாழ்வோம்.

அண்டை நாடுகளான சீனா - பாகிஸ்தான் இந்தியாவுடன் எல்லைப் போராட்டத்தைத் தொடர்ந்து தான் வருகின்றன. தற்பொழுது சீனாவில் வெளிவந்த பத்திரிகையில் சீனா இந்தியாவைச் சேர்ந்தது தான் என்ற கருத்து இடம்பெற்றது. இதைச் சீனரும் ஒப்புக் கொண்டதாக இந்திய நாளிதழ்களும் தெரிவித்துள்ளன. இதன்வழி நிரந்தரத் தீர்வு வந்துவிடவில்லை. இன்னும் ஒற்றுமைக்குத் தேவையான ஆதாரங்கள் நிரூபிக்கப்படவேண்டும்.

எல்லோரும் உவப்பது - நல்லது செய்யாவிட்டாலும் பரவாயில்லை; கெட்டதைச் செய்யாதீர்கள்.

ஒருசொல் கேளீர் - உலக மொழி அளவில் தமிழ்மொழி சிறப்புற்றிருக்கிறது. ஆயினும் தமிழர் பலர் இதை உணரவில்லை. தாய்மொழியை விடுத்து அயல்மொழியினை வாழ வைத்தால் தமிழனை இந்திய வரைபடத்தில் இருந்து தொலைத்துவிடும். எனவே தமிழ்மொழி எங்கும் எம்மூலையிலும் செழிக்க வழி கூறுகிறார்.

வள்ளுவர் காட்டிய காதல் நெறி - காதல் என்பது உள்ளத்து உணர்வு, பிறவிதோறும் வருவது. உள்ளத்தால் ஒன்றியவர் உடலால் பிரிய நேரிடினும் உள்ளம் ஒன்றியே வாழ்வர். ஊடல் கூடலைச் சிறப்பிக்கும்.

**வடமொழி – ஆரியம் – சமஸ்கிருதம்** - தமிழ் இலக்கண இலக்கியங்களில் வரும் வடமொழி, ஆரியம் என்பன இன்றைய சமஸ்கிருதத்தினும் வேறுபட்டவை. வடமொழி தமிழ்நாட்டு எல்லையில் வடக்கே - பக்கத்திலேயே வழங்கியதாகலாம். ஆரியம் ஒழுக்க நெறியில் உயர்ந்த ஆரியர், தமிழ்நாட்டில் வழங்கிய குழூஉக்குறி மொழி அல்லது வேறு வகையாக இருக்கலாம். இதனையும் பின் வடக்கிலிருந்து வந்த சமஸ்கிருதத்தையும் ஆரியமொழி என்ற பெயரால் ஒற்றுமைப்படுத்தி இருப்பர் (ப.131).

**உள்ளும் புறமும்** - உள்ளும் புறமும் ஒத்து வாழ்வதே பண்பாடு.

**மாணவர் நல்லவரே** - மாணவர்கள் நல்லவர்கள் தாம். இவர்களை நல்லவர்களாக வளர்த்து, நல்லவர்களாகவே வாழச் செய்து, அவ்வருங்காலச் சந்ததியை உருவாக்கும் பொறுப்பு அனைவருக்கும் உரியது.

**கவிஞன் யார்** - சாதாரண எளிய மக்களுடைய வாழ்வைப் பின்னி எழுந்த கவிதைகளே அவனை வாழவைப்பன.

**நாடகத் தமிழ்** - இது இடையிடையே நலம் கெடினும், இன்று நிலை தளரினும் மறையாது வாழ்ந்து கொண்டுதான் இருக்கிறது.

இங்ஙனம் பல கட்டுரைகளை ஆசிரியர் படைத்துள்ளார். ஏறத்தாழ ஏழு ஆண்டுகள் நடத்திய தமிழ்க்கலை இதழில் இவரது தலையங்கம் மற்றும் கவிதை அல்லது கட்டுரை ஒன்றும் இடம்பெற்றன. சில தமிழ்க்கலை இதழ்களில் ஆசிரியரின் இலக்கிய விழாச் சொற்பொழிவுகளிலும் இடம் பெறுவதுண்டு.

இவரது கட்டுரைகள் பயன்பாட்டு நோக்கில் தன்னிறைவு தருவனவாய் அமைகின்றன. தலைப்பிற்குப் பொருத்தமான செய்திகள் சுவைபடக் கூறப்படுகின்றன. இவர் இலக்கியச் செய்திகளைச் சிறப்புற விரித்துரைப்பது இலக்கிய மூலங்களைப் படித்தது போன்ற நிறைந்த அறிவைத் தருகிறது. இலக்கியங்களின்வழித் தெரிய வரும் அரிய உண்மைகள், அற்புத உண்மைகள், உணர்ச்சி மிகுந்த உண்மைகள் வியப்பைத் தருகின்றன. பண்பாட்டுச் செய்திகளை வெளிப்படுத்துவதில் கண்ணுங் கருத்துமாய்ச் செயல்படுகிறார். தலைப்பிற்குரிய விளக்கம், தலைப்பிற்கான கதைச் சுருக்கம், படைப்பாசிரியர் வரலாறு - குலம், அவரது பிற படைப்புகள், புராணக்கதை, நாட்டுப்புறக் கதை, அனுபவக் கதை, நாட்டு நடப்பு, நடைமுறை, அரசியல் வாழ்வு, காந்தியடிகள் கருத்து, அவர்தம் வாழ்க்கை நிகழ்வுகள், பெருந்தலைவர்களின் குறைபாடு

போன்ற பல கூறுகளைப் பயன்படுத்திக் கட்டுரைகளைச் சிறப்புற அமைத்துள்ளார். எளியநடை, புரிந்துகொள்ளும் வகையில் அமைந்த சிறுசிறு தொடர்கள் போன்றன படிக்கத் தெரிந்த அனைவரையும் படிக்கத் தூண்டுவனவாக உள்ளன.

## II. படைப்புகள்

கவிதை

அ.மு.ப., கவிதையுள்ளம் (இரண்டு தொகுதிகள்), பாரதி வாழ்வு போன்ற கவிதைகளை எழுதியுள்ளார். இவை தமிழ், சமயம், காதல், இயற்கை போன்ற பொருண்மைகளைப் பேசுகின்றன. இவற்றுள் பாரதி பற்றியும், தமிழ் பற்றியும் அமைந்துள்ள கவிதைகள் சிறப்பிடம் பெறுகின்றன.

இவரது பாரதி வாழ்வு (1936) என்ற படைப்பு 'தமிழகச் சிறப்பு முதல் இறுதி நாட்கள் வரை' ஒன்பது தலைப்புகளை உடையது. 43 விருத்தப்பாக்களைப் பெற்ற இச்சிறுநூல் கலிவிருத்தம், தரவு கொச்சகம், அறுசீர், எண்சீர் விருத்தங்கள் கொண்டது.' இதில் ஆசிரியருக்கு அமரகவி பாரதியிடம் உள்ள ஈடுபாடு, பாரதியின் வாழ்க்கை, தமிழ்நாட்டின் பெருமை, பாரதி என்ற பட்டத்தை அவர் பெற்றதற்குப் பாராட்டு, பாரதி கவிதைகள் இயற்றிப் புகழ் பெற்று வாழ்ந்த வாழ்க்கை, புதுவையின் சிறப்பு முதலியன அழகுறக் காட்டப்பட்டுள்ளன. இன் தமிழ்க் கவிஞன், தாயினுமினியன் என்று பாரதியின் பண்புநலனை இவர் பாராட்டுகிறார்.

வள்ளுவரை உள்ளிடுவீர் என்ற தலைப்பில் கவிதை படைத்து வள்ளுவரையும் குறளின் சிறப்பினையும் பாராட்டி இது மக்களை நன்முறையில் வாழவைப்பது என்று கூறுகிறார்.

திருவள்ளுவர் திருநாள் அமைத்துப் புகழ் பேசுங்கள் என்று கூறும் ஆசிரியர்,

> உலகெலாம் அவன் பெருமை ஓர்ந்து
> உயர்ந்திடு நிலையில்நாம் ஊமையராய்
> நிலவிடல் நீதியன்றோ

என்று கூறித் தமிழினத்திற்கு விழிப்புணர்ச்சி தந்திருக்கிறார். வள்ளுவனுக்கு விழா எடுத்தால் தமிழ்மொழி வாழ்வடையும் என்று கூறி, "உங்கள் குழந்தைகளின் இனமொழி குறளெனவே நிலவிடச் செய்திடுவீர்" என்றும் வேண்டியுள்ளார்.

பாரதியையும், வள்ளுவனையும் பாராட்டிய ஆசிரியர் அண்ணா முதலமைச்சராய் இருந்தபோது அவரை வாழ்த்திப் பாடியிருக்கிறார்.

செயற்கருஞ் செயல்கள் செய்திட்ட அண்ணாவுக்குத் திருத்தொண்டர் அண்ணா எனும் தலைப்பில் மூன்று பாடல்கள் பாடியுள்ளார்.

செந்தமிழை வளர்த்த தமிழ்ச் சான்றோர்களைப் பாராட்டும் ஆசிரியர் தமிழன்னையின் பெருமையைச் சில தலைப்புகளின் வழிப் பாராட்டியுள்ளார். பதினான்கு இனிய பாடல்களை உடைய தமிழன்னை எனும் தலைப்பில்,

உலகுக்கொரு நூல் உயர்ந்திடு நற்குறள்
உண்டாக்கி னாளவள் யார் – என்றும்
நிலவும் இளமைசேர் நேர்மை நலம்உறை
நித்திலம் போன்றவள் தாய்

என்று பாராட்டுகிறார். தமிழ் பெற்றுள்ள இலக்கிய, இலக்கணங்களை எல்லாம் கூறித் தமிழன்னைக்குத் திருப்பள்ளி எழுச்சி பாடுகிறார்.

ஒப்புனக்கொரு வரில்லை யிதுண்மை
உத்தமியே பள்ளி எழுந்தருளாயே

பத்து அறுசீர் விருத்தங்களால் ஆன குயில்பத்துள் தமிழின் பெருமையைக் குயிலின் வாயிலாகக் கூவ வைக்கிறார்.

வித்தகச் சோழரும் சேரர் வியன்நிலைப் பாண்டியர் யாரும்
ஒத்து வளர்ந்த தமிழே ஓங்கி வளர்ந்திடக் கூவாய்

இதில் முத்தமிழ் சுவைத்து, வள்ளுவன் பெருமையையும், சேரன் புகழையும் கூறிச் சிறப்புப் பெறு என்கிறார்.

குயிலே நீ கூவாய் (1972) என்ற தலைப்பில் தமிழின் பெருமையை அழகுபடப் பேசுகிறார். எனது வேட்கை எனும் தலைப்பில்,

பூமலராம் தமிழ்ப்பாதம் போற்றல் செய்யும்
பொற்றொழிலே நற்றொழிலாய்ப் போற்றுவேனே

என்று கூறுகிறார்.

தியதெலாம் ஒழிய நன்மையெலாம் ஓங்க
அருந்தமிழ் நாடதனைப் பிரிக்க அவாவு நெஞ்சே

என்று நெஞ்சை முன் நிறுத்திக் கூறுகிறார். அதாவது தமிழ் சிறந்து வாழத் தமிழ்நாடு தனிநாடாக வேண்டும் என்று வெள்ளையர் ஆட்சிக் காலத்தில் கூறியிருக்கிறார். இவ்வாறு நெஞ்சே கேள் என்ற தலைப்பில் ஏழு எண் சீர் விருத்தங்களில் கூறுகிறார். இவற்றில் ஆதியில் சாதிகள் இல்லை, நம் குலமும் கும்பிடு கடவுளும் ஒன்று என்று கூறுகிறார்.

வருவதும் போவதும் எனும் தலைப்பில் தமிழின் மேன்மையைக் கூறத் தமிழைத் தலைவி ஆக்குகிறார். தன்னை விரும்பாத தமிழ் மகனை, தமிழையே காதலியாக விரும்பும் தலைமகனை அந்நிய மொழியாகிய பெண் தானே வலிய வந்து விரும்புவதாக இதில் படைத்துக் காட்டுகிறார். நூற்று நாற்பது அடிகொண்ட அருமையான இந் நிலைமண்டில ஆசிரியப்பா தமிழுணர்வு ஊட்டுவதாக அமைந்துள்ளது. அதுமட்டுமல்ல தமிழை மறந்து பிறமொழி மோகத்தில் சிக்கினால் இடர்ப்பட நேரிடும் என்றும் அறிவுறுத்துகிறது.

'அமுப.வின் கவிதைகள் சொல்லழகும், பொருளழகும் நிரம்பப் பெற்றவை. கற்பனை வளமும், நடையோட்டமும் கொண்டவை. இவரது கவிதைகள் காலத்தை வென்று வாழத்தக்கன எனின் அஃது உண்மையுரையாய்த் திகழும் என்பது ஒருதலை.'[10]

## கவிதையும் வாழ்க்கையும்

இவரது **கவிதையும் வாழ்க்கையும்** (1963 - 510 பக்கங்கள்) என்ற திறனாய்வு நூல் பாடல்களின் மீது இவருக்கு இருந்த உள்ளார்ந்த பற்றை வெளிப்படுத்துகின்றது. நல்ல கவிதையும், வாழ்வும் பிரிக்க முடியாதன என்பதை இந்நூல் உணர்த்துகின்றது. இது கவிதை, வாழ்க்கை, கவிதையும் வாழ்க்கையும் எனும் மூன்று பெருந்தலைப்புகளையும், கவிதையும் கவிஞனும், கவிதையின் வகைகள், மனித வாழ்க்கை, கம்பரும் சேக்கிழாரும் போன்ற உள் தலைப்புகளையும் உடையது.

## நூல் உணர்த்தும் செய்தி

பத்துப்பாட்டு, எட்டுத்தொகை, குறள், காப்பியம், சமய இலக்கியம், பிற்கால இலக்கியம், இக்கால இலக்கியம் போன்றன அகத்திலும் புறத்திலும் மக்கள் வாழ்வோடு தொடர்பு கொண்டு வாழ்கின்றன. கவிதை ஒரு கலையாய் வாழ்வொடு பின்னிக் கொண்டே வளர்ந்து வருகின்றதால் மக்கள் வாழ்வையும் பண்பாட்டையும் பிறநிலைகளையும் கண்டு, கருத்தால் உணர்ந்து உருவாகிய கவிதைகள் உலகம் உள்ளளவும் நிலைத்து வாழ்வன. இக்கவிதைகள் மட்டுமல்ல படைத்த கவிஞரும் வாழ்வர்.

## நாடகம்

அமுப., வேள்பாரி (முதற்பதிப்பு 1950, இரண்டாம் பதிப்பு, 1954), சாதி வெறி (1950), இந்திய முதற்சட்டம் (1950), பாசம் (1955), வழுவிலா மாணிக்க வாசகர் (1966) போன்ற நாடகங்களை எழுதியுள்ளார். இவற்றுள் முதற் சட்டமும், சாதி வெறியும் சீர்திருத்த நாடகங்கள். மற்ற மூன்றும் வரலாற்றுப் பின்னணியில் உருவாக்கப்பட்ட சிறந்த ஆய்வு நாடகங்கள். இவற்றில் தொடக்கம், வளர்ச்சி, திருப்பம், முடிவு போன்ற அனைத்தும் இயற்கையாகவும், கவர்ச்சியாகவும் அமைந்துள்ளன."

### சாதிவெறி

சமுதாயத்திலுள்ள சாதிவெறி எனும் கொடுமையைக் கண்டு அதைக்களைய முற்படும் நோக்கில் இந்நாடகத்தைப் படைத்துள்ளார். இதில் மணிவண்ணனும், பொன்னியும் சீர்திருத்தத் திருமணம் செய்து கொள்கின்றனர். பேரா. சரவண முதலியார் தலைமையில் கிராம மாமன்றம் மணிவண்ணனின் தந்தையைச் சாதி விலக்குச் செய்து விடுகிறது. இது குறித்து நீதிமன்றத்தில் வழக்கு தொடரப்படுகிறது. இதற்கிடையில் முதலியாரின் மகள் வீட்டை விட்டு வெளியேறித் தமிழ் ஆசிரியனை, தாழ்த்தப்பட்ட இனத்தானைக் காதல் மணம் செய்து கொள்கிறாள். இதனால் பைத்தியம் பிடித்து அலைந்து திரிந்த முதலியார், இறுதியில் மணிவண்ணன் துணையால் தன்னைக் கண்டுபிடித்த மகளால் பைத்தியம் தெளிந்து மனம் திருந்தி மணமக்களை வாழ்த்தி மகிழ்கிறார்.

இதில் உயர் சாதியார், படித்தவர் இவர்களிடையே மண்டிக்கிடக்கும் அறிவுக்கும், அறத்திற்கும் பொருந்தாத பாழ்நெறிக் கருத்துகள் (பக். 5-14) பாத்திரங்கள் வழி வெளிப்படுகின்றன. காட்டு:

> ஊருக்குப் பல சாதி, தெருவுக்குப் பல சமயம், சாதிக்கு ஒரு நீதி என்று கட்சி கட்டிக் கொண்டு, அவற்றின் காரணமாகக் கொள்ளையும் கொலையும் புரியும் இன்றைய தமிழ்நாடு எங்கே? (பக். 35-36)

முதலியார் நாடு முன்னேற சாதி முதலிய பிணக்குகள் ஒழிய வேண்டுமெனக் கூறிவிட்டுத் தன் குடும்பம் என வரும் போது சாதிவெறி பிடித்து ஆடுவது ஊருக்கு உபதேசம் தனக்கில்லை என்பதைக் காட்டுகிறது.

வழக்கின் முடிவு நாடகத்திற்கு மகுடமாக இருக்கிறது. "வாதி, பிரதிவாதிகள் சமூகத்திலிருந்து மட்டுமல்ல மனித இனத்தில் இருந்தே

நீக்கப்பட வேண்டியவர்கள். இனி இந்த முறையில் வழக்குகள் வர வழியே இல்லை. எனவே வழக்கைத் தள்ளுபடி செய்கிறேன். இருவரும் ஒன்றி வாழ வேண்டும். சாதி வெறி ஒழிந்து உண்மை ஓங்க நாடு வாழும்" என்று வரும் நீதிமன்றத் தீர்ப்பை ஆசிரியர் நாடகத்தில் அழகுபட (ப. 83) அமைத்துள்ளார்.

## இந்திய முதற்சட்டம்

சாதி வெறி நாடகத்தில் உயர்ந்த சாதி தாழ்ந்த சாதியை மணக்கிறது. இதில் பணக்கார சாதி ஏழை சாதியைக் காதல் மணம்புரிகிறது. இந்நாடகங்களில் பெண்களுக்குத் தெளிவையும் துணிவையும் உருவாக்கித் தாம் விரும்பிய ஆடவரை மணந்து கொள்வதாக அமைப்பது நாடகத்திற்கு வெற்றியையும், பெண்ணுலகுக்குப் பெருமையையும் தருவதாக உள்ளது. மேலும் இவற்றில் ஊரும், நாடும், உலகும் முன்னேற வேண்டும் என்ற நல்ல நோக்கமும், நல்லறக் கருத்துகளும் முதுகெலும்புகளாக உள்ளன.

தொண்டு செய்யச் சென்றவர்கள் காதலில் வீழ்வதும், சிக்கலில் அகப்பட்டுத் தவிப்பதும், செய்யாத குற்றத்திற்குச் சிறை செல்வதும், உண்மை வெளிப்பட்டபின் வெளிவருவதும், எண்ணியபடி திருமணம் செய்து கொள்வதும் கதையின் சுருக்கமாகின்றன.

இதில் உள நூல் கருத்திற்கேற்ப நிகழ்ச்சிகள் பின்னப் பட்டுள்ளன. இதற்குக் குறட்கருத்து, பழமொழி, பாரதி பாடல், பிறநூல் கருத்து போன்றவை பக்கபலமாகின்றன.

பட்டக்கல்வி கற்போர் ஊர்தோறும் சென்று, ஊர் முன்னேற்றத்துக்கு இரண்டாண்டுகள் தொண்டு செய்து வெற்றி பெற்ற பின்னரே பட்டம் பெறவேண்டும் என்ற கருத்து இந்நாடகத்தில் தெளிவாகக் கூறப்படுகிறது. உலகச் சிக்கல்கள் நீங்க, அறக்கருத்துகள் வலுவேற, தொண்டும், உழைப்பும் சிறக்க, சாதி ஒழிய, பொருளாதார விடுதலை பெற இதுவே முதற்படி என்று ஆசிரியர் நினைப்பதால் இதனை வற்புறுத்துகிறார்.

தலைவன் தலைவியின் பெருங்குணம், பெருந்தியாகம், அருந்தொண்டு, பொறுமை, தீமை செய்பவருக்கும் நன்மை செய்யும் இயல்பு போன்றவற்றின் வழி அனைத்தும் நன்மைக்கே என்ற உண்மையை வெளிக்காட்டுகிறார்.

'எந்தக் கழுதையானாலும் வெள்ளிச் செருப்பாலடி' என்று கூறுவது நகைச் சுவையை ஏற்படுத்துகிறது. அதுபோல் அழுகை,

இளிவரல், பெருமிதம், மருட்கை, உவகை போன்ற சுவைகள் ஆங்காங்கே இழையோடுகின்றன.

### வேள்பாரி

எல்லாப் பேறுகளையும் அளவுக்கு மீறிப் பெற்றுள்ள மன்னருக்குப் பெறுதற்கரிய பேறாக உள்ளது புகழ் ஒன்றே. இவர்கள் தம்மினும் மேம்பட்ட புகழுடையவர்களைக் கண்டால் பொறாமை கொள்வர். இந்த இயல்பை விளக்குவதே வேள்பாரி, வழுவிலா மாணிக்க வாசகர் என்ற நாடகங்கள். இவையிரண்டும் இலக்கியச் சான்றுகளால் கிடைத்த வரலாற்றுச் செய்திகளோடு கற்பனையும் கலந்து படைக்கப்பட்டுள்ளன.

அவ்வகையில் பாரியின் சிறப்பையும், மூவேந்தரால் அவனுக்கு ஏற்பட்ட அழிவையும், கபிலரும், ஔவையும் பாதுகாப்பு அளித்த பாரிமகளிர் திருமணத்தையும் வேள்பாரி மையப்படுத்துகிறது.

பாரி தன் நாட்டில் உயிர்க்கொலை கூடாது என ஆணையிட்டு, கொலைத் தொழில் செய்யும் வேடர்களை வேளாண்மையில் ஈடுபடுத்தி மனநிறைவோடு, ஒரு குறைவுமின்றி வாழுமாறு முன்னேற்றுகிறான். இது போன்ற சிறப்புகளைப் பெற்ற பாரி மீது கொண்ட பொறாமையால் மூவேந்தர் அவனை அழிக்கின்றனர்.

பாரியை மூவேந்தர் கொன்று விடுவர் என்றுணர்ந்த கபிலர், பாரியின் தேவியைத் தப்பியோடுமாறு கூற, மறுத்த தேவி பொறாமை, தன்னலங்களின் விளைவுகளை விளக்கிக் கூறித் தீக்குளிக்கிறாள். இக்கட்டான சூழ்நிலையில் அமைந்த இந்த விரிவான நீண்ட சொற்பொழிவை இயல்பாக ஏற்க மனம் மறுக்கிறது.

ஔவைக்குக் கொடுத்தனுப்பிய பரிசிலை வழிப்பறி செய்து கொண்டு ஔவையாரை மீண்டும் வரவழைத்து அவரோடு பாரி அளவளாவல், தந்தையை இழந்து அந்தணர் வீட்டில் தங்கியிருந்த பாரிமகளிர் ஔவைக்கு நீலச் சிற்றாடை அளித்தல் போன்றன சங்கப் பாடல்கள் காட்டாதவை.

பாரியின் மகளிரைக் கபிலரே ஔவையிடம் ஒப்படைப்பது, ஔவை திருக்கோவலூர்க் காரியின் மக்கட்கு மணம் செய்து வைப்பது, திருமணத்திற்கு மூவேந்தரை வருவித்து வாழ்த்துரை வழங்க வைப்பது, அதுபோது ஔவை தமிழினம் பிரிந்து வாழக்கூடாது, அனைவரும் நாட்டையும் நாகரிகத்தையும், நற்பண்புகளையும் காத்துச் சிறத்தல்

வேண்டும் என்று அறிவுரை வழங்குவது போன்ற புதுக்கருத்துகள் பலவற்றுடன் நாடகம் இனிது முடிவுறுகின்றது.

## வழுவிலா மாணிக்கவாசகர்

பக்திச் சுவை நிரம்பிய இந்நூலின் முன்னுரையில் ஆசிரியர் "மன்னன் குதிரை வாங்கக் கொடுத்த பொருளை ஆலயத்திற்கும், அடியாருக்கும் செலவிட்டார் என்று பார்த்தால் மாணிக்கவாசகர் குறையுடையவரே. அப்படியிருப்பின் அவரை வழுவிலாத பேர் மாணிக்க வாசகன் என இறைவனே பாராட்டியிருப்பாரா? இறைவன் தம்பொருட்டு நரியைப் பரியாக்கியதையும், பிட்டுக்கு மண் சுமந்ததையும் திருவாசகத்தில் பாடியுள்ள இவர், வழுதியின் இசைவின்றி அவன் பொருளைக் கோவில் கட்ட, தொண்டர் பணி செய்யப் பயன்படுத்தியிருப்பின் அதையும் பாடியிருப்பார் அல்லவா? பாடாததால் குறித்த காலத்தில் பரி வாங்க இயலாமையால், மன்னர் பொருளை அமைச்சர்கள் வழி அனுப்பிவிட்டு, அவர் பொருளையே அறப்பணிக்குச் செலவிட்டுள்ளார்.

பொறாமை கொண்ட அமைச்சர்களின் வலையில் மாட்டிய மன்னனுக்குப் புகழ் பற்றிய பொறாமை மேலோங்குகிறது. அதனால் மன்னன் வீண்பழி சுமத்துகிறான். இந்த உண்மையை உணராத புராண ஆசிரியர்கள் வாதவூரார் மீது வழுவமையுமாறு பாடிவிட்டனர்".[12] என்கிறார். இதனை உணர்த்தவே ஆசிரியர் நாடகம் படைத்துள்ளார். இதில் பகுத்தறிவால் போராடி, கற்பனையால் விடை கூறும் நாடக உத்தியைப் பின்பற்றியுள்ளார்.

இறைவன் முதுகில் பட்ட அடி அவரவர் முதுகில் மட்டுமல்ல, அவரவர் செய்த கொடுமைக் கேற்ப வாழ்வில் வயிற்றில் மனைவி மேல் மற்றெல்லாவற்றிலும் பட்டுள்ளது. இக்கருத்து அவரவர் செய்த வினையை அவரவர் அனுபவிக்க வேண்டும். இவ்வினை நீங்கும் வழியாகிய இறைவனை மறந்தால் தப்புதல் இயலாது என்பதை உணர்த்துகின்றது.

நாடகத்தில் அமைச்சன் பெருஞ்சாத்தனும், மற்றோர் அமைச்சன் பழனிக் கொற்றனும் பெருங்குற்றவாளிகள். அடுத்தது அரிமர்த்தனன். இவர்கள் அடிபட்டும் பிழைக்கின்றனர். ஆனால் சாத்தனின் காதல் பரத்தையும், கொற்றனின் தாயும், மன்னனின் ஒரே மகனும் அவ்வடி தாங்காமல் இறக்கின்றனர். பரத்தை காமவலை வீசியதாலும், தாய் கையூட்டு வாங்கியதாலும் இறக்கின்றனர். ஆனால் ஒரு குற்றமும் செய்யாத மன்னன் மகன் ஏன் இறந்தார் எனத் தெரியவில்லை.[13] ஆசிரியர்,

ஒரே மகனின் இறப்பு மன்னனுக்கு வாழ்நாள் தண்டனையாக இருக்கவேண்டும் என்று நினைத்தாரா!

### பாசம்

இந்நாடகம் இரண்டு பகுதிகளாக அமைந்துள்ளது. முதற்பகுதி கன்னோசியில் அர்ஷப் பேரரசு நிலைத்த வரலாற்றைக் கூறுகிறது. இரண்டாம் பகுதி சீன யாத்திரிகன் புத்தரின் அருள்நெறியின் மீது கொண்ட பாசத்தால் பாரத நாடு வந்து, பல இடங்களுக்குச் சென்று சமய நெறிகள் பலவற்றைக் கற்றுச் சென்ற பயண வரலாற்றைக் கூறுகிறது.

இதில் நாட்டுப் பாசம், தாய்மொழிப் பாசம், பெற்றோர் பாசம், மகப் பாசம், உடன்பிறப்புப் பாசம், குடும்பப் பாசம், அரசாட்சிப் பாசம், குடிமக்கள் பாசம் ஆகியவை விளக்கப்பட்டுள்ளன. ஆசிரியர் தம்முடைய முன்னுரையிலும் பாசத்துக்கு மேம்பட்டதும், ஈடானதும் வேறு எதுவுமே இல்லை என விளக்குகிறார். யுவான்சுவாங் நாடுவிட்டு நாடு வந்தது புத்தர் மேலும், அவர் பிறந்த நாட்டின் மேலும் கொண்ட பாசத்தால் தான் என்கிறார்.

இதில் தனியுயிர் விடுதலை பெற்றுச் சாந்தி அடையும் ஈனயானமும், தாம் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம் என்னும் பெருநோக்கால் பிறரையும் பிறவுயிர்களையும் முன்னேற்ற வல்ல மகாயானமும் விளக்கப்பட்டுள்ளன.

இவரது நாடகங்கள் கீழ்சாதி, மேல்சாதி, வறுமை, செல்வம், புகழ், பொறாமை போன்றவற்றால் உருவாகும் ஏற்றத் தாழ்வுகளை, அறக்கேடுகளைப் படம் பிடித்துக் காட்டுகின்றன. இவற்றை எல்லாம் நீக்கும் ஆற்றல் பெற்றதும், நல்லுலகத்தை உருவாக்க வல்லதும் பாசம்தான் என்பதைத் தமது ஐந்தாவது நாடகத்தின் வழி உணர்த்தி ஒற்றுமைக்கு வழி கோலுகிறார்.

### புதினம்

வாழ்வுப் பாதை, துன்பச் சூழல் போன்றன இவர் எழுதிய நாவல்கள். மனத்தின் உணர்ச்சிகள், வாழ்வின் போராட்டங்கள் ஆகியவற்றை அடித்தளமாக்கி, உணர்ச்சியைக் கொட்டி, கருத்தைச் சேர்த்து இவர்தம் நாவல்களை உருவாக்கியுள்ளார்.

## வாழ்வுப்பாதை

### கதைச்சுருக்கம்

நிலநடுக்கம் காரணமாக, கதைத் தலைவன் தன் தாய்நாடு விட்டு வேறிடம் செல்கின்றான். செல்லும்போது எதிர்கால நலனுக்காக உயிரற்ற உடலின் மீதுள்ள அணிகலன்களைக் கழற்றிச் செல்கிறான். அது அவன் அமைதியை அவ்வப்போது கெடுக்கிறது. யாருமற்ற அவனையொத்த அனாதைகட்குக் கிடைத்த அரசு உதவியுடன் வாணிகம் செய்து பொருளீட்டுகிறான். அதுபோது தான் திருடிய அணிகலன்களுக்குரிய உறவினர் ஒருவரைப் பார்த்ததால் அமைதி இழந்து, கடல் வழியே வேறிடம் புறப்படுகிறான்.

கப்பலில் அறைத்தோழன் நகைகளுக்காக இவனைக் கடலில் தள்ளி விடுகிறான். வணிகம் செய்தபோது கிடைத்த ஊதியமான கழுத்தணிகலன் மட்டுமே துணைநிற்கிறது. மற்றொரு கப்பலால் காப்பாற்றப்பட்டு, நிறவேறுபாடு பாராட்டும் வெள்ளையர் தீவுவொன்றில் வேலையும் பெறுகிறான். பின் தனியே மரவாணிகத்தில் ஈடுபடுகிறான். வேட்டையின் போது அகப்பட்ட விலங்குகளிடமிருந்து தப்பிக் காட்டு வெள்ளம் வழியாக ஒரு மண்ணுலக விண்ணுலகை அடைகிறான். அந்நகர் மிக வளமானதும், சிறு குற்றத்திற்கும் இடமில்லாததும் அனைத்து வகையிலும் மேம்பட்டதுமாக இருக்கிறது. அதில் வாழ்ந்து வந்த அவன் தன் தாய்நாடு திரும்புகிறான். இங்குள்ள அவலங்கள் என்றழியுமோ என்ற ஏக்கத்துடன் அவன் வாழ்வு தொடர்கிறது.

### கதைக்கரு

துன்பங்களை, துயரங்களைத் தாங்கிச் செப்பனிட்டு ஆக்கத்திற்கு வழிதேடிச் செம்மையான வாழ்வமைத்தல் வேண்டும் என்பதே கதையின் கரு. ஒவ்வொரு நிகழ்ச்சியிலும் கதைத் தலைவன் இதனைக் கருத்தில் கொண்டே வாழ்கிறான்.

### உட்கிடக்கை

கதைத் தலைவன் சென்றடைந்த, ஒரு மண்ணுலகமானது, விண்ணுலகம் போல் வசதிகளும், வளமும், வனப்பும், இன்பமும், நிறைவும், அழகும், செழிப்பும் பெற்றுத் திகழ்கின்றது எனக் காட்டுவதன் வழி வறுமையறியா வளநாடு உருவாக வேண்டும் என்ற தம் விருப்பத்தை வெளிக்காட்டியிருக்கிறார்.

## கதை சொல்லும் உத்தி

ஆசிரியர் நேரடியாகவோ, பாத்திரங்கள் வாயிலாகவோ, பாத்திரங்களுக்குப் பின் இருந்தோ கதையைச் சொல்லுவது மரபு. இந்நாவல் முழுவதும் கதைத் தலைவனே கதை சொல்லுகிறான். அதனால் கதைப்போக்கு மிக இயல்பாகச் செல்லுகிறது. இது கொள்கை விளக்க முறைக் கதையாக உள்ளது. இனிய எளிய ஆற்றொழுக்கான தெளிந்த நீரோட்ட நடை, கதையைப் பட்டை தீட்டுகிறது. எண்ணற்ற கருத்துக் குவியல்களும், பழமொழிகளும், சங்கப்பாடல் கருத்துகளும் இடம்பெற்று நாவல் சிறக்கின்றது.

## பாத்திரங்கள்

### கதைத்தலைவன்

உயிரற்ற உடலின் மீதுள்ள அணிகலன்களைக் கழற்றிக் கொள்ளும் சிறுமையுள்ளம் கொண்டவனாயினும் அவனது வளமான சிந்தனைகள் அவனது பண்பை உயர்த்துகின்றன. ஒவ்வொரு நிகழ்விலும், அவனது உளப்பாங்கு, நிறைந்த கருத்துகளின் கொள்கலமாகத் திகழ்கிறது. காட்டு:

"மக்கள் வாழ்வின் தேவைகளை வரிசையாக எல்லோருக்கும் கிடைக்கும்படி செய்தால் லஞ்சத்தைப் பற்றி யார் நினைக்க முடியும்".[14]

மேலும் சகோதரத்துவம், உயர்வுதாழ்வு இன்மை கொண்ட உலகச் சமுதாயம் உறுதிப்பட இரத்தம் சிந்தவும் தயார் எனும் சிந்தனை போன்றன நீண்ட சிந்தனைகளுக்கு இடங்கொடுப்பனவாய் உள்ளன.

### துணைப்பாத்திரங்கள்

கதைத் தலைவன் தவிர மற்றவை துணைப் பாத்திரங்கள். கதைத் தலைவனது வாழ்வின் ஒவ்வொரு திருப்பத்திற்கும் ஒரு துணைப்பாத்திரம் துணை நிற்கிறது. கணவன் பிரிவுக்குப் பலவாறு வருந்தும் கதைத் தலைவன் மனைவி, 'என் தனிவாழ்வைக் காட்டிலும் உங்கள் நாட்டு வாழ்வு ஏற்றமுடையது' என விட்டுக்கொடுக்கிறாள்; சிறிது நேரமே இடம்பெற்றாலும் நினைவில் நிற்கிறாள். ஆசிரியர் தமது நாட்டுப்பற்றை இவள் வாயிலாகக் காட்டுகிறார்.

## துன்பச் சூழல்

இது சார்லஸ் டிக்கன்ஸ் அவர்களது Oliver Twist என்ற கதையை ஒட்டி எழுதப்பெற்ற நாவல்.

### கதைச்சுருக்கம்

தனியன் என்ற அனாதைச் சிறுவன் அனாதை விடுதியில் உணவு சற்று அதிகமாகக் கேட்டதற்காகத் தண்டனை பெறுகிறான். பின் பொன்னப்பரால் காப்பாற்றப்படுகிறான். அவரின் மனைவியும், மனைவியின் அண்ணன் மகனும் செய்யும் கொடுமைகளைத் தாங்காத அவன் வெளியேறியதால் கொள்ளையர் கும்பலில் அகப்பட்டுப் பல கொடுமைகளுக்கு ஆளாகிறான். முதல் திருட்டு அவனைச் செல்வநாதருடன் வாழச் செய்கிறது. கொள்ளைக் கும்பலில், தனியனிடம் தனியன்பு கொண்ட அழகி அவனைக் கண்டுபிடித்து விட, மீண்டும் கொள்ளையரில் ஒருவனாகிறான். பின் செல்வநாதரின் தங்கை வீட்டில் வாழும் பேறு கிடைக்கிறது. கொள்ளையர் பற்றி அழகி வாயிலாக அறிந்த செல்வநாதர், அவர்களைக் காவற்றுறையினர் பிடிக்கும்படி செய்கிறார். இதற்கிடையில் அழகியும், அவள் கருத்தைக் கவர்ந்த முருகனும் கொல்லப்படுகின்றனர். கொள்ளையர் தலைவன் தப்பித் தற்கொலை செய்து கொள்கிறான். செல்வநாதர் தனியன் தன் மகனே என உணர்கிறார்.

### கதைக்கரு

தனியனின் வாழ்வையும் அவனது வாழ்வின் துன்பச் சூழல்களையும் சித்திரிக்கின்றது. பொருளாதார ஏற்றத் தாழ்வுகள் நீங்கி, பொருளாதார உரிமை மலரும் போதுதான் கொள்ளை, கொலை போன்றன குறையும் என்கிறது.[5]

### கதைப்போக்கு

சொல்நடையும், உணர்வுப் பிழிவும் பின்னலிட எழிலார்ந்த கட்டுக் கோப்புடன் கதை நடைபோடுகிறது. நிகழ்வுகள் பரபரப்பாக அதே நேரம் இயல்பாகச் சித்திரிக்கப்படுகின்றன.

கடவுள் பெயரால் சின்னங்கள் ஏற்படுத்தி, வயிற்றுப் பிழைப்புக்கு வழி தேடும் இழிநிலை, வேடிக்கை, விளையாடல்களுக்காக விழாக்கோலம் காணுகின்ற மக்கள் மனம் போன்றவை கண்டனத்துக் குள்ளாக்கப்படுகின்றன. இருப்பினும் தனியனைக் குழவிப் பருவத்தில் காப்பாற்றிய கிறித்துவக் குல ஆச்சிரமத்தினரை, அவர்களது கல்விக்கூடம், மருத்துவ விடுதி போன்ற மெய்ப்பணிகளுக்காக ஆசிரியர் மனம் திறந்து பாராட்டுகிறார்.

ஆசிரியர் இப்புதினத்தில் சமுதாயக் குறைகளை வெளிப்படுத்தி நாட்டுப் பணியாற்றுகிறார். வயிற்றுப் பிழைப்புக்குச் சிறைபுகும் செயல்,

பெருங்கொள்ளையர்கள் நாட்டின் தலைவராக உலவும் நிலை போன்றவற்றை வெளிப்படுத்திக் கண்டிக்கிறார். திருட்டினை ஒழிக்க வழியும் கூறுகிறார். அதாவது உழைப்பவன் பயன்பெற வேண்டும். எல்லோரும் எல்லாமும் பெற வேண்டும். இந்த நிலைக்கு அரசாங்கமும் பொருளாதார அறிஞர்களும் முயன்று வழி வகுத்து, சட்டத்தாலும், திட்டத்தாலும் பாடுபட வேண்டும் என்கிறார்.

### பாத்திரங்கள்

### தனியன்

அனாதைச் சிறுவன் அடுத்தடுத்துத் துயரச் சூழல்களில் அகப்பட்டுக் கொள்ளும் போது நம் உள்ளம் துன்பத்தில் கசிந்து அவன்மீது தனி இரக்கத்தை ஏற்படுத்தி விடுகிறது.

### அழகி முதலானோர்

இவளது தொழிலோ கொள்ளை; உள்ளமோ வெள்ளை. தனியனைக் கண்டுபிடித்துக் கொடுத்துவிட்டு அவள்படும் துயர், தனியனிடம் காட்டும் தாய்ப்பாசம் என்பன இவளை உயர்த்துகின்றன. துன்பச்சூழலில் சுழன்று, இழுபட்டு, தத்தளித்துத் தடுமாறிக் கரையேறி விடுகிறான் தனியன். ஆனால் அழகியோ அழிந்து போகிறாள்.

பொன்னப்பரது துணைவி, செல்வநாதர் போன்ற பல பாத்திரங்களைக் குறையும் நிறையும் கலந்து கிடக்கும் இன்றைய சமுதாய வார்ப்புகளாகக் காட்டுகிறார்.[16]

தனிமனிதனுக்கும் சமுதாயத்திற்குமுள்ள உறவு முறைகள், அவற்றின் அடிப்படையில் தோன்றும் பிரச்சினைகள், சமுதாய நிலை, இந்நிலையை உணர்த்தும் மனித நடவடிக்கை, மனமாற்றம் போன்றன இவரது நாவல்களில் காட்டப்படுகின்றன. மனிதன் எவ்வளவு துன்பத்திற்கு ஆளானபோதும் அதிலிருந்து மீண்டு நன்னிலையை அடையவேண்டும் என்ற சமூகநீதியையும், நாடும் நாட்டு மக்களும் நன்கு உழைத்து வளமான நல்ல வாழ்க்கை வாழ வேண்டும்; அனைவரும் இன்புற்றிருக்க வேண்டும் என்ற தம் விருப்பத்தையும், இனிய உள்ளம் நல்ல வாழ்வுப் பாதைக்கு வழிகாட்டியாக விளங்க முடியும் என்பதையும் தம் படைப்புகளின் வழி உணர்த்துகிறார்.

### சிறுகதை

கறைபடிந்த உள்ளம், கண்டதும் கருத்தும் என்ற இரு சிறுகதைத் தொகுதிகள் இவர் எழுதியவை. முதல் தொகுதியில் கறைபடிந்த

உள்ளம். அன்னையின் தியாகம், சுந்தரர் சொன்னார், லஞ்சப் பேய், ஊருக்கு உபதேசம், அடிமுட்டாள், மேடுபள்ளம், நாட்டியக்காரி நளினி, கொள்வதும் கொடுப்பதும் என ஒன்பது சிறுகதைகள் உள்ளன.

## கறைபடிந்த உள்ளம்

மணமான ஆண்மகன், மங்கை ஒருத்தியைக் கண்டு மனந்தடுமாறித் தெளிவடைந்து, அம் மங்கையின் மனத்தையும் தெளிவடையச் செய்த கதை. இதில் பாத்திரங்கள் மாறிமாறித் தாமே கதை சொல்லுகின்றன. விரசமற்ற தூய அன்பு வெளிப்பாட்டுக் குறிப்புகள் இதனுள் உள்ள பாத்திரங்கள் உண்மையான மனமொழிகளால் தம்மைத் தூய்மைப்படுத்திக் கொள்ளுகின்றன.[17]

## அன்னையின் தியாகம்

பிறந்து விட்டதற்காகப் பரத்தை வீடே கதியான கணவன், மலடியாகிய சகோதரி, சகோதரன் ஆகியோரின் தனது சொத்து காரணமாக, தனக்கு வாரிசு கொடுமைக்கு ஆளாக்கப்பட்டவளின் கதை. கொடுமை தாங்காது உயிர் துறக்க முயன்ற அவள் அனைத்தையும் தன் மகன் பொருட்டு ஏற்பேன், அவனுக்காக அனைத்தையும் தியாகம் செய்வேன் என்ற உறுதியோடு வாழ்வுக்குத் திரும்புகிறாள்.

தாய் மனத்தின் எடை போட முடியாத அன்புப் பெருக்கைக் காட்டுமிது ஒரு நிகழ்ச்சி விளக்கக் கதை. இதில் பாத்திரம் தானே கதை சொல்லுகிறது.

## லஞ்சப்பேய்

ஓர் அதிகாரி, தனக்கு மேலுள்ளவர்க்குச் செய்ய, அவர் அவர்க்கு மேலுள்ளவர்க்குச் செய்ய எனத் தொடர்ந்து வாங்கப்படும் லஞ்சத்தைக் கண்டிக்கிறது இக்கதை. இதுவும் ஊருக்கு உபதேசமும் நிகழ்ச்சி விளக்கக் கதைகளே. அத்துடன் சமுதாயக் கறைகளை, சமுதாயத்தின் உண்மைகளை நகைச்சுவை மெருகுடன் வெளிப்படுத்தும் அனுபவ விளக்கக் கதைகளாகவும் உள்ளன.

## ஊருக்கு உபதேசம்

பெருவட்டி வாங்குவதை, கொள்ளையடிப்பதைக் கொடுமை என எழுதும் செய்தித்தாளாசிரியர், தன் மனைவி வட்டிக்குக் கொடுப்பதை ஆதரித்து அதுவே பிழைப்புக்கு வழி எனப் பேசுகின்றார்.

## மேடுபள்ளம்

தாழ்ந்தவன் உயர்நிலையை உறுதிபூண்டு எட்டுவதைக் காட்டுகிறது.

## நாட்டியக்காரி நளினி

எல்லோரும் புகழும் நாட்டியக்காரி நளினி அன்னதானத் திற்கெனச் செல்வர்களிடம் நெல் கேட்டுப் பெறுகிறாள். இறுதியில், அவ்வூரைச் சார்ந்த ஏழைச் சிறுமியே அந்நெல்லைப் பெற, அன்னதான நாடகமாடியதாகத் தெரிய வருகிறது. இது ஒரு புதிர்க் கதை.

## கொள்வதும் கொடுப்பதும்

பழுத்த சிவ வேடமிட்டு, ஆரவாரப் பூசை செய்யும் வேடதாரியை ஒழுக்கங் கெட்டவர் என உணர்த்திக் காய்கறிக்காரியின் கணவனிடம் உதை வாங்க வைக்கும் கதை.

கண்டதும் கருத்தும் என்ற தொகுதியில் சிந்தனை பிறிதாம், செந்நாய் நகர்ப் புராணம், காட்டு ராஜா தர்பார், பயன் இதுவே, ஜமீன்தார் எப்படி வந்தார் என ஐந்து கதைகள் இடம்பெறுகின்றன.

## சிந்தனை பிறிதாம்

தண்ணீர்ப் பஞ்ச காலத்தில் நீர்விட மறுக்கும் வீட்டவரைத் திட்டும் கிழவி, நீர்க்குழாய்க்குச் சிறிது நாள் உரிமை கிடைத்த போது நீர் பிடிக்க வருவாரை விரட்டி அடிக்கிறாள். கருத்து விளக்கமாக அமைந்த இந்நிகழ்ச்சிக் கதை மனித மனத்தை மிக இயல்பாகச் சித்திரிக்கின்றது.

## செந்நாய் நகர்ப் புராணம்

மனைவியருடன் தன்னை மறந்திருந்த மன்னன் முனிவரை மதிக்கத் தவறியதால் சபிக்கப்பெற்று, மனைவியருடன் செந்நாய்களாக மாறிப் பனந்தோப்புகளிலும், காடுகளிலும் சுற்றிக் கொண்டிருந்து பின் சாபவிமோசனம் பெறுகிறார். செந்நாய்கள் திரிந்த பகுதி ஷெனாய் நகர் ஆயிற்று என்று கதை முடிகிறது.

நகராட்சி ஆணையாளர் பெயரால் அமைந்த ஷெனாய் நகருக்கு இப்படியொரு பெயர் விளக்கக் கதை ஏற்பட்டாலும் வியத்தற்கில்லை என்று வேடிக்கையாகக் கூறுகிறார்.

இதன்வழி நாளுக்கொரு க்தை புனையும் மக்களது கண்மூடித்தனமான கற்பனைகளை ஆசிரியர் கண்டிக்கிறார். இது நல்ல நகைச்சுவைக் கற்பனை. எள்ளல் பாணியில் உள்ளம் தொடும் கதை.

## காட்டு ராஜா தர்பார்

மேலானவர்கள் கை ஓங்கியிருப்பதால் இடைப்பட்டோர் படும் துயரங்களைத் தடுத்து நிறுத்தும் நிலை உருவாக முடியாததை வடித்துக் காட்டும் அனுபவக் கதை.

## பயன் இதுவா

தவமிருந்து பெற்று வளர்த்த மக்கள் செல்வச் செழிப்புடன் வாழுங்காலத்துத் தாயைப் புறக்கணிக்கின்றனர். 'நான் ஒழிந்தால் நல்லது என்பது எதன் பயன், செல்வம் பெற்ற பயனல்லவா' என்ற தாயின் புலம்பல் பணத்தின் மீதுள்ள மோகத்தைக் காட்டுகிறது.

## ஜமீன்தார் எப்படி வந்தார்

இது, நாட்டிலே மேட்டுக்குடியினர் எங்ஙனம் அந்நிலைக்கு உயர்ந்தனர் என்ற ஓர் அழகான கற்பனைக்கதை. மீனவர் இனத்தவர் படிப்படியாக உயர்ந்து ஜமீன்தார்களாகிறார்கள் என்று வரலாற்றுக் கதை படைத்த ஆசிரியர், இறுதியில் குடியாட்சி மலர்ந்த காலை எல்லோரும் நாட்டு மன்னர்களாக ஓங்கியுயர்ந்த நிலையைக் காட்டிப் பெருமிதப்படுகிறார்.

காலக் கட்டுக் கோப்புக்குள் அடங்கும் இச்சிறுகதைகளில் ஆசிரியர் தம் தனித்திறனை, பரந்துபட்ட கற்பனை வளத்தினை வெளிப்படுத்துகிறார். சிறுகதைகளுக்கான கட்டுக்கோப்பு இவரது எக்கதையிலும் சிதையவில்லை. சின்னஞ்சிறு நிகழ்ச்சிகள் கூடச் சிறப்பான சிறுகதைப் பகுதிகளாகி அறிமுகமாகின்றன. உயிரோட்டம் உடைய கதைகளில் ஆசிரியரது அனுபவம் மெருகூட்டி நிற்கிறது. உயர்ந்த நடையில், எள்ளல் பாணியில் எக்கருத்தையும், நிகழ்ச்சியையும் எளிதாக மற்றவரது சொந்த அனுபவங்களாக்கும் கலை ஆசிரியருக்குக் கைவந்ததாகிறது. இக்கதைகளில் ஆசிரியரது மொழிப்பற்றும், இனப்பற்றும், நாட்டுப் பற்றும் இழைந்தோடுகின்றன.

இயலும் இடங்களில் எல்லாம் சங்கப் பாடல் கருத்துகள், பழந்தமிழர் கொள்கைகள், மொழியின் பெருமை முதலானவற்றை எடுத்துக் காட்டுகிறார். கதையும், கதைப்பாத்திரங்களும் நினைவில் நிழலாடுவது ஆசிரியரின் வெற்றியைக் காட்டுகிறது.

சமுதாயக் கூறுகளே கதைகளுக்குக் கரு. நாம் நாளும் காணும் நல்ல, நல்லன அல்லாத நிகழ்ச்சிகளும், அவை தொடர்பான மாந்தர்களும் ஆசிரியரால் பல கோணங்களில் ஆய்ந்து பார்க்கப்பட்டு அதன் விளைவால் உருவான சிந்தனைக் கதைகளாக இக்கதைகள் மலர்ந்துள்ளன. தாம் தெளிவுபடச் சிந்தித்து, அதைத் தெளிவுபடக் கூறிச் சிந்திப்பார்க்குப் பல அருமையான கருத்துகளை அள்ளி வழங்கியுள்ளார். பிறர் உளந்தொட எழுதுவதே ஓர் உயர்கலை என்று கூறியுள்ள ஆசிரியர் அதைத் தம் படைப்புகளில் மெய்பித்துக் காட்டியுள்ளார்.

## முடிவுரை

இதுகாறும் கூறியவற்றைக் கொண்டு அ.மு.ப.வின் படைப்புகள் எங்ஙனம் படைக்கப்பட்டன என்பதை அறிதற்கியலும். இவர் காலத்தில் வாழ்ந்த பலரும் கிட்டத்தட்ட இவ்வகையான ஆய்வினையே மேற்கொண்டனர் என்று கூறலாம்.

"தமிழிலக்கிய வரலாற்றெழுத்துகளின் தொடக்கத்தில், இலக்கியத்தின் பரப்பை அறிந்து கொள்வதற்கான முயற்சி காணப்படுகின்றதே தவிர, அவ்விலக்கியங்களின் தோற்றத்துக்கான ஆக்கக் கிளர்வு மூலங்களையும், அப்படைப்புகளின் தோற்றத்துக்குக் காரணமாகவிருந்த சக்திகளையும் அறிந்து கொள்வதற்கான முயற்சி மேற்கொள்ளப்படவில்லை என்பது புலனாகிறது. இவற்றுக்குப்பின் செய்யப்பட்ட முயற்சிகள், அதிகத் தரவுகளையுடையனவாய், அதிக நூல்கள் அறிந்தனவாய், அவற்றின் ஆசிரியர்கள் பற்றிய தகவல்களையுடையனவாய், அவர்களின் காலம் அவர்கள் தொழிற்பட்ட சூழல்கள் பற்றிய செய்திகளையுடையனவாய் அமைந்தன[18] என்று கா. சிவத்தம்பி கூறுகிறார். இவர் கூறியதில் பின் செய்யப்பட்ட முயற்சிகள் என்ற இரண்டாவது கட்டத்தைச் சேர்ந்தவர் அ.மு.ப. அதிகத் தகவல்களைக் கொண்ட படைப்புகளாய் அமைந்தமைக்குக் காரணம் காலத் தேவையே, அன்றைக்கு இருந்த தமிழ்ச் சமூகத்திற்கு, தமிழக வரலாற்றுப் பெருமை, உயர்தனிச் செம்மொழி, தமிழ்த் தேசிய இனக் கோட்பாடுகள், தொழில் முன்னேற்றம், பொருளாதார முன்னேற்றம், ஒற்றுமையுணர்வு போன்றன தேவையானவையாக இருந்தன.

"இலக்கியத்தின் சர்வ முக்கியத்துவமுடைய பண்பு, அது கடந்த காலத்தின் உற்பத்திப் பொருள் என்பது மாத்திரமன்று; அதற்கு ஒரு நிகழ்கால இயைபும் உண்டு என்பதுமே. இளங்கோவோ, மில்ட்டனோ, கம்பனோ, ஷேக்ஸ்பியரோ கடந்த காலத்தின் விளைபொருள்களாக விருக்கும் அதே வேளையில் சமகால இயைபு முடையவர்கள்"[19] என்ற கா. சிவத்தம்பியின் கூற்று ஈண்டு எண்ணத் தக்கது.

எனவே அமுப. சமகாலத்தில் வாழ்ந்தவர்களுடைய படைப்புகளின் பொதுத்தன்மையுடன், தமக்கேயுரிய சிறப்புத் தன்மையை இணைத்துக்கொண்டு படைப்புகளை வழங்கியுள்ளார்.

தமிழின் வாழ்வினைத் தம் வாழ்வாகக் கொண்ட இவர் அஞ்சா நெஞ்சுடன், நடுநிலை தவறாது கருத்துகளை எடுத்து வைக்கும் ஆற்றல் உடையவர். குறிப்பிட்ட ஒரு கருத்து தவறு என்று நம்பும்போது தம்மறுப்பை எள்ளல் தொனி கலந்த நடையில் வெளிப்படுத்துபவர். பதிவு செய்யும் நோக்கில் பல செய்திகளைத் தந்து, தனித்துவம் வெளிப்படும் வகையில் தம் படைப்புகளின் நோக்கையும், அணுகு முறையையும் அமைத்துக் கொண்டவர். தம்முடைய கருத்துகள் அனைவரையும் அடைய வேண்டும் என்ற நோக்கில் எளிய நடையையும், தெளிவையும் கைக்கொண்டு சுவைபடச் செய்திகளைத் தந்தவர்.

தமிழ்ச் சமூகத்திற்கே உரிய சிறப்பான கூறுகளையும், தமிழ்ப் பண்பாட்டுப் பரப்பில் சிறப்புற்று இருந்தவற்றையும் பலரும் அறிந்து கொள்ளும் வகையில் பாடுபட்டவர். குறிப்பிட்ட ஒரு காலச் சூழலில் குறிப்பிட்ட ஒன்றை முன்னெடுக்க வேண்டும் என்பதை உணர்ந்து செயல்பட்டவர். தமிழ்மொழியின் சிறப்பை, மக்களிடையே உருவாக வேண்டிய ஒற்றுமையுணர்வை, அதற்கு அடிப்படையான மனத்தூய்மை, இறைவழிபாட்டினை வலியுறுத்தியவர்.

சாதிக்கொடுமை, பொருளாதார ஏற்றத் தாழ்வுகள், மூட நம்பிக்கை, பெண்ணடிமை, தீண்டாமை, அரசியலடிமை முதலானவற்றைச் சீர்திருத்தம் செய்வதற்கு வழிகாட்டியாக விளங்கிய பாரதியாரின் வழி நின்று அக்கொள்கைகளை வலியுறுத்திச் சமுதாய மலர்ச்சிக்குப் புத்துணர்ச்சி ஊட்டியவர்களுள் இவரும் ஒருவர்.

புதிய அரிய உண்மைகளை, நுணுக்கமான தகவல்களை, தாம் அறிந்தவற்றைத் திறம்பட வெளிப்படுத்தியவர். இதற்கு இவரது கடின உழைப்பும், நுண்மாண் நுழைபுலமும் துணையாகின. புலமை பெற்ற ஆசிரியர்களின் கருத்துகளை வரிசைப்படுத்திச் சிறந்தவற்றை எடுத்துக் காட்டுபவர். ஒரு கண்டுபிடிப்பிலிருந்து பல உண்மைகளைக் கண்டறிய முடியுமென உணர்த்தியவர். சிறு செய்திகளைக் கூட ஆய்வுக் கண்கொண்டு பார்ப்பவர்.

சங்ககாலந் தொட்டு அவர்காலம் வரையுள்ள இலக்கியங்களின் வரலாற்றையும், அவை வெளிப்படுத்தும் செய்திகளையும், அவற்றிலுள்ள சிறப்புக் கூறுகளையும், இலக்கிய நயங்களையும், தம் படைப்புகளில் சுவைபடவும் அழகுறவும் வடித்துக் காட்டியவர். இவரது

படைப்புகளைப் படித்தவர் இலக்கிய மூலங்களைப் படித்தது போன்ற நிறைவினைப் பெறுமாறு எழுதியவர்.

## குறிப்புகள்

1. வெள்ளிவிழாச் சொற்பொழிவுகள், பக். 162-164.
2. தி.வை. சதாசிவ பண்டாரத்தார், ப. 84.
3. மேலது, பு. 60.
4. தமிழக வரலாறு, ப. 26.
5. வெள்ளிவிழாச் சொற்பொழிவுகள், ப. 171.
6. மேலது, ப. 171.
7. மேலது, ப. 172.
8. மேலது, ப. 173.
9. மேலது, ப. 175.
10. மேலது, ப. 189.
11. மேலது, ப. 128.
12. மேலது, ப. 186.
13. மேலது, பக். 139-140.
14. இலக்கியச் சிந்தனைகள், ப. 16.
15. மேலது, ப. 20.
16. தமிழில் சிறுகதையின் தோற்றமும் வளர்ச்சியும், பு. 9.
17. வெள்ளிக்கிழமைச் சொற்பொழிவுகள், ப. 106.
18. தமிழில் இலக்கிய வரலாறு, ப. 190.
19. மேலது, ப. 34.

## துணை நூல்கள்


1. இலக்கியச் சிந்தனைகள், நூற்களஞ்சியம், தொகுதி-1, எஸ். வையாபுரிப் பிள்ளை, வையாபுரிப்பிள்ளை நினைவு மன்றம், சென்னை-14, பிப். 1989.
2. கங்கைக் கரையில் காவிரித் தமிழ், அ.மு. பரமசிவானந்தம், தமிழ்க்கலைப் பதிப்பகம், சென்னை-30, ஐந்தாம் பதிப்பு, ஏப்ரல் - 1978.
3. கவிதையும் வாழ்க்கையும், அ.மு. பரமசிவானந்தம், தமிழ்க்கலைப் பதிப்பகம், சென்னை 30, 1963.
4. கொய்தமலர்கள், அ.மு. பரமசிவானந்தம், தமிழ்க்கலைப் பதிப்பகம், சென்னை 30, 1975.

5. தமிழக வரலாறு, அ.மு.ப., சென்னை, 1962.
6. தமிழில் இலக்கிய வரலாறு, கார்த்திகேசு சிவத்தம்பி, நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை, 1988.
7. தமிழில் சிறுகதையின் தோற்றமும் வளர்ச்சியும், கார்த்திகேசு சிவத்தம்பி, பாரி நிலையம், சென்னை 1, 1967.
8. நல்ல தமிழ், அ.மு.ப. தமிழ்க்கலைப் பதிப்பகம், சென்னை 30, 1961.
9. நாலும் இரண்டும், அ.மு.ப. தமிழ்க்கலைப் பதிப்பகம், சென்னை 30, 1976.
10. பத்தொன்பதாம் நூற்றாண்டின் தமிழ் உரைநடை வளர்ச்சி, அ.மு.ப. தமிழ்க்கலைப் பதிப்பகம், சென்னை 30, 1966.
11. மானுடம் வென்றது, அ.மு.ப., தமிழ் எழுத்தாளர் கூட்டுறவுச் சங்கம், சென்னை 8, 1965.

## அ.மு.ப.வின் படைப்புகள்

1 அம்மையும் அப்பனும்
2. அருந்திறலாளர் அ.மு.ப. (அ.மு.ப. பற்றிப் பிறர் எழுதியது)
3. அறிவு வளர
4. ஆருயிர் மருந்து (மணிமேகலை காப்பியம்)
5. ஆனந்த முதல் ஆனந்த வரை - 1992 (வரலாறு)
6. இந்திய முதற் சட்டம் - 1950 (நாடகம்)
7. இளமையின் நினைவுகள் (வாழ்க்கை வரலாறு)
8. எல்லோரும் வாழ வேண்டும் (கட்டுரைத் தொகுப்புகள்)
9. ஏழு நாடுகளில் எழுபது நாட்கள் (பயண நூல்)
10. ஓங்குக உலகம்
11. கங்கைக் கரையில் காவிரித் தமிழ் - 1978 (கட்டுரைத் தொகுப்பு)
12. கட்டுரை பத்து (கட்டுரைத் தொகுப்பு)
13. கடவுளர் போற்றும் தெய்வம் (கண்ணகி)
14. கண்டதும் கருத்தும் (சிறுகதைகள்)
15. கறை படிந்த உள்ளம் (சிறுகதைகள்)
16. கல்வி எனும் கண்
17, 18. கவிதை உள்ளம் (2 தொகுதிகள்)
19. கவிதையும் வாழ்க்கையும் - 1963 (திறனாய்வு)
20. காஞ்சி வாழ்க்கை (காப்பியக் கதைகள் மூன்று)
21. கொய்த மலர்கள் - 1975 (கட்டுரைத் தொகுப்பு)

22. சமயமும் சமூகமும் (பண்பாடு)
23. சமுதாயமும் பண்பாடும் - 1962 (பண்பாடு)
24. சாத்தனார்
25. சாதி வெறி - 1950 (நாடகம்)
26. சான்றோர் வாக்கு (குறள் வழி)
27. சிறுவர்களுக்கு (கட்டுரைத் தொகுப்பு)
28. தமிழ் உரைநடை வரலாறு (உரைநடை)
29. தமிழ் நாட்டு விழாக்கள் - 1956 (பண்பாடு)
30. தமிழக வரலாறு - 1962 (வரலாறு)
31. தமிழர் வாழ்வு (பண்பாடு)
32. தமிழன் கண்ட மலேயா (21 கடிதங்கள் பயண நூல்)
33. தாய்மை
34. தாயின் மணி வயிற்றில்
35. திரும்பிப் பார்க்கிறேன் திகைத்து நிற்கிறேன்
36. துன்பச் சூழல் (நாவல்)
37. தொழில் வளம்
38. நல்ல தமிழ் - 1961 (இலக்கணம்)
39. நல்லவை ஆற்றுமின் (கட்டுரைத் தொகுப்பு)
40. நாலும் இரண்டும் - 1976 (கட்டுரைத் தொகுப்பு)
41. பத்தொன்பதாம் நூற்றாண்டின் தமிழ் உரைநடை வளர்ச்சி - 1960 (உரைநடை)
42. பாசம் - 1955 (இரு பகுதிகள் - நாடகம்)
43. பாட்டும் பயனும்
44. பாரதி வாழ்வு - 1936 (கவிதை)
45. புதிய கல்வி முறை
46. பெண் (நாவல்)
47. மக்கட் செல்வம்
48. மணிபல்லவம் (மணிமேகலை காப்பியம்)
49. மலேயா சொற்பொழிவுகள் (கட்டுரைகள்)
50. மலைவாழ் மக்கள் மாண்பு (பயண நூல்)
51. மனிதன் எங்கே செல்கிறான்
52. முப்பெரும் காப்பியங்கள் (காப்பியம்)
53. மானுடம் வென்றது - 1965 (கட்டுரைத் தொகுப்பு)

54. முவ. தமிழ்த் தொண்டு

55. வரலாற்றுக்கு முன் வடக்கும் தெற்கும் - 1961 (வரலாறு)

56. வழுவிலா மாணிக்க வாசகர் - 1966 (நாடகம்)

57. வாய்மொழி இலக்கியம் (திறனாய்வு)

58. வாழ்வுப் பாதை (நாவல்)

59. வானொலி வழியே (கட்டுரைத் தொகுப்பு)

60. வெள்ளி விழாச் சொற்பொழிவுகள் - 1974 (அ.மு.ப. பற்றிப் பிறர் எழுதிய கட்டுரைத் தொகுப்பு)

61. வையைத் தமிழ் (கட்டுரைத் தொகுப்பு)

62. வேள்பாரி - 1950-1954 (நாடகம்)

## ஆங்கில நூல்கள்

1. Gleanings of Tamil Culture - 1959.
2. Tamil Nadu Through the Ages - 1960.
3. Ancient Temples of Tamil Nadu.

# பயண இலக்கியம்

**சா. வளவன்**

அறிவை வளர்க்கும் கருவிகளான கண்ணும் காதும் வாழ்வைச் செம்மைப் படுத்துவதிலும் மிகுதியான பங்கைப் பெற்றிருக்கின்றன. புதிய ஒன்றைப் பார்த்தபோதோ, கேள்விப்பட்டபோதோ உண்டாகும் எழுச்சியை மூடி மறைக்க முடிவதில்லை. அதனைத் தமக்குள்ளாகவே வைத்து நினைத்து நினைத்து இன்புறுவதோடு ஒருவர் நின்று விடுவதில்லை. உள்ளத்தில் ஊறிப் பெருகிய அந்த இன்பத்தினை மற்றவர்க்கும் பகிர்ந்தளிக்க முயல்வார். அதனால் இலக்கியக் கூறுகளில் ஒன்றாகப் பயண இலக்கியமும் அமைகின்றது.

பயணநூல் எழுதவேண்டுமானால், ஒருவருடைய கண்ணும் காதும் கூர்மையாக இருக்கவேண்டும். பார்ப்பனவற்றையும் கேட்பனவற்றையும் உடனே குறித்து வைத்துக் கொள்ளவேண்டும். அவற்றில் எழுதத்தக்கன எவை என்பதையும் தெளிவாக எண்ணிக் கொள்ள வேண்டும். அவற்றை எழுதும்போது இலக்கியநயம் இயைந்து படிப்பவர் இன்பம் பெறுமாறு அமையவேண்டும். படிப்பவரே அந்த இடத்தில் இருப்பதான உணர்வு ஏற்படும்படி எழுதவேண்டும். எளிய சொற்களில் எழுதவேண்டும். தேவைப்பட்டால், சென்ற இடங்களில், பயின்று வரும் பிறமொழிச் சொற்களையும் அடைப்புக்குறிக்குள் எழுதிக் காட்டினால், அது ஆர்வத்தைத் தூண்டுவதாக அமையும் என்று பயண இலக்கியம் எழுதும் முறையைச் சிவபாத சுந்தரம் குறிப்பிட்டுள்ளார்.[1]

> பயணம் நல்லதோர் படிப்பினை, வெளிநாட்டுப் பயணத்தால் பல்வேறு சூழ்நிலைகளைக் கண்டறியும் வாய்ப்பு உண்டு. பலவகையான மக்களுடைய இயல்புகளையும் போக்குகளையும் நேரடியாக அறிந்து கொள்ள உதவுவது அயல் நாட்டுப் பயணம்[2]

என்பார் நெ.து. சுந்தரவடிவேலு. இந்தியப் பயணத்திலும் இவ்வாய்ப்பு உள்ளது. தமிழ் நாட்டிலும் பலவகையான மக்கள் மலைப்பகுதிகளில் வாழ்கிறார்கள். எனவே தமிழ்நாட்டிலும் பயணம் மேற்கொண்டால் பல்வேறு சூழ்நிலைகளைக் கண்டறியும் வாய்ப்பு உள்ளது.

கல்வியாளரான அமுபவும் தமிழக, இந்திய, அயலகப் பயணங்களை மேற்கொண்டு, பலவகை மக்களின் இயல்புகளையும் போக்குகளையும் நேரடியாக அறிந்து அறிவித்திருக்கின்றார்.

> **பயணம் செய்வது நல்லது. ஒருவேளை பயணம் செய்ய வாய்ப்பு அமையாவிட்டால் பயண நூல்களையாவது படிப்பது நல்லது[3]**

என்னும் கருத்தினை நன்கு அறிந்தவர் அ.மு.ப. அதனால் வாய்ப்பினைப் பெறாத பலரும் பயன்பெறப் பயண நூல்களை எழுதியுள்ளார்.

உலக மனித அனுபவங்களை இந்தியத் தமிழ் மனித அனுபவங்களுடன் ஒப்பிட்டுப் பார்த்து, அதன் உண்மை நிலையைப் படம் பிடித்துக் காட்டிப் படிப்போரை வியக்க வைக்கலாம். விழித் தெழ வைக்கலாம். நாடு உருப்பட நல்ல பல வழிகளை அஞ்சாமல் கூறலாம். இவற்றுக்குப் பயண இலக்கியம் இடங்கொடுக்கும். பயண நூல்களைப் படிப்போர் உலகளாவிய பண்பாடுகளைக் கற்று உயர்ந்து, தம்மைச் சார்ந்தவர்களையும் நல்வழிப்படுத்தி, நாடுயரப் பாடுபடும் வாய்ப்பும் உள்ளது.

பயணத்தின் நோக்கமும் பயண நூலின் நோக்கமும் எதுவாக இருக்க வேண்டும் என்று க.ப. அறவாணன் குறிப்பிட்டிருப்பது கவனத்தில் கொள்ளவேண்டியதாகும்.

> **வளர்ந்த ஒருநாட்டைப் பார்க்கிற பொழுது, அந்த நாட்டார் படைத்துவிட்ட புதுப்பொருள்கள், வானொலி, பதிவுநாடா, தொலைக்காட்சி, கால்குலேட்டர், கம்பியூட்டர் என்று இன்ன பிற எல்லாப் பொருள்களையும் எளிதில் நாடுவிட்டு மறுநாட்டிற்கு இறக்குமதி செய்துவிடமுடிகிறது. கொஞ்ச நாளில் அந்தந்த நாட்டில் கூட அந்தப் பொருள்களைப் படைத்துவிட முடிகிறது. இந்தப் 'பொருளதிகாரக்' கண்டுபிடிப்பும் ஏற்றுமதியும் இறக்குமதியும் மட்டும் மனித சமூகத்திற்குப் போதுமா? பொருளுக்கு மேலாக 'உயிர் அதிகாரமாக' ஒன்றிக் கிடக்கும் அருள் பண்புகள் கண்டுபிடிக்கப்பட்டு ஏற்றமதியாகி இறக்குமதியாகி மனித சமூகம் எங்குமே பரவ வேண்டாமா? பரவ வேண்டும்; பரப்ப வேண்டும்'[4]**

என்பதை அடியொற்றித்தான் பயண நூல் எழுதப்படவேண்டும்.

1948ஆம் ஆண்டு ஒரு திங்கள் முழுவதும் அ.மு.ப. மலேசியா, சிங்கப்பூர் நாடுகளில் பயணம் மேற்கொண்டார். போகவரக் கப்பல் பயணம் உட்பட ஒன்றரைத் திங்கள். அவர் பயணம் செய்தபோது அவர் மனத்தில் பதிந்துவிட்ட சுவடுகள், 'தமிழன் கண்ட மலேயா' என்னும் சுவடியாயிற்று.

இடத்தால் விலகியிருக்கும் மலேய நாட்டு மக்களின் வாழ்க்கையை ஆராய்ந்த பேராசிரியர் அ.மு.ப., காலத்தால் பின்தங்கி நிற்கும் கொங்குவாழ் பழங்குடி மக்களின் வாழ்க்கையைப் படம் பிடிக்க 1967 ஆம் ஆண்டு பயணம் மேற்கொண்டார். நாற்பது நாட்கள் பழங்குடி மக்களுடன் இருந்து 'மலைவாழ் மக்கள் மாண்பு' என்னும் நூலை உருவாக்கினார்.

எழுபது வயது கடந்த பின்னர்த் தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக் கழகத்தின் பரிந்துரையால் உலகநாடுகள் ஏழினை (3.4.1985 - 12.6.85) எழுபது நாள்கள் இருந்து கண்டு 'ஏழுநாடுகளில் எழுபது நாட்கள்' என்னும் 464 பக்க நூலினை எழுதியுள்ளார்.

மூன்று பெரும் பயணங்களை மேற்கொண்ட அ.மு.ப. அவ்வப்போது இடையிடையே காஷ்மீர், உத்திரப்பிரதேசம், தில்லி மாநிலங்களைக் கண்டு அவற்றின் சிறப்புகளைத் தம் தன்வரலாறான 'ஆனந்த முதல் ஆனந்த' வரையில் எழுதியுள்ளார்.

கல்வியாளராகவும் தமிழ்ப்பற்றாளராகவும் சமய ஈடுபாட்டினராகவும் விளங்கிப் பயண நூல்களைப் படைத்துள்ளார். இவற்றின் கூட்டு விளைச்சலே இவர்தம் நூல்கள். இவற்றின் அடிப்படையில் இவர்தம் நூல்களை அணுகுவது பொருத்த மானதாகும்.

கோடை விடுமுறையில் பயணம் செய்வதைப் பெரிதும் விரும்பியவர் அ.மு.ப. தம் மகனைச் சிறுவயது முதலே பல இடங்களுக்கும் பயணம் செய்ய வைத்து, அங்கே கண்டதையும் மகிழ்ந்ததையும் மடல் வழியே தெரிவிக்கும் பழக்கத்தினை ஏற்படுத்தியவர் அவர். தாமும் அடிக்கடிச் சிறுசிறு பயணங்களை மேற்கொண்டு, அவை பற்றிய சிறு குறிப்புக்களையும் தவறாமல் பதிவு செய்யும் பழக்கமுடையவர். 1957 கோடை விடுமுறையில் டாக்டர் மு.வ. அவர்தம் குடும்பத்தினரோடு காஷ்மீர் சென்றதைக் குறிப்பிடும்போது,

> வடநாட்டு மதுரை, தில்லி முதலியவற்றைக் கண்டபின் பதான்கோட்டிலிருந்து விமானமூலம் ஸ்ரீநகர் சென்றோம். அங்கே மூன்று நாள் தங்கி இருந்தோம். ஒரு நாள் அரசினர் விருந்தினர் மாளிகையில் தங்கினோம் (ஆனந்த முதல் ஆனந்த வரை, ப. 307)

என்று பல குறிப்புகளையும் தந்துள்ளார். மதுரா, தில்லி நகரங்களைக் கண்டமையும் ஸ்ரீநகருக்கு விமானம் மூலம் செல்ல, தில்லியிலிருந்து

போகாமல் பதான் கோட்டிலிருந்து போனமையும் மூன்று நாள் இருந்து பார்க்கக்கூடிய அளவுக்கு வாய்ப்பு உள்ளமையும் அவரது குறிப்புகளிலிருந்து கிடைக்கின்ற செய்திகளாகும்.

அவர் பச்சையப்பன் கல்லூரிப் பேராசிரியராக இருந்தமையை நன்றியோடு நினைவு கூர்ந்துள்ளார். "எல்லா வகையிலும் பச்சையப்பரே என்னை உலகுக்கு அறிமுகம் செய்தவர் என்றால் அது பொருந்தும். அக்காலத்தில்தான் நான் அறுபதுக்கும் மேற்பட்ட நூல்களை எழுதினேன். நூல்களுக்குப் பாராட்டும் பரிசும் மாநில அரசிடமும் மத்திய அரசிடமும் பெற்றேன். மலேயா சென்றேன்; காஷ்மீர் முதல் கன்னியாகுமரிவரை பலவிடங்களில் பேசினேன். இலங்கைக்கு மூன்று முறை சென்றேன். வேறு பத்திரிகைத்துறை, சமயத்துறை போன்றவற்றிலெல்லாம் பணியாற்றினேன். அரசியல் வாதிகள் ஆன்மீக நெறியாளர் எனப் பலர் எனக்கு அறிமுகமாயினர். இவ்வாறு எல்லா வகையிலும் முப்பது ஆண்டுகள் என்னை ஏற்று வாழ்வு வழங்கிய பச்சையப்பரை ஈன்ற அன்னையினும் பெரிதும் போற்றி மகிழ்கின்றேன்" (மேலது, பக். 308-310) என மனம் திறந்து எழுதியுள்ளார்.

அவரது உள்ளார்ந்த ஈடுபாடு அவர்க்குச் சென்றவிடமெல்லாம் சிறப்பினை நல்கியது. ஸ்ரீநகர் கடைத்தெருவில் நடந்து சென்றபோது கடந்து சென்ற இராணுவ வண்டிகளில் ஒன்று நின்றது. நாலைந்து இராணுவ வீரர் இறங்கி, அவர்தம் முறைப்படி வணங்கி நின்றனர். அவர்கள் பச்சையப்பன் கல்லூரி மாணவர் என்பதைத் தெரிவித்தனர். தங்கியிருக்கும் இடம் கேட்டறிந்தனர். மறுநாள் காலை 5 மணிக்கே, குளிர்காயும் 5 மணிக்கே அ.மு.ப. தங்கியிருந்த இடத்திற்கு வந்து,

> **'ஐயா, இங்கேயெல்லாம் நம் நாட்டுக் காலை உணவு கிடைக்காது; எங்கள் மிலிடரி விடுதியில் அளவற்று உள்ளது. எனவே உங்களுக்கெனவே கொண்டுவந்தோம்; ஏற்றுக் கொள்ளுங்கள்'** (மேலது, பக்.308-309).

என்று விருந்து போற்றிய செய்தியை நெகிழ்ந்து கூறியுள்ளார். 11 மணிக்கே விமானவழித் தில்லிக்குச் செல்வதால், மதிய உணவினை மீண்டும் கொண்டு வரவில்லை. இல்லையானால் அதனையும் தந்து திக்கு முக்காடச் செய்திருப்பர். பச்சையப்பரில் பயின்ற மாணவர் தம் பாசம் அத்தகையது; அளவிடற்கரியது என்று போற்றியுள்ளார்.

மதுரைத் தியாகராயர் கல்லூரியில் தமிழ் முதுகலை வகுப்பு தொடங்கப்பெற்றது. அ.மு.ப. அங்குத் தமிழ்த் துறைத்தலைவராகப்

பணியாற்ற மதுரைக்குப் பயணமானார். மதுரையின் சிறப்புகளை யெல்லாம் பதிவு செய்து பயன்பெறச் செய்திருக்கின்றார். மதுரை திருவள்ளுவர் கழகம் அன்றே சிறப்பாகச் செயலாற்றி வந்ததையும் அது பொன்விழா கண்டதையும் மீனாட்சி சொக்கேசர் திருக்கோயில் எல்லையிலேயே வடக்காடி வீதியில் அதன் நிகழ்ச்சிகள் நடப்பதையும் விவரித்துள்ளார். தேக்கடி, சுருளி போன்ற இடங்களுக்கு மதுரையில் இருந்தபோது சென்றுவந்து கட்டுரைகளாக்கி, 'வையைத் தமிழ்' என்ற நூலாக்கினார். வையை வளங்கொழிப்பது என்னும் மொழி பொய்க்காத காலத்தில் வையைத் தமிழ் நூலும் அவர்க்கு வளம்பல சேர்த்ததைக் குறித்துள்ளார். 1958-59 இல் மதுரையில் உருவான 'தமிழகப் புலவர் குழு'வினைப் பற்றிய வரலாற்றுப் பதிவினைச் செய்துள்ளார்.

மதுரையில் இருந்தபோது தவறாமல் மாலையில் மீனாட்சி கோயிலுக்குச் சென்றவர் அ.மு.ப. அங்குள்ள ஓவியங்கள், சித்திரங்கள் அவர் உள்ளத்தைத் தொட்டன. "இத்தகைய தெய்வ நயமும் கலைநயமும் கலந்த கோயில்களைக் காணவரும் பிறநாட்டார் இவற்றைப் பற்றி அறிந்து கொள்ள வாய்ப்பில்லை" என்ற எண்ணம் அவருக்கு எழுந்தது (மேலது, ப. 317). தமிழ்க்கலையும் பண்பாடும் சமயத் தெளிவும் உலகம் முழுதும் பரவவேண்டும். அது மனித சமூகத்திற்கு நல்லது என எண்ணியவர் அமுப. யாதும் ஊராக இருக்கவேண்டும்; எவரும் கேளிராக வேண்டும் என விரும்பிய பயணியர் அவர். அதனால் 'Ancient Temples of Tamil Nadu' என்னும் நூலை எழுதினார். தமிழ் நாட்டு வரலாற்றைச் சிறப்பாக அறிந்து கொள்ளவும் பல வரலாற்று நூல்களைக் கற்கவும் விரும்பும் ஆய்வாளர்க்குத் தரவுகளைச் சேகரிக்கும் இடத்தினைக் காட்டியுள்ளார்.

> ஜப்பானில் உள்ள டோக்கியோ பல்கலைக்கழக வரலாற்றுப் பேராசிரியர் திரு காரசிம்மா அவர்கள் தமிழ்நாட்டு வரலாற்றைக் காலம் காலமாக ஆய்ந்து கரைகண்டவர். பலமுறை தமிழகம் வந்து சங்க முற்காலம் தொடங்கி இன்றைய காலம் வரை ஆண்ட அரசுகள் - சமுதாய வாழ்வு - பிற இயல்புகள் பண்பாடு ஆகியவற்றை ஆய்ந்தவர். அவர்தம் நூல் நிலையத்தே, தமிழ்நாட்டில் கிடைக்காத சில வரலாற்று நூல்களும் காணப்பெற்றேன் (மேலது, ப. 319)

என்று குறிப்பிட்டு ஆய்வுக்கும் வழிகாட்டியுள்ளார்.

மதுரைத் தியாகராயர் கல்லூரித் தாளாளர் சுந்தரம் செட்டியார் அ.மு.ப.வை அருகிலுள்ள சிவத்தலங்களுக்குத் தம் காரிலேயே அழைத்துச்

சென்றுள்ளார். தமிழ்ப் பயணம் சைவப் பயணமாகவும் வளர்ந்தது. அவர்தம் தொடர்பு அக்கல்லூரியை விட்டுவந்தபின்பும் தொடர்ந்தது. கோடையில் தாளாளருடைய கொடைக்கானல் மாளிகைக்கு வரச் செய்தனர். மூன்று ஆண்டுகள் அவ்வாறு சென்று அவர்தம் விருந்தினர் மாளிகையில் தங்கி அவர்களோடு உண்டு, கோடைகாலத்தினைக் குளிர்ச்சியாய் அனுபவித்திருந்தார்.

> பகல் வேளைகளில் ஒவ்வோராண்டு ஒவ்வோர் இலக்கியத்தை முறையாகச் சொல்லுமாறு பலரும் கூடி அமர்ந்து கேட்பார்கள். இரண்டு அல்லது மூன்று மணிநேரத்துக்கு மேல் வகுப்பெனவே அவை நடைபெறும். சுந்தரம் செட்டியார் குடும்பமும் பக்கத்துப் பங்களாவில் இருந்த முன்னாள் தமிழக முதல்வர் குமாரசாமி ராஜா அவர்தம் குடும்பத்தைச் சேர்ந்தோரும் முறையாக வகுப்பில் இருப்பார்கள். சிலசமயம் வேறுசிலரும் வருவதுண்டு. ஓரிருமுறை கருமுத்துச் செட்டியார் தம் துணைவியார் திருமதி இராதா தியாகராாசன் கூட வந்திருந்தார்கள்.
>
> ஓராண்டு திருக்குறள், ஓராண்டு கம்பராமாயணம், ஓராண்டு பெரியபுராணம் என நினைக்கின்றேன். இவ்வாறு மூன்று ஆண்டுகள் தொடர்ந்து கோடையில் ஒரு மாதத்துக்குமேல் இருந்து, நான் பயன் பெற்றதோடு, தமிழ் இன்பப்பயனை அவர்களுக்கும் அளித்து மகிழ்ந்தேன் (மேலது, ப. 327-328)

என்று தமிழ் உணர்வோடு குறித்துள்ளார். புத்துணர்ச்சி பெற ஓய்வெடுக்க வந்தவர் தமிழைக் கற்பித்துப் பயனுள்ள ஓய்வாக்கிக் கொண்டுள்ளார். மேலும்,

> அங்கிருந்த நாட்களில் குறிஞ்சி ஆண்டவனை நாள்தோறும் சென்று வழிபட்டேன். அந்த நெடுஉயரத்திலிருந்து கீழே தெரியும் ஆவினன் குடியாகிய பழநிமலையினையும் பழநி ஆண்டியினையும் பார்த்து நினைத்து வணங்கி வழிபட்டேன். ஒருமுறை பன்னிரண்டாண்டுக்கு ஒருமுறை மலரும் குறிஞ்சிமலர் நிறைய மலர்ந்திருந்தது. அதைக் காணப் பெறும் பேறு பெற்றமையை எண்ணி எண்ணி இறைவனைப் போற்றினேன் (மேலது, ப. 328)

என்று குறித்துள்ளார். இறைவழிபாடும் காண்பதற்கரிய குறிஞ்சிமலர்க் காட்சியும் புத்துணர்வை மேலும் தக்க வைத்ததில் வியப்பில்லை. மிகச் சிறந்த தமிழ் மணமும் கடவுள் மணமும் மலர் மணமும் நுகர்ந்த பேராசிரியர் நினைவு இன்றும் மணம் பரப்புகின்றது.

பிற மாநிலங்களில் தமிழ்த்துறை வளரத் தமிழ் நாட்டரசு மானியம் வழங்கி வருகிறது. அவற்றுள் ஒரு பல்கலைக்கழகம் உஸ்மானியா. அங்குத் தமிழ்ப் பண்பாட்டினை விளக்க, தமிழின் நலம் போற்றத் தக்கவர் அ.மு.ப.வை விட வேறு ஒருவரிலர் என அறிந்ததாக அன்றைய முதல்வர் பக்தவச்சலம் குறிப்பிட்டு, “நான் கூப்பிட்டுக் கேட்டால் வேண்டாம் என்று மறுப்பீர்கள். எனவே உங்களைக் கேளாமலே உங்கள் பெயரைப் பரிந்துரைத்தேன். தமிழ் நலத்தினைப் பிறர்காண வேண்டாமா! மறுக்காது சென்று வாருங்கள்” என்றார் (மேலது, ப. 328).

முதல்வரே கேட்டுக்கொண்டதால் ஐதராபாத் புறப்பட்டுச் சென்றார். செகந்திராபாத்தில் ‘டெக்கான் ஹெரால்டு’ பத்திரிகையை நடத்தி வந்தவரும் மாபூப் கல்லூரி என்னும் பள்ளியை நடத்திவந்தவரும் கீட்ஸ் பள்ளி என்னும் பெண்கள் பள்ளியை நடத்திவந்தவரும் தமிழரே எனக்கண்டு அவர்தம் தொடர்புகளை ஏற்படுத்திக் கொண்டு அவற்றைச் சிறப்புறச் செய்தார். உஸ்மானியப் பல்கலைக் கழகத் துணைவேந்தராக இருந்த டாக்டர் டிஎஸ். செட்டி என்கிற சதாசிவ செட்டியார் கொங்கு நாட்டு மலைப்பகுதிகட்குச் செல்ல நிதியுதவி வழங்கி அ.மு.ப.வின் பயணத்திற்கு உரமூட்டினார்.

சில வரலாற்றுக் குறிப்புக்களையும் மறவாமல் பதிவு செய்பவர் அ.மு.ப. என்பதற்கு ஐதராபாத் பயணத்திலும் சான்று உள்ளது.

> நான் சென்ற அந்த ஆண்டு (1966), இரெயில்வே அதிகாரம் சில மாற்றங்கள் செய்தது. மத்திய ரெயில்வே, தென் இந்திய இரயில்வே இரண்டும் பெரும் பிரிவுகளாக இருந்தன. எனவே அவற்றின் செயலைச் செம்மைப்படுத்த நினைத்து, எல்லையைச் சுருக்கினர். மத்திய ரெயில்வேயிலிருந்தும் தென்ரெயில்வேயிலிருந்தும் சிற்சில பகுதிகளைப் பிரித்து, தென்மத்திய ரெயில்வே எனப் பெயரிட்டு அதன் தலைமையிடமாகச் செகந்தராபாத்தினை அமைத்தனர் (மேலது, பக். 336–337).

என இரயில்வே வரலாற்றினை விளக்கமாகக் கூறிப்பதித்துள்ளார்.

முதல்வர் பலருடன் பழகும் வாய்ப்பினைப் பெற்றவர் அ.மு.ப. ஐதராபாத்துக்குச் செல்லுமாறு பணித்த முதல்வர் பக்தவச்சலம் அவர்களிடம் ஒரு வேண்டுகோளை வைத்தார். “முதல்வர் தில்லி செல்லுங்கால் ஒருநாள் ஐதராபாத்தில் தங்கி, அங்குள்ள தமிழரோடு அளவளாவிச் செல்லவேண்டும் என்றேன். அவர்களும் அதற்கு இசைந்தார்கள். அப்படியே ஒரு முறை தில்லி செல்லும் வழியில் காலை

9 மணிக்கு வந்து விமானத்திலிருந்து இறங்கி முழுநாள் இருந்து மறுநாள் காலை 9க்குத் தில்லிக்குப் புறப்பட்டுச் சென்றனர்" (மேலது, ப. 331) என்று குறிப்பிடுவதிலிருந்து தமிழ் மக்களிடம் இருவருக்கும் இருந்த ஈடுபாடு விளங்கும். ஐதராபாத்தில் அ.மு.ப. இருந்தபோது அங்குப் பிரம்மானந்த ரெட்டி முதல்வராக இருந்தார். "அவர் பச்சையப்பரில் பயின்றவராதலால், நான் அங்கிருந்து வந்ததறிந்து, அவர்தம் தனி அலுவலர் மூலம் என்னிடம்பேசி, என்னை வரப்பணித்துக் கலந்து விருந்தளித்து மகிழ்ந்தார். அப்படியே நான் இருந்த வீட்டிற்கருகே பின் முதல்வரான திரு சின்னா ரெட்டியின் மாளிகை இருந்தமையின் அவரும் அவர்தம் அன்னையாரும் என்னை அவர்கள் வீட்டிற்கு வரச்சொல்லிப் பாராட்டினர். அவர்கள் தோட்டத்தில் விளையும் திராட்சைப் பழங்களை அவ்வப்போது எனக்குக் கொடுத்தனுப்புவார்கள்" (மேலது, ப. 337) என்று குறிப்பிட்டுள்ளமையால் முதல்வர் பலருடன் பழகும் வாய்ப்பிருந்தமையை அறியமுடிகின்றது.

1966-67 இல் உத்திரப்பிரதேச மாநிலத்தில் உள்ள அலிகார் முசுலீம் பல்கலைக்கழகத்தில், மூன்றாண்டுக்கு ஒருமுறை நிகழும் 'இந்தியப் பல்கலைக்கழகங்களிலுள்ள கீழ்த்திசை மொழி பயிற்றுவோர் மாநாடு' நடைபெற்றது. உஸ்மானியப் பல்கலைக்கழகம் அ.மு.ப.வை அனுப்பிவைத்தது. இந்திய மொழிகள் எவ்வாறு வளப்படுத்தப் பெறவேண்டும் என்றும் அதற்கு முதலிடம் பல்கலைக்கழகங்கள் தரவேண்டும் என்றும் அரசு அதற்கு ஆவன செய்யவேண்டும் என்றும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டனவாம். ஆயினும் அவை செயலாக்கம் பெறவில்லை என வருந்தியுள்ளார்.

மராட்டிய மாநிலத்தில் பயணம் செய்தபோது கண்டறிந்த உண்மையை விளக்கி, தமிழ் மாநிலத்தில் இருக்கும் நிலையைக் கூறி வருந்தியுள்ளார்.

> மராட்டிய நாட்டில் உயர் மட்டம், கீழ்மட்டம் (**Higher Level, Lower Level**) என இருபிரிவாகத் தமிழ்மொழி பிரிக்கப்பெற்று, தமிழையே படிக்க விரும்புபவர் உயர்மட்டப் பாடத்திட்டத்தின் படியும் மராத்தியர் கீழ்மட்ட வகையிலும் பயிலலாம். அல்லாதார் மாற்றியும் பயிலலாம். மராத்தியர் அனைவருக்கும் மராத்தி கட்டாயமாக்கப் பெறுவது போன்று தமிழர் அனைவரும் தமிழைக் கட்டாயம் பயிலும் நிலை உள்ளது. (இத்தேர்வுக் குழுவின் சிறப்பு உறுப்பினனாகப் பன்னிரண்டு ஆண்டுகள் நான் இருந்தமையின் அதுபற்றி நன்கு அறிவேன்.) ஆனால் இங்கே தமிழ்நாட்டிலோ அந்த நிலையில்லை. தமிழ்நாட்டில் தமிழ் பயிலாமலேயே பள்ளி, கல்லூரிப்

> படிப்புகளை முடித்து எந்தப்பட்டம் வேண்டுமானாலும் பெற்றுக்கொள்ளலாம். இந்த அவலநிலை இந்தியாவின் வேறு மாநிலங்களிலும் உலகில் வேறு எந்த நாட்டிலும் காணமுடியாத ஒன்று (மேலது, ப. 340–341)

என்று வருந்தியுள்ளமை, மொழிமீது அவருக்கிருந்த உணர்வைக் காட்டும். பயணம் செல்லும் போதெல்லாம் தமிழ் வளர்ச்சி குறித்த கண்ணோட்டமே மேலோங்கியிருந்ததை உணரமுடிகின்றது.

அலிகார் மாநாட்டில் நிறைவேற்றப்பட்ட தீர்மானம் அ.மு.ப.வை மேற்கண்டவாறு சிந்திக்க வைத்தது. மாநாட்டில் பங்கு கொண்டதோடு, நகரினையும் சுற்றுப்புறங்களையும் கண்டுகளித்த அ.மு.ப.விற்கு, பூட்டுக்குப் பேர்போன இடம் அலிகார் என்பதைக் குறிப்பிடும் எண்ணம் தோன்றியது. பல பூட்டுக் கடைகளைக்கண்டு, பூட்டுக்களையும் வாங்கினார். அலிகார் சுற்றுப்புறம் பசுமைநிறைந்த கோதுமைப் பயிர்களால் சூழப்பெற்றிருப்பதை விளக்கியுள்ளார். அங்கிருந்து மதுரா சென்றவர் "மதுரா நெருக்கமான ஊர்; தங்க நல்ல இடம் கிடையாது" (மேலது, ப. 342) என்ற தகவலையும் தந்துள்ளார். ஆனால் மதுராவில் கண்ணன் இளமை நிலையில் காட்டிய காட்சிகளைக் கண்டுகளித்தமையையும் குறித்துள்ளார்.

ஐதராபாத்தில் இருந்தபோது 'காசி'ப் பயணத்திற்கும் வாய்ப்பு அ.மு.ப.விற்கு உருவானது. தனியே பயணத்தைத் தொடங்கியவருக்கு 'நாகபுரி'யில் நல்ல கமலா பழங்கள் கிடைத்தனவாம். மாலை ஏழுமணி அளவில் 'இட்டார்சி' சந்திப்பில் இறங்கி, அலகாபாத் வழியாகக் காசி செல்லமுடியும். இன்று நேரே செல்லுமாறு வசதி உள்ளது. அப்போதெல்லாம் பம்பாயிலிருந்து (மும்பையிலிருந்து) காசி செல்லும் இரெயிலில்தான் செல்லவேண்டும். ஏற்கெனவே பதிவு செய்திருந்த போதிலும் இடம் பெறுவது கடினம் என்ற குறிப்பையும் கூறியுள்ளார்.

அலகாபாத் பற்றிய தகவல்கள் பலவும் பலருக்கும் பயன்படுவனவே. அவற்றைக் குறித்துள்ளார் அ.மு.ப.

> தில்லியிலிருந்தும் பம்பாயிலிருந்தும் வரும் பல ரெயில்கள் கிழக்கே வாரணாசி, பாட்னா, கல்கத்தா போன்ற இடங்களுக்கு இங்கே வந்து செல்வதால் அது ஒரு நெருக்கமான இடமாக இருந்தது. கங்கையும் யமுனையும் சங்கமமாகும் அத்திரிவேணியை – அகன்ற பேராற்றை ரெயிலில் கடக்கும் போது கண்டேன்

என்றும், "கங்கை நதிப்புரத்துக் கவின்கண்டு கொண்டே நான் பயணமானேன்" (மேலது, ப. 344) என்றும் குறிப்பிட்டுள்ளார். அப்பகுதி மக்களைப்பற்றியும் குறித்துள்ளார்.

> பொதுவாக மக்கள் வாழ்க்கை இரங்கத்தக்கதாகவே உள்ளது. பலர் ஏழைகள். அன்றாடம் வயிற்றுப் பிழைப்புக்கு வழிதேடும் குடும்பங்களே அதிகம் ஆயினும் அவர்களில் பலர் சோம்பேறிகளாம். அது அவர்களைப் பார்க்கும்போதே தெரிந்தது. இரெயிலில் செல்லும்போதே அப்பகுதி வாழ் மக்கள் நிலையை ஓரளவு காணமுடிந்தது (மேலது, ப. 345)

என்னும் செய்திகள் இன்றும் உண்மையாகவே உள்ளன.

கங்கையின் சிறப்பையும் தமிழர்க்கென்று ஒரு கட்டடம் இருப்பதையும் விவரித்துள்ளார்.

> மாலையில் கங்கையில் நீராடினேன். எங்கும் காணாத வகையில் கங்கை இங்கே வடக்கு நோக்கிச் (உத்தரவாகினி) செல்லுவது பெருஞ்சிறப்பாகும். காசியிலுள்ள பல கட்டடங்களில் நம் தமிழருக்கும் ஒரு கட்டடம்; அது கேதார கட்டடமாகும். அங்குள்ள கங்கையிலேயே நான் அன்று மாலை மூழ்கினேன் (மேலது, ப. 346)

தமிழர் எளிதாகவும் குறைவான செலவிலும் தமிழ்ச் சூழலிலும் தங்கிடஉள்ள இடத்தையும் குறித்துள்ளார். வழிபாடும் தமிழ்நாட்டைக் காட்டிலும் சிறப்பாக உள்ளமையையும் குறித்துள்ளார்.

> கேதார ஈச்சுவரரைத் தரிசனம் செய்தேன். நாள்தோறும் மாலையில் அக்கோயிலில் தேவார திருவாசகம் பாடும் ஓதுவார்கள் உள்ளனர். நான் சென்றபோதும் பாட்டிசைத்தனர். இது காசி மடத்தின் மேற்பார்வையில் உள்ளது. அங்குள்ள அனைவரும் தமிழரே. பின் காசிமடத்துக்குச் சென்றோம். நான் முன்பே திருப்பனந்தாளுக்கு எழுதி இருந்தமையின் எனக்கென ஓர் அறை ஒதுக்கிவைத்திருந்தனர் (மேலது)

என்றும்,

> அப்போதுதான் மடத்திலிருந்து கேதார ஈச்சுரருக்கு அடுத்த கால அபிடேகத்துக்குரிய பால், பழம் முதலிய பொருள்கள் வாத்தியத்துடன் எடுத்துச் செல்லப்புறப்பட்டன. நான்

> **தமிழ்நாட்டில் கூடக் காணமுடியாத இந்தச் சிறந்த மரபினையும் காசி மடத்தின் பெருமையினையும் எண்ணினேன். இதன் மூலகர்த்தாவாகிய குமரகுருபரரை எண்ணி, போற்றி வழிபட்டேன் (மேலது)**

என்று அபிடேகமுறையையும் அதற்கு, மூன்று நூற்றாண்டுக்கு முன்னர்த் திட்டமிட்டுச் செயல்படுத்திய குமரகுருபரரையும் நன்றியோடு நினைத்து வழிபட்ட பெருந்தன்மையையும் அறியமுடிகின்றது.

குமரகுருபரர் தொடங்கியதை வரலாற்றுக் குறிப்பாகக் கூறியதைப் போன்று, அப்பர் காலத்தில் தமிழ்நாட்டில் இருந்த வழிபாட்டு முறைக்கு வரலாற்றுச் சான்றினைத் தந்துள்ளார் அ.மு.ப.

> **மறுபடியும் கங்கை நீராடி காசி விஸ்வநாதரையும் அன்னை அன்ன பூர்ணியையும் தரிசனம் செய்தோம். நானே தொட்டு, நீரிட்டு, பூவிட்டுத் தமிழில் பாடி விசுவநாதரைக் கும்பிட்டேன். 'சலம் பூவொடு தூபம் மறந்தறியேன் தமிழொடு இசைபாடல் மறந்தறியேன்' என்ற அப்பர் அடிகள் என் நினைவுக்கு வந்தன. ஆம்! அந்தக் காலத்தில் ஏழாம் நூற்றாண்டில் – தமிழ் நாட்டுக் கோயில்கள் அனைத்தும் காசிவிசுவநாதர் கோயிலைப் போன்றே யாரும் தொட்டு, நீராட்டி, பூவிட்டு, பாடிப் பரவும் வகையில் அமைந்திருந்தன (மேலது, ப. 347)**

என்று வரலாறாகிவிட்ட செய்தியைக் குறிப்பிட்டுள்ளார். கண்ணப்ப நாயனார் செய்த அபிடேகமும், சாக்கிய நாயனார் செய்த வழிபாடும் நினைவுக்கு வருகின்றன.

காசிப் பல்கலைக்கழகப் பணிக்காகச் சென்ற பேராசிரியர் காசிப்பல்கலைக் கழகத்தினைச் சுற்றிப் பார்த்துவிட்டபின் "மாளவியாவின் பரந்தமனம் போல அது சிறந்து நின்றது. எண்ணற்ற கட்டடங்கள். எங்கும் கலைமணம்" என்று போற்றுகின்ற வேளையில் மாளவியாவை வரலாற்றில் இடம்பெறச் செய்துவிட்டார்.

### மலேயா

விமானப்பயணம் தொடங்காத காலத்தில் 1948 இல் மலேயாவிற்குப் பயணம் செய்துள்ளார் பேராசிரியர். மலேயாவில் புதிய பல்கலைக்கழகம் அமைக்கும் முயற்சி மேற்கொள்ளப்பட்டிருந்த நேரம். அங்கே இந்தியர் - சிறப்பாகத் தமிழர்கள் அதிகமாக உள்ளமையின் இந்திய மொழி ஒன்றினை அப்பல்கலைக்கழகத்தில் அமைக்கும் முயற்சி மேற்கொள்ளப்பட்டது. நடுவண் அரசு ஒருவரை மலேயாவிற்கு

அனுப்பியபோது, அவர் வடமொழியை வைக்க வேண்டும் என்று பரிந்துரைத்துள்ளார். ஆனால் அன்றைய பிரதமர் ஜவகர்லால் நேரு நடுநிலையோடு நடந்து கொண்டதைப் பதிவு செய்துள்ளார் பேராசிரியர்.

> நேரு அவர்கள் அக்கூற்றை (வடமொழியை வைக்கவேண்டும் என்னும் கூற்றை) ஏற்றுக்கொள்ளவில்லை. அங்கே பெரும்பாலோர் தமிழர்களே. ஆதலால் அது பற்றித் தமிழகத்தின் கருத்தை அறியவிரும்பி, அன்றைய முதல்வர் ஓமந்தூராரைக் கேட்டுள்ளார் (மேலது, ப. 354).

நேருவின் சிறப்பினையும் நடுநிலையையும் அறிந்து கொள்ளுமாறு இச்செய்தியைப் பதிவு செய்துள்ளார் பேராசிரியர். அன்றைய தமிழக அரசு அ.மு.ப.வை அனுப்ப முடிவு செய்தமை, பேராசிரியரின் செல்வாக்கினையும் சிறப்பினையும் காட்டுகின்றது. ஏறத்தாழ ஒன்றரை மாதம் சிங்கப்பூர் தொடங்கிப் பினாங்கு வரையில் பல ஊர்களைச் சுற்றி, கருத்தறிந்தும் சொற்பொழிவாற்றியும் திரும்பினார். அப்போது மலேயாவும் சிங்கப்பூரும் இணைந்தே இருந்தன என்னும் செய்தியையும் குறித்துள்ளார்.

அவரது முதல் வெளிநாட்டுப் பயணம் அது. அப்பயணத்தைப் பற்றித், 'தமிழன் கண்ட மலேயா' என்னும் நூலாகவும் அங்கு ஆற்றிய சொற்பொழிவுகளை 'மலேயாச் சொற்பொழிவுகள்' என்னும் நூலாகவும் ஆக்கியுள்ளார். தம் கப்பல் பயணத்தைக் குறித்துள்ளார்.

> அப்போது விண் வழிப் பயணம் கிடையாது. எனவே கப்பல் வழியேதான் செல்ல வேண்டும். அந்த வேளையில் சென்னைக்கும் சிங்கப்பூர் மலேயாவுக்கும் சென்றுவந்த இரு கப்பல்களில் ஒன்று மட்டும் செயல்பட்டது. அதுவும் எதுவோ பழுதுகாண சிங்கப்பூருக்குப் பயணிகள் இன்றே செல்ல இருந்தது. அதில் முதல் வகுப்பில், நான் ஒருவன் மட்டும் செல்ல அரசாங்கம் ஏற்பாடு செய்தது. ஒருநாளில் அக்கப்பலில் 'ரஜீலா'வில் நேராகச் சிங்கப்பூருக்குப் பயணம் ஆனேன் (மேலது, ப. 355)

என்றவர், ஏழுநாள் பயண அனுபவத்தை விளக்கமாக எழுதியுள்ளார்.

தமிழே மலேயாப் பல்கலைக்கழகத்தில் வைக்கத் தகுதி பெற்றது என்று உறுதிபட எழுதினார் பேராசிரியர். அதற்காக மலேயாவின் ஒன்பது மாநிலங்களுக்குப் பயணம் மேற்கொண்டார். மேலும் இரு

மாநிலங்கள் இருந்தன. அவற்றில் தமிழர் அதிகம் இல்லாததால் பயணம் செய்யவில்லையாம். பயணம் செய்தபோது திரட்டிய கருத்துகளைக் கொண்டு "தமிழே மலேயாப் பல்கலைக்கழகத்தில் வைக்கத் தகுதிபெற்றது என்ற திட்டமான முடிவை எழுதினேன். (சென்னை) வந்தபிறகும் நேரில் விளக்கிக் கூறினேன்" என்று குறிப்பிட்டுள்ளார் (மேலது, ப. 356). வாரத்துக்கு ஒருமுறை மலேயாவிலிருந்து தமிழக அமைச்சருக்கு மடல் எழுதித் தம் கருத்துகளைத் தெரிவித்திருக்கின்றார்.

தமிழன் கண்ட மலேயா நூலினைக் கடித அமைப்பில் எழுதியுள்ளார். தம்மூத்த மகள் மங்கையர்க்கரசிக்கு எழுதிய 21 கடிதங்களின் தொகுப்பு நூலாக அது உள்ளது. ஜவகர்லால் நேருவின் புகழ்பெற்ற நூலான 'தந்தை மகளுக்கு எழுதிய கடிதங்கள்' நூலின் தாக்கமாக இருக்கலாம். கப்பலில் பயணம் செய்தபோது அவர் கடல் நோயால் துன்புற்றதையும், பலருடன் பழகும் வாய்ப்பு ஏற்பட்டதையும் சுவைபட விளக்கியுள்ளார். மலேயாவில் ஊர் ஊராகச் சென்றபோது கண்ட காட்சிகளையும் வசதியான பயணமுறைகளையும் நன்கு விளக்கியுள்ளார். மலாக்காவில் மூன்றுநாள் தங்கியபோது சேகரித்த செய்திகளைத் தொகுத்துக் கூறியுள்ளார். மலேயாவில் மலாக்கா,

> மிகப் பழைய ஊர் என்பதையும் அங்குள்ள குன்றின் மேல் உயர்தளத்தில்தான் சமயம் பரப்ப வந்த தூய சேவியர் அடக்கமானார் என்றும் பின் அவர்தம் பொன்னுடலை இந்தியாவுக்குக் கொண்டு சென்றார்கள் என்றும் கேட்டறிந்தேன். அந்த வெற்றிடமான ஆழ்ந்த பள்ளத்தினைக் கண்டபோது உளம் நைந்தேன்

என்று உருகும் பேராசிரியர் நம் நாட்டுத் துறவியருள் சிலரைச் சாடவும் தவறினாரல்லர்.

> வாயிலை விட்டு இறங்காது, வந்தால் 'பிரசாதம்' வழங்கும் நம் நாட்டுத் துறவியர் அந்த நிலைவிட்டு, இவ்வாறு சமயத் தொண்டு செய்வார்களாயின் பல உண்மைகளை உள்ளடக்கிய, எல்லாச் சமயங்களையும் ஏற்றுக் கொள்ளும் மெய்ச்சமயமாகிய சைவம் எப்படி உலகில் வளர்ந்தோங்கும் என எண்ணினேன் (மேலது, ப. 357)

என்றெழுதினார்.

வள்ளலாரின் தொண்டும் அவரது நினைவுக்கு வந்தது. இதன் விளைவாக அவரது சொற்பொழிவுகளில் வள்ளலார் பற்றியும் அவர்தம்

பாடல் பற்றியும் செய்திகள் இடம்பெற்றன. அ.மு.ப.வின் நிரந்தினிது சொல்லும் ஆற்றல் மலேயாமக்களை ஈர்த்ததால் தொடர்ந்து பல சொற்பொழிவுகளை நிகழ்த்தினார். அச்சொற்பொழிவுகளை 'மலேயாச் சொற்பொழிவுகள்' என்னும் தனி நூலாக்கினார்.

> நூலுக்குத் 'தமிழன் கண்ட மலேயா' என்ற தலைப்பைக் கொடுத்ததே அவருடைய தமிழ் உள்ளத்தை நன்கு எடுத்துக் காட்டுகின்றது. ஏனெனில் அவர் மலேயாவில் ஒவ்வொரு காட்சியையும் தமிழன் என்ற கோணத்திலிருந்து பார்த்திருக்கிறார். தம்மை ஒரு தமிழன் என்று எண்ணிக் கொண்டே அவர் பார்த்ததால், தமிழர்கள் சிலர் அங்கு நல்ல வாழ்க்கை வாழ்வதைக் கண்டு மகிழ்ச்சியடைந்துள்ளார். தமிழ்க்கல்வி அங்குப் பயிற்றுவிக்கப்பெறுவது கண்டு உள்ளம் பூரித்துள்ளார். தமிழ் மக்கள் ரப்பர்த் தோட்டங்களிலும் காடுகளிலும் இருப்பதற்குப் போதிய இட வசதியின்றி, உண்பதற்கு நல்ல உணவின்றிக் கூலிவேலை செய்து பிழைப்பதைக் கண்டு கண்ணீர் உகுத்துள்ளார். மாடமாளிகைகளும் கூட கோபுரங்களும் நிறைந்த மலேயாவில் அவர் மகிழ்ச்சிப் பயணம் செய்யவில்லை. தம் இனமான தமிழினத்தின் வாழ்வையும் தாழ்வையுமே காண்பதில் அவர் ஈடுபட்டிருந்தார்[5]

என்னும் முத்துக்குமாரசாமியின் கூற்று, பேராசிரியரது நூலைப் படிப்போர் உணர்வதேயாகும்.

மலேயாவின் தமிழர் நிலையைக் குறிப்பிடும்போது, தமிழரின் முன்னோரான சேர, சோழ, பாண்டியரின் பெருமையையும் திராவிடரின் தொன்மையையும் விளக்கித் தலைதூக்கி நின்ற தமிழினம் தலைதாழ்த்தி நிற்பதை வரலாற்றியல் நோக்கில் விளக்கியுள்ள ஆய்வு மனப்பான்மையைப் பாராட்டியாக வேண்டும்.

மலேயாவில் சீனர், முகம்மதியர், மலாய்க்காரர் எனப் பல நாட்டு மக்களும் வாழ்கின்றனர். அவர்களுடனும் பழகி, அவர்தம் வாழ்வில் கண்ட புதிய செய்திகளையும் தொகுத்துள்ளார். பச்சையாகவும் சுட்டும் இறைச்சியையும் பாம்புகளையும் சந்து முனைகளில் திறந்த வெளியில் விற்பனை செய்யும் சீனர், மகமதிய மதத்தைத் தழுவிய மலாக்காச் செட்டியார், போது மென்ற மனமே பொன்செய்யும் மருந்து என்று இருப்பதைக் கொண்டு மனநிறைவுடன் வாழும் மலேயாவின் பழங்குடியினரான மலாய்க்காரர் பற்றிப் பல இடங்களில் சுவை பயக்கும் வகையில் விவரித்துள்ளார் பேராசிரியர்.

சென்னையில் பின்னிரவு வரை பொது இடங்களில் பொழுது போக்கும் இரவு வாழ்க்கை எனும் நோய் 1948 இலேயே மலேயாவில் இருந்ததைக் கண்டு வருந்தினார் அ.மு.ப. வயிற்றுப் பிழைப்புக்காக உடலை விற்கும் சீனப் பெண்கள் இரவு நேரங்களில் உணவு விடுதிகளில் பல்வகை நடனங்களாடி மக்களை மயக்கும் காட்சியைக் கண்டு திகைத்து வருந்தினார்.

தமிழனாகப் பார்க்கும் அதே வேளையில் பேராசிரியர் என்பதையும் மறந்தாரல்லர். அரசின் உயர் கல்வி அலுவலரைக் கண்டும் மலேயாவில் தமிழாசிரியர் தமிழ் பயிற்றுவதைப் பார்வையிட்டும் கல்விமுறையில் வளர்ச்சி காண முயன்றுள்ளார்.

திரைகடலோடித் திரவியந் தேடச் சென்ற தமிழர்களை மலேயாவில் கண்டார் பேராசிரியர். அவர்கள் இடத்தால் விலகியிருக்கின்றனர். காலத்தால் பின்தங்கி இருக்கும் பழங்குடி மக்களையும் காணும் ஆர்வம் பேராசிரியருக்கு இருந்தது. நம் நாட்டிலேயே நம்மிடையே வாழ்கின்ற பழங்குடி மக்கள் வாழும் பகுதியில் பயணம் மேற்கொண்டு அவர்தம் பண்பாட்டினை ஆய்ந்து கண்டார். கொங்கு நாட்டுப் பகுதியில் வாழ்கின்ற பழங்குடி மக்களைக் கள ஆய்வு செய்து 'மலைவாழ் மக்கள் மாண்பு' எனும் நூலக்கியுள்ளார். மலேயாப் பயணத்திலிருந்து முற்றிலும் வேறுபட்ட பயணம் இது.

> **காற்றைக் கிழித்துச் செல்லும் கார்ப்பயணமும் ரயில் பயணமும் மலேயாப் பயணத்தில் இடம் பெற்றன. ஆனால் முகிலைக் கிழித்து உயர்ந்து நிற்கும் மலையுச்சிகளுக்குக் கரடுமுரடான முள் நிறைந்த பாதையில் பல இன்னல்களுடன் அமைந்த பயணமே மலைவாழ் மக்களைக் காணச் சென்ற பயணம்.**

ஐதராபாத் உஸ்மானியப் பல்கலைக்கழகத்தில் ஓராண்டு பணியாற்றியபோது, பல்கலைக்கழக நிதி நல்கைக் குழுவின் உதவியோடு மேற்கொண்ட பயணம் இது. கோவை மாவட்டத்தின் சிறுவாணி, ஆனைமலைப்பகுதி, சேலம் மாவட்டத்தின் சேர்வராயன் குன்று, தருமபுரி மாவட்டத்தின் மாரண்டஹள்ளி, ஒக்கனக்கல் முதலான பகுதிகளில் வாழ் பழங்குடி மக்கள் வாழ்வினை ஆராய்ந்தார் பேராசிரியர் அ.மு.ப.

பழங்குடி மக்களான தோதவர், கோதவர், படகர், பனியர், நாயக்கர், குறும்பர், இருளர், மலையர், பஸ்தர், சிவாச்சாரத்தார், மலையாளிகள் ஆகியோரை ஆராய்ந்துள்ளார். அவர்கள் வாழ்க்கையில் நாளும் நடைபெறும் நிகழ்வுகளையும் உணவு, உடை, திருமணம் முதலிய

பிற பழக்க வழக்கங்களையும் கண்டு பயனுள்ள வகையில் தந்துள்ளார். தோதவர்க்கும் கோதவர்க்கும் உருவ வழிபாடு இல்லாமை; தோதவர் பெண்கள் கோவிலுக்கே செல்லாமை முதலிய பல செய்திகளை விளக்கியுள்ளார். திருமண வகைகளும் புதுமையானவை. மரப்பொந்தில் விளக்கிட்டுக் கொடியை வளைத்து வில்லாக்கி, பெண்ணின் தந்தையிடம் ஒப்புதலைப் பெற்று மணமுடிக்கும் தோதவர் பழக்கத்தைக் குறிப்பிட்டுள்ளார். மணம் முடிப்பதற்கு ஆறுதிங்கள் முன் பெண் வீட்டில் மணமகன் தங்கியபின்பு மணமகளைக் கைப்பிடிப்பர் இருளர். அவரே பச்சிலைப் பந்தல் கட்டிப் பணமுடித்து எருக்கஞ் செடியைச் சுற்றி வருவர். ஊர்ப் பெரியதனக்காரர் பாட்டுக்கள் பாட மணமகளுக்குத் தாலி கட்டுவர். மலையாளிகள் முதலிய திருமணமுறைகள் சிந்திக்கத்தக்கன.

இப்பயண வழி அ.மு.ப. தெரிவித்த கருத்துகளுள் சிலவற்றைப் பேராசிரியர் ந. சஞ்சீவி தொகுத்துள்ளார்.

1. கொங்கு என்ற சொல்லுக்குத் தேன், மகரந்தத்தூள் என்ற பெயர்கள் இருப்பதை அறிவோம். ஆசிரியர் ஆராய்ச்சிக்கு எடுத்துக் கொண்ட நாட்டின் பெரும்பகுதி கொங்கு நாட்டுப் பகுதி. அந்நாட்டில் வாழும் பழங்குடி மக்கள் மலைமகளின் வியாழவட்ட வெளியீடாக (மாமாங்கமாக) விளங்கும் குறிஞ்சிமலர் பூப்பை அடிப்படையாகக் கொண்டு ஆண்டுகளின் கணக்கை அறுதியிடுவர். ஐந்து கொங்கு (5X12) என்றே கொங்கு நாட்டார் குறிஞ்சியின் மணத்தை உள்ளடக்கிச் சொல்லும் உரை உவப்புடையதாகும்.

2. பழங்குடி மக்கள் வாழும் பகுதிகளுள் ஊர்ப்பெயர்கள் பலவற்றை ஆசிரியர் உவகையுடன் போற்றியுள்ளார். அவற்றுள் அதிகமான் ஆண்ட தகடூர் (தருமபுரி) அருகில் உள்ள அவ்வை வழி. அப்பகுதியிலேயே உள்ள இலக்கியப்பட்டி.

3. பழங்குடி மக்கள் உண்ணும் உணவு வகைகளுள் சிறப்பு வாய்ந்த ஒன்று மூங்கில் அரிசி. அதுபற்றி ஏட்டில் விளங்காததை நாட்டில் விளங்கிக் கொண்ட நயம்.

4. பழங்குடி மக்கள் மாடுகளை வளர்த்துப் போற்றுவது போல் ஆடுகளையும் வளர்த்துப் போற்றும் பண்பு படைத்தவர்கள்.

5. அதனால் அவர்கள் மாட்டுப் பொங்கல் கொண்டாடுவது போல் ஆட்டுப் பொங்கலும் கொண்டாடுவது வழக்கம்.

5-1 நெல் அறுவடை செய்வதுபோல் அவர்கள் 'மயிர்' அறுவடை செய்வர்.

6. மகளிர் அணியும் காதணிகளுள் இரண்டன் பெயர்கள் (அ) கலப்பை (ஆ) ஏர்.

7. இது தொழிலின் வடிவம் கலையில் விளங்கும் காட்சியைக் காட்டும்.

8. பழங்குடி மக்கள் திருமணம், இளைஞர்கள் தாமே பார்த்து நடைபெறுதலும் உண்டு. பெற்றோர் பார்த்து நடைபெறுதலும் உண்டு.

8-1 இவ்விருவகைத் திருமணங்களும் பெரிதும் கூட்டுத் திருமணங்களாக நடைபெறுதல் இக்காலச் சீர்திருத்த உலகத்திற்குப் பூரிப்பைத் தரக்கூடியது.

8-2 பழங்குடி மக்களுள் மணத்திற்கு இருக்கும் சிறப்புப் பெரிது. இது அவர்களுள் சிலர் மணமாகாமல் இறந்தாரின் பிணத்திற்கும் மணம் செய்தே புதைக்கும் பழக்கத்தால் விளங்கும்.

9. இருக்கும் சடங்குகளுள்ளும் பார்ப்பனரின் இடம் குறைவு என்பதும் குறிப்பிடத்தக்கது.

9-1 பழங்குடி மக்கள் மணம் / சாவு ஆகிய இருநிகழ்ச்சிகளிலும் சடங்குகள் மிகுதியாக இல்லாமையும் குறிப்பிடத்தக்கது.

10. பழங்குடி மக்களின் சடங்குகள் சிலவற்றில் ஒரு காலத்தில் பூணூல் புகுந்ததும் கால அடைவில் அது ஒழிந்ததும் நினைக்கத்தக்கது.

11. பழங்குடி மக்களுள் சிலர் கருவளர் சிறப்பின் (சீமந்தத்தின்) போது இரண்டாவது முறையாகத் தாலி கட்டுதல் குறிப்பிடத்தக்கது.

12. பழங்குடி மக்களிடத்தில் மணவிலக்கு (Divorce) மிகச் சாதாரணம் என்பது மீண்டும் இக்காலத் தீவிரச் சீர்திருத்தவாதிகளின் வாய்க்கு அவல் ஆகும்.

13. பழங்குடி மக்களின் மொழியில் பல தூய தமிழ்ச் சொற்கள் - காரணப் பெயர் காணப்படுதல் இயற்கை. மொழிபெயர்ப்புக் கலையின் கருத்துப் போருக்கே உயர்வு. அந்த வகையில் அவர்கள்பால் காணப்படும் ஒரு சொல்லை ஆசிரியர்

காட்டியிருப்பது அறிந்து இன்புறத்தக்கது. ஏலம் விடுதலை அவர்கள் 'கூப்பு' என்று வழங்குகின்றனராம். 'கூவிக் கூவி'த்தானே ஏலம் விடுகின்றனர்.

14. பழங்குடி மக்கள் ஒலிகளின் வாயிலாகவே ஊருக்கு ஊர் செய்திகளை ஒலிபரப்புவராம். இது மொழியின் தோற்றத்தையும் விளக்கும்

என்று ஆய்வுப் பிழிவினைத் தந்துள்ளார். பேராசிரியர் அ.மு.ப. மானிடவியல் ஆய்வினைக் களப்பயணமாக அமைத்துக்கொண்டார். இந்த வகையில் ஆய்வு செய்த முதல் தமிழ்ப் பேராசிரியர் என்ற தனிப்புகழைப் பெற்றுள்ளார் என்றும் போற்றியுள்ளார் பேராசிரியர் ந. சஞ்சீவி.

இலங்கைக்கு மூன்று முறை பயணம் மேற்கொண்டவர் பேராசிரியர் அமுப. அப்பயணங்களால் முகிழ்த்த நூல் 'மணிபல்லவம்'. தமிழர் நிறைந்திருக்கிற யாழ்ப்பாணப்பகுதிக்குச் செல்லுமுன் விமானப் பயண அனுபவம் பற்றி ஒரு கட்டுரையும் யாழ்ப்பாணத் தமிழர், தமிழ், சமயம், சமூகம் பற்றி இரு கட்டுரைகளும் நயினார்தீவே மணிபல்லவத் தீவு என நிறுவி அதன் சிறப்பினை விளக்கி ஒரு கட்டுரையும் கொண்டது இந்நூல். இதில் இறுதிக் கட்டுரையாகக் கல்லூரி ஒன்றில் அங்கே ஆற்றிய சொற்பொழிவும் அமைந்துள்ளது.

யாழ்ப்பாணத்தமிழறிஞர், யாழ், பாணர் பற்றிய சிந்தனைகளும் தமிழர்நிலை, சமயம்,கல்விநிலை பற்றியும் மிகச்சிறந்த குறிப்புகள் இந்நூலில் உள்ளன. மணிபல்லவத்தீவு சமயச் சிறப்புடன் இன்றும் விளங்குவதை வரலாற்று நோக்கில் விளக்கியுள்ளார். மணிமேகலை காலத்திலிருந்து இன்றுவரை உள்ள மணிபல்லவத்தீவை நம் மனக்கண்ணில் நிறுத்தியுள்ளார் பேராசிரியர். தமிழர் நிலை அன்றே சிக்கலாக இருந்தமையையும் அரசு உடனடித் தீர்வு காண வேண்டும் என்றும் 1958 இல் எழுதிய தொலைநோக்கு இன்றைய நடப்பியலோடு ஒப்பிடும்போது நெஞ்சம் கலங்குகின்றது.

தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக்கழக ஆட்சிக்குழு உறுப்பினராகச் சிறப்புடன் பணிபுரிந்தபோது, 1985 இல் அ.மு.ப.வின் அடுத்த பயணம் அமைந்தது. ஐரோப்பா, அமெரிக்கா மற்றும் கீழ்த்திசை நாடுகளில் பயணம் செய்யுமாறு தமிழ்ப் பல்கலைக்கழகம் வேண்டியது. எழுபது நாள்கள் (3-4-1985 முதல் 12-6-1985) ஏழு நாடுகளில் பயணம் மேற்கொண்டார். வரும்போது கோலாலம்பூர், சிங்கப்பூர் வழியாக வரவே முறையே மூன்று இரண்டு நாள்கள் அங்கும் தங்கி வந்தார். புதிதாகப்

பயணம் மேற்கொண்ட ஏழு நாடுகளில் சுவிட்சர்லாந்தில் மூன்று நாள்களும் பிரான்சில் நான்கு நாள்களும் இத்தாலியில் இரண்டு நாள்களும் இங்கிலாந்தில் நான்கு நாள்களும் அமெரிக்காவில் நாற்பத்தாறு நாள்களும் ஜப்பானில் நான்கு நாள்களும் ஆங்காங்கில் இரண்டு நாள்களும் இருந்து ஆராய்ந்த செய்திகளே 'ஏழு நாடுகளில் எழுபது நாட்கள்' நூலில் இடம் பெற்றுள்ளன.

மக்களைக் குறித்த ஆய்வுப் பயணமாகக் கொங்குமலை நாட்டுப் பயணம் அமைந்தது. பிற பயணங்கள் யாவும் கல்வி, தமிழ் ஆகிய இரு நோக்கங்கள் குறித்தனவாக அமைந்தன. ஏழு நாடுகளில் எழுபது நாட்கள் நூலில் இதனைத் தெளிவாகக் குறித்துள்ளார். பேராசிரியருடைய நோக்கங்கள் உயர்ந்தவை. அவை முழுமையாக வெற்றி பெற வேண்டுமானால் அந்தந்த மக்களுடன் கலந்து ஒன்றி வாழ்ந்தால்தான், அவர்தம் வாழ்க்கை நெறியை அறிந்தால் தான் முடியும். அதிகார நெறிப் பயணம் செய்தால் பெரிய விடுதிகளில் அரசு விருந்தினராகத் தங்கலாம். ஆனால் மக்களுடன் நெருங்கிப் பழக இயலாமல் போகும். அதனால் எளிமையான பேராசிரியர் எளிமையாகவே அங்கும் வாழ்ந்தார். மக்களின் வாழ்வு நெறியையும் அதனால் விதந்து கூற அவரால் முடிந்தது.

வாழ்க்கையைத் திட்டமிட்டு அமைத்து வையகத்தில் வாழ்வாங்கு வாழும் முறையை உணர்த்தியவர் நம் பேராசிரியர். வஞ்சமின்றி வணங்கும் பண்பைப் போற்றியவர். அதனால் பயணத்தையும் திட்டமிட்டு மேற்கொண்டார். திட்டமிட்ட பயணமே சிறந்த பயண இலக்கியத்தை உருவாக்கும். கற்பனை கலவாமல் இலக்கியநயத்துடன் இந்நூல் உள்ளமைக்கு நாட்குறிப்பு உத்தியில் எழுதப்பட்டிருப்பதே காரணமாகிறது. 'தமிழன் கண்ட மலேயா' நூல் இவ்வுத்தியில் எழுதப்பட்டு வெற்றி பெற்றதால் இந்நூலினையும் அதே முறையில் எழுதியுள்ளார். நூலின் நடையும் அவரைப் போன்றே எளிமையும் தெளிவும் இனிமையும் கருத்தாழமும் கொண்டு இலங்குகின்றது.

பிரெஞ்சு மக்களைப்போல் மொழிப்பற்றும் ஆங்கிலேயரைப் போல் நாட்டுப்பற்றும் ஜப்பானியரைப்போல் உழைக்கும் கடமையுணர்வும் கொண்டால் தமிழர் உலகில் உயர்வர்; புகழுடைவர் என்னும் உண்மையை இந்நூல் உணர்த்துவதாகக் குறிப்பிட்டுள்ளார். நூல் நெடுக உழைப்பின் உயர்வைப் பற்றியே காணமுடிகின்றது. 'செய்யும் தொழில் தெய்வம்' என எண்ணவேண்டும்; காலம் தவறாமல் கடமையாற்றவேண்டும்; இவற்றுடன் மன ஊக்கமும் எழுச்சியும் நிலைபெற்றிருக்கவும் வேண்டும் என இந்நூல் விரும்புகின்றது.

நம் நாட்டுக் குறைகளையோ பிறநாட்டுக் குறைகளையோ சுட்டிக்காட்டி உயர்வைப் புகழ்வது ஒருவகை. ஆனால் குறை அல்லது முன்னேற்றமில்லாமல் கிடக்கும் நிலையை நேரிடையாகக் கூறாமல் பிறர் அடைந்திருக்கும் மேன்மையைக் கூறி முன்னேற வேண்டும் எனும் அவாவைத் தூண்டும் வண்ணம் எழுதுவது சிறந்தகலை. அதில் மனம் புண்பட வாய்ப்பில்லை; விரக்தி தோன்ற வழியில்லை, உயர வேண்டும் என்ற ஆர்வமும் வளரும். இந்த உளவியல் நுட்பத்தினை நன்குணர்ந்த பேராசிரியர் அ.மு.ப. தமிழும் தமிழ்நாடும் முன்னேறுவதற்குரிய கருத்துகளை இந்த அடிப்படையிலேயும் விளக்கிச் சென்றுள்ளார்.

பேராசிரியரின் பயணப் பயன், அனுபவம், கண்டது, கேட்டது, அறிந்தது, உணர்ந்தது யாவும் தமிழ்ச் சமுதாயம் முழுமைக்கும் பயனாகுமாறு இந்நூலில் விரவிக் கிடக்கின்றன.

நம் நாட்டுத் தொடக்கக் கல்வியோடு பிறநாடுகளின் தொடக்கக் கல்வியை ஒப்பிட்டு நம் குறைகளை உணருமாறு செய்துள்ளார். வயது, அறிவு முதிர்ச்சி, விளையாட்டு, கையெழுத்துப் பயிற்சி ஆகியவற்றை நாம் கருத்தில் கொண்டு தொடக்கக் கல்வியைக் கற்பிக்க வேண்டும் என்ற ஆய்வு அறிவியல் அணுகுமுறையாக உள்ளது. பல நாடுகளில் உள்ள பள்ளிக் கல்வியின் குறைகளையும் சுட்டிக்காட்டியுள்ளார். வருவாயில் ஆசிரியர்கள் தன்னிறைவு பெற்றுள்ளமையையும் குறித்துள்ளார். பள்ளி இயங்கும் நேரம், பள்ளி நிருவாகம் ஆகியன பற்றியும் விளக்கி அவற்றால் கல்வித்தரம் உயர்ந்துள்ளமையைக் கருத்தில் கொள்ளுமாறு செய்துள்ளார்.

கல்வி என்பதே சமூகத்தேவை. அது வாழ்க்கையின் பயனாக இருக்க வேண்டும். மாணவர் திறமைக்கேற்பவே அவர்க்குக் கல்வி தரப்படவேண்டும் என்பன கல்வியாளர் சிந்தனைகள். அதனால் மேலை நாடுகளில் காலத்தின் தேவைக்கேற்பக் கல்வி முறையை மாற்றுவதைக் குறித்துள்ளார். அது, குழந்தைக் கல்வி, தொடக்கக் கல்வி, ஆராய்ச்சிக் கல்வி, தொழிற்கல்வி என எத்துறையாகு இருப்பினும் காலத்திற்கேற்ப மாறுதலடைகின்ற உண்மையைக் காட்டியுள்ளார்.

போராசிரியர், ஐரோப்பிய அமெரிக்க நாடுகளில் உள்ள பல்கலைக்கழகங்களில் நடைபெற்று வரும் ஆய்வுகளையும் அவற்றின் சிறப்புகளையும் கூடத் திறனாய்வு செய்துள்ளார். அவை சமுதாய நன்மையைக் கருத்தில் கொண்டே செய்யப்படுகின்ற உண்மை ஆய்வுகளாக உள்ளமையை விளக்கியுள்ளார். பல்கலைக்கழகக் கூட்டம், அதன் அமைப்பு, அதில் விளங்கும் துறைகள், அது அமைந்திருக்கும்

நகரம், அந்த நகரின் சிறப்பு முதலிய செய்திகளும் புள்ளி விவரங்களோடு அமுபஃவால் தரப்பட்டுள்ளன. தனியார் பல்கலைக்கழகங்களும் உள்ளன எனக்காட்டி, அவற்றுக்கென மைய மாநில அரசுகள், தனிச்சட்டம் இயற்றாமையையும் குறித்துள்ளார். அவை, தாமே பாடத்திட்டம் அமைத்துத் தேர்வு நடத்திப் பட்டம் வழங்குவதையும் விளக்கியுள்ளார். தனியார் சுயநிதி பொறியியல் கல்லூரிகள் சில நிகர்நிலைப் பல்கலைக்கழகங்களாக அண்மையில் மாறி வளர்ந்துள்ளன. பேராசிரியர் கண்ட கனவு பதினைந்து ஆண்டுகளுக்குப் பிறகு பலிக்கத் தொடங்கியிருப்பதை அறியும்போது மகிழ்வாக உள்ளது.

தாம் பயணம் மேற்கொண்ட நாடுகளில் தாய்மொழியே கல்வி மொழியாக இருப்பதை அழுத்தமாக உரைத்துள்ளார். அதன் இன்றியமையாமையைத் தெளிவாக எடுத்துக் காட்டியுள்ளார். தமிழ் நாட்டில் தமிழைப் படிக்காமலே, தொடக்கக் கல்வியிலிருந்து உயர் ஆய்வுப் பட்டம் வரை படித்து முடித்துவிடலாம் என்னும் குறை அவர் நெஞ்சை வருத்துவதால் இவ்வாறு அழுத்தமாக உரைத்துள்ளார். பிறநாட்டுத் தமிழர்தம் குழந்தைகள் தமிழை, தமிழ்ப் பண்பாட்டை மறந்து வருவதில் வியப்பில்லை. அதற்கு நாம் உடனடியாக நடவடிக்கை எடுக்கவேண்டும் என்று பல இடங்களில் குறித்துள்ளார்.

> இடம் பெயர்ந்து வாழும் எல்லாச் சமுதாயத்தினரும் எதிரிடும் சிக்கலில் இது ஒன்று. பண்பாட்டுக் கூறுகளில் மதப்பற்று மறைவது மிகக் கடினம். மொழி மறைவது எளிது. ஏனெனில், அதற்கு அந்த நாட்டின் தேவையின்மையே காரணம். இடம் பெயர்ந்தோர் பலர் ஒரே இடத்தில் கூட வாழ்ந்தால் அல்லது தாயகம் திரும்புதற்குத் திட்டமிட்டிருந்தால் தாய்மொழிப் படிப்பைத் தமது குழந்தைகளிடையே வளர்க்க எண்ணுவர். இல்லையேல் செய்திப் பரிமாற்றத்திற்கு வேற்று மொழிகள் பயனாவதால் தாய்மொழி, வீட்டு மொழியாக நாளாவட்டத்தில் பழக்கம் இன்றி மறையும் நிலையை பிஜி, டிரினடாடு முதலிய இடங்களில் வாழும் மக்களிடையே நாம் காண இயலும். இந்தியாவின் பிற மாநிலங்களில் வாழும் தமிழர்களிடையேயும் இந்த இடர்ப்பாடு உண்டு[6]

என வ.அய். சுப்பிரமணியம் குறித்துள்ளது சிந்திக்கத்தக்கதாகும்.

கூடி வாழும் தேவை அல்லது தாயகம் திரும்ப வேண்டிய நிலையில் இருப்போரே தாய்மொழிப் படிப்பை வளர்க்க எண்ணுவர்.

பிறர்க்குத் தேவையில்லாமையால் மொழிமறைவதைத் தடுக்க இயலாது என்பதைக் குறிப்பிட்டுள்ளார். கூடிவாழ்ந்து கொண்டிருக்கிற தமிழகத்தில் தாய்மொழியைப் படிக்காமலேயே வளரும் சூழ்நிலை இருப்பதால் தமிழகத்திலேயே தாய்மொழி விரைவில் மறையக்கூடும் என எச்சரிக்கையை விடுத்துள்ளார். இன்றைய உலகச் சூழ்நிலையை நோக்கினால், தமிழகம் திரும்பும் நிலை பல இடங்களிலும் உருவாகி வருவதை அறியலாம். எனவே தாய்மொழிப் படிப்பினைக் குழந்தைகளுக்கும் தரவேண்டிய கட்டாயத்தில் உள்ளார்கள். தமிழ் நாட்டுக் குழந்தைகளுக்கும் பிற நாட்டில் வாழும் தமிழ்க் குழந்தைகளுக்கும் ஏற்பப் பாடத்திட்டம், பாடநூல், கருவிகள் அமைய வேண்டிய தேவையை இதனுள் நன்கு வலியுறுத்தியுள்ளார் வ.அய். சுப்பிரமணியம்.

> தாய்மொழிப் படிப்பு, பண்பாடு இவற்றை வளர்க்க இடம் பெயர்ந்தோர் தாய்நாட்டை எதிர் நோக்குவது, தாமே கழகங்கள் அமைத்துத் தேவையான பாடநூற்கள், கருவிகள் முதலியவற்றை உருவாக்குவது, இரு நிலையினரும் சேர்ந்து கூட்டு முயற்சி செய்வது என்று மூன்று நிலைகளில் இந்தச் சிக்கலுக்கு நாம் விடைகாண இயலும். பிட்ஸ்பர்கில் உள்ள திருமால் கோவில், ஐக்கிய அமெரிக்காவில் வாழும் இந்தியர்கள் தொகுத்த நிதியினால், தென்னகக் கலைச்சிற்பிகளின் உதவியால் உருவாக்கப்பட்டது. மூன்றாவது நிலைக்கு இது தக்க எடுத்துக்காட்டு. தமிழ்நாட்டில் உள்ள சூழ்நிலைக்கேற்பத் தமிழ்ப் பாடநூற்கள் உருவாக்கப்படுபவை. இலண்டனில் அல்லது சிக்காகோவில் வாழும் இளைஞர்களுக்கு இவை சுவை தரா. குறைந்த பயனை ஒரு வேளை தரலாம். என்னென்ன வகையில் இந்த நூற்கள் அமையவேண்டும், என்னென்ன ஒளி வில்லைகள், வீடியோப் படங்கள் தேவையென அறிவிப்பின் அவற்றை நாம் உருவாக்கி அனுப்பலாம். அல்லது பொருள் வளமும் எந்திரமுன்னேற்றமும் உடைய அந்த நாட்டு அன்பர்களே உருவாக்கலாம். இங்கிலாந்து, நெதர்லாந்து, ஐக்கிய அமெரிக்கா முதலிய நாட்டுப் பல்கலைக்கழகங்களில் தமிழ்த்துறைகள் இருக்கின்றன. அவற்றில் பணியாற்றும் ஆய்வாளர்களின் உதவியை நாடலாம். இப்போது அமெரிக்காவில் உருவாகியுள்ள தமிழ்நாடு அற நிறுவனம் (பவுண்டேசன்) தனது கிளையொன்றை இலண்டனிலும் தமிழ்நாட்டிலும் தோற்றுவித்து இப்பணியை மேற்கொள்ளலாம். தன் காலில் நிற்க முயன்று வெற்றி கண்ட

தமிழ் நண்பர்கள் இவற்றைச் சிந்திக்க வேண்டும். இவ்வாறு கூறினும், தொடக்கத்தில் தமிழக நிறுவனங்கள், பிற நாட்டுத் தமிழர்க்கு உதவுவதைத் தமது கடமையாகக் கருதிச் செயற்படவேண்டும் என்பதை மறக்கலாகாது

என்று நம் பெரும்பொறுப்பையும் கடமையையும் கூறித் தீர்வினையும் குறித்துள்ளார். அமுப கண்டு சிந்தித்துக் கூறியவற்றின்மேல் சிந்தித்திருக்கின்றார் வ.அய். சுப்பிரமணியம். தொடர்ந்து சிந்திக்கும் உணர்வைப் பேராசிரியரது எழுத்து செய்கிறது என்பதற்கு வ.அய். சுப்பிரமணியம் கூற்று சான்றாகிறது. அயல்நாட்டில் வாழும் தமிழ்க் குழந்தைகள் தமிழைப் பயிலத் தமிழகம் உதவ வேண்டிய தேவையை அமுப வலியுறுத்தியுள்ளமையையும் குறிப்பிட்டாக வேண்டும்.

மாணவர்திறன், தேர்ச்சி, நூலகம் பற்றியெல்லாம் முழுமையாக விளக்கியுள்ளார் அமுப. பாரிசு, இலண்டன், நியூயார்க், சிகாகோ நூலகங்களைப் பற்றிய விளக்கங்கள் படிப்போரின் ஆர்வத்தினையும் படைப்போரின் பணியையும் செவ்வனே எடுத்துக்காட்டும் தன்மையை அருமையாக விளக்கியுள்ளார்.

அமெரிக்காவிலும் பிறநாடுகளிலும் வாழும் தமிழர் மொழியையும் சமயத்தையும் மறந்து வாழும் நிலையைக் கண்டும் வருந்தியுள்ளார். மறவாது போற்ற, தமிழக அரசு செய்யவேண்டிய கடமைகளையும் விளக்கியுள்ளார்.

மேலை நாடுகளில் வாழும் உயர்நிலைத் தமிழர் தமிழ் நாட்டில் தொழில் தொடங்க அரசு ஆவன செய்யவேண்டும் என்றும் வெளிநாட்டில் தனியார் துறை சிறப்பாகச் செயல்படுவதால் இங்கும் அவர்கள் சிறப்புடன் செயல்படுவர் என்றும் கூறி வழிகாட்டியுள்ளார்.

இங்ஙனம் கல்வி, தமிழ், சமுதாயம், சமயம், பண்பாடு எனப் பலதுறைகளிலும் தம் புலமையைச் செலுத்தி மிகச் சிறந்த பயண நூல்களைப் பேராசிரியர் அமுப. உருவாக்கியுள்ளார். பேராசிரியரது ஏழு நாட்டுப் பயணத்தின் வெற்றியை அவர் பயணம் செய்து கொண்டிருந்த போதே 'இந்தியா அப்ராட்' (India Abroad) என்னும் பத்திரிகை உறுதி செய்துவிட்டது. 'விசிட்டர்ஸ் பிரம் அப்ராட்' (Visitors from Abroad) என்ற தலைப்பிட்டுப் பேராசிரியரின் படத்துடன் மூன்று பத்திகளில் செய்தியை வெளியிட்டுப் போற்றியது. திட்டமிட்ட பயணமும் சிறந்த நோக்கமும் தொடக்கத்திலேயே வெற்றியை அறிவிக்கும் என்பதை இச்செய்தியிதழ் கண்டு போற்றியதிலிருந்து அறியலாம். "நூல் முழுதும்

மேற்கும் கிழக்கும் இணைந்து காணும் பல காட்சிகள் உள்ளன. அனைவரும் படித்துப்பயன் பெறத்தக்க பயணநூல் இதுவாகும்"[7] என்று நீதியரசர் ஆர். செங்கோட்டுவேலன்.'ஏழு நாடுகளின் எழுபது நாட்கள்' நூலைப் பாராட்டிக் கூறியது (ப. 464) பேராசிரியர் அ.மு.ப.வின் 'தமிழன் கண்ட மலேயா' நூலுக்கும் பொருந்துவதாகும்.

எழுபது வயதில் எழுபது நாட்கள் பயணம் செய்து, தம் வயதை, வயதுக்குரிய நோவை, தனிமையை மறந்து தமிழுக்காகவும் கல்விக்காகவும் உழைத்த பேராசிரியரது பெரும்பணி வரலாற்றில் குறிக்கத்தக்கதாகும். மலேயா நாட்டிலும் மலைநாட்டிலும் இலங்கையிலும் பயணம் மேற்கொண்டு தமிழ்ப் பயண இலக்கியத்திற்குப் பயனுள்ள படைப்புகளைத் தந்தமையும் வரலாறாகும்.

## அடிக்குறிப்புகள்

1. சோ. சிவபாத சுந்தரம், எழுதுவது எப்படி, ப.203
2. நெ.து. சுந்தரவடிவேலு, பாலஸ்தீனப் பயணம், முன்னுரை
3. K.B.S. Menon, Delhi Changing - A Travel Diary, Foreward
4. க.ப. அறவாணன், பயண அனுபவங்களின் பாதை வெளிச்சங்கள், ப.4
5. இரா. மாயாண்டி, சா. வளவன் (தொ.ஆ.), அருந்திறலாளர் அமுப. பக். 129-130.
6. அ.மு. பரமசிவானந்தம், ஏழு நாடுகளில் எழுபது நாட்கள், வ.அய். சுப்பிரமணியம் அறிமுக உரை, ப.3
7. மேலது, ப.464

# நாட்டுப்புறவியல் பணிகள்

கி. மைதிலி

தமிழாய்வு இன்று பல்வேறு பல்கலைக்கழகங்களிலும் ஆராய்ச்சி நிறுவனங்களிலும் பல்வேறு கிளைகளாகப் பல்கிப் பெருகிச் செழித்துச் சிறந்து வளர்ந்துள்ளது. முதுபெரும் அறிஞரான அ.மு.ப.வின் அரிய கொடைகளும் அளப்பரிய கொடைகளும் தமிழுக்கு அழகு சேர்த்தன. ஆற்றல் சேர்த்தன. அனைவர் நெஞ்சமும் ஈர்க்கப்பட்டன. கவிஞராக, நாடகாசிரியராக, நாவலாசிரியராக, பேராசிரியராக, ஆய்வாளராகப் பல்துறைப் புலமை பெற்றவர் அ.மு.ப. மனிதநேயம் மிக்கவர். வாழ்க்கை பற்றியும் வாழுமுறை பற்றியும் தெளிந்த சிந்தனை உடையவர்.

"மனிதன் வாழப் பிறந்தவன். பரந்த அண்டகோள வாழ்வியலில் மனித வாழ்வு ஒரு நொடிக்கும் குறைந்தது என்றாலும் அதில் அவன் சிறக்க வாழவே பழக வேண்டும். உள்ளத்தில் உண்மை ஒளியும் உதட்டில் வாய்மையும் செயலில் செம்மையும் சிறக்க வாழும் மனிதனே அந்த 'நொடி' எனும் கால எல்லையைத் தாண்டி நெடிது வாழ்பவனாவான்" என்பது வாழ்க்கை பற்றிய அவரின் கருத்தாகும்.

தாத்தாவின் ஒரே பேரன் என்பதால் தாய்வழிப் பாட்டனார் வீட்டிலேயே வளர்ந்தார். தாத்தா எப்போதும் 'சும்மா' இருக்க மாட்டார். ஏதாவது கதை சொல்லிக் கொண்டே இருப்பார். அப்போது அ.மு.ப.விற்கு ஐந்து வயது கூட நிரம்பவில்லையாதலால் அவர் சொன்ன கதைகளில் கிளிக்கதை மட்டும் நினைவில் இருந்தது என்று கூறி அக்கதையைத் தம் வரலாற்று நூலில் குறித்து உள்ளார்.

> கிளிகள் கூட்டம் கூட்டமாகச் சஞ்சரிக்கும் காடு. அக்காட்டில் அக்கிளிகளைக் கண்ணி வைத்துப் பிடிக்கும் வேடர்களும் சுற்றிக் கொண்டிருந்தார்கள். ஒருநாள் ஒரு வேடன் வலையை விரித்துக் கீழே தானியங்களையும் பழத்துண்டுகளையும் தூவி விட்டு ஒரு புதரில் மறைந்திருந்தான். எங்கிருந்தோ கிளிகள் கூட்டம் கூட்டமாகப் பறந்தோடி வந்து வலை விரித்திருந்த மரத்தின் மேல் உட்கார்ந்தன. சில கிளிகள் கீழே பார்த்தன.

> பழத்துண்டுகளும் தானியங்களும் தெரிந்தன போலும். அவற்றை உண்ண விரும்பின. எனினும் ஒரு கிழக்கிளி அவை விரிக்கப்பட்ட வலையில் உள்ளதென்றும் அதில் ஆபத்து இருக்கிறது என்றும் சொல்லிற்றாம். என்றாலும் பெரும்பாலான கிளிகளின் விருப்பப்படி அனைத்தும் பறந்து வந்து கீழ் இறங்கிப் பழங்களைத் தின்ன வந்தன. வேடன் வலையில் எல்லாம் சிக்கின. அப்போது எல்லாக் கிளிகளும் அந்தப் பெரிய கிளி சொன்ன பேச்சைக் கேட்காது போனோமே என வருந்தினவாம். ஆயினும் அந்தப் பெரிய கிளி அப்போதும் தளராமல், 'இப்போதும் ஒன்றும் கெட்டுவிடவில்லை. உடனே தாமதிக்காமல் அனைவரும் அப்படியே பறப்போமானால் வலை நம்முடன் வந்துவிடும். நாம் வேறு எங்காவது சென்று அறுத்துக் கொள்ளலாம். உடனே வேடனிடமிருந்து விடுதலை பெற அதுவே வழி' என்றதாம். உடனே தாமதம் செய்யாமல் அனைத்தும் பறந்து விட்டனவாம். பாவம் வேடன் வேகமாக ஓடிவந்தும் அவற்றைத் தடுத்து நிறுத்த முடியவில்லை. இவ்வாறு அக்கிளிகள் தப்பின. இதுதான் கதை[2]

என்று தம் வரலாற்று நூலான 'ஆனந்த முதல் ஆனந்த' வரையில் எழுதியுள்ளார். அந்த நூலின் முதல் இயலே 'தாத்தாவின் கதைகள்' என்பதாகும். அது பஞ்சதந்திரத்தில் உள்ளகதை என்று அறிந்த பின்னும் 'தாத்தாவின் கதை' என்றுதான் சொல்வது வழக்கம் என்றார். தாத்தாவின்தங்கை ஒருவரும் அவருடன் இருந்தார். தாத்தாவின் மறைவிற்குப் பின் அந்தப் பாட்டியின் அரவணைப்பில் வாழ்ந்தார்.

> "பாட்டியுடன் காலையில் பூந்தோட்டத்திற்குச் செல்வேன். பகலில் ஓய்வு வேளையின் போது கத்திரித் தோட்டத்திற்குச் செல்வேன். மாலையில் கோயிலுக்குச் செல்வேன். இப்படிச் செல்லும் போதெல்லாம் அவர்கள் பலப்பல சிறுகதைகளையும் பாட்டுக்களையும் சொல்லிக் கொண்டே இருப்பார்கள். அவர்களுக்கு 'அஆ' படிக்கத் தெரியாது. எழுத்து வாசனையே கிடையாது என்றாலும் பலகதைகள் சொல்லுவதிலும் பண்பாட்டோடு நடந்து கொள்வதிலும் அவர்கள் திறம் வாய்ந்தவர்கள்"[3]

என்று எழுபத்தெட்டாவது வயதில் எழுதியுள்ளார். நாட்டுப்புறக் கதைகளும் பண்பாட்டுடன் நடந்து அவற்றைச் சொன்ன முறையும் அ.மு.ப.வின் குழந்தை மனத்தில் நன்கு பதிந்திருந்தன. வாய்மொழி

வழக்காறுகள் ஆழப்பதிந்திருந்தமையால், வாய்ப்புக் கிடைக்கும் போதெல்லாம் அவற்றிற்குரிய மதிப்பை வழங்கினார் எனலாம்.

> சென்னைப் பல்கலைக்கழகத்தின் முதுகலைத் தமிழ்ப் பாடநூல் குழுவின் முதல் தலைவராக விளங்கும் (அ.மு.ப.) அவர்கள் முதுகலைத் தமிழ்ப் படிப்புக்கு உரிய விருப்பப் பாடங்களுள் ஒன்றாக 'நாட்டுப்புற இலக்கியமும் பண்பாடும்' அமைத்ததும் நன்றியோடு பாராட்டி நல்வரவு கூறத்தக்கதாகும்[4]

என்று சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ்த்துறைத் தலைவராக இருந்த ந. சஞ்சீவி குறித்து உள்ளமை சிறந்த சான்றாகும். மேலும் அவரே, "பேராசிரியர் டாக்டர் மு.வ.வை அடுத்துப் பச்சையப்பர் கல்லூரியில் தமிழ்ப் பேராசிரியராக விளங்கும் அ.மு.ப. அவர்கள் பழங்குடி மக்கள் ஆராய்ச்சியிலும் வாய்மொழி இலக்கிய ஆராய்ச்சியிலும் ஈடுபாடு கொண்டிருப்பது .... சாலவும் சரியாகும்"[5] என்று சான்றளித்துள்ளார். நாட்டுப்புற வழக்காறுகளைச் சிறுவயதிலிருந்து மனத்துள் அசைபோட்டு ஆராய்ந்து ஆராய்ந்து பிறரும் ஆராயும் உணர்வைப் பெற ஆவன செய்த சிறப்பைப் போற்றியாக வேண்டும். 1972இல் நாட்டுப்புறவியலுக்குரிய பாடத்திட்டம் சென்னைப் பல்கலைக்கழகத்தில் உருவாக முதற்காரணமாக அமைந்தவர் அ.மு.ப.

சென்னைப் பல்கலைக்கழக, 'கல்கி' நினைவுச் சொற்பொழிவுகளை 1964-65இல் மூன்றுநாள் நிகழ்த்தியிருக்கிறார். 'பத்தொன்பதாம் நூற்றாண்டின் தமிழ் உரைநடை வளர்ச்சி' என்னும் தலைப்பில் ஆய்வினை மேற்கொண்டு சொற்பொழிவுகளை நிகழ்த்தினார். இரண்டாவது நாள் (16-02-1965) சொற்பொழிவினைப் பொதுமக்கள் இலக்கியம் பற்றி அமைத்துக் கொண்டுள்ளார்.

"கல்லா மக்களிடத்தும் நன்கு எழுதப் படிக்கத் தெரியாத பாமர மக்களிடத்தும் தத்தம் கருத்துப் பரிமாற்றத்துக்காகவும் பொது மக்கள் நலனுக்காகவும் அரசாங்கத்திற்கும் மக்களுக்கும் உள்ள தொடர்பை வளர்ப்பதற்காகவும் பல்வேறு நாட்டு நலன்களுக்காகவும் வாழ்ந்து வளர்ந்து வந்த"[6] வாய்மொழி வழக்காறுகளை நாம் எண்ணிப் பார்க்கக் கடமைப்பட்டுள்ளோம் என்று பேசியுள்ளார். இவற்றிடையே பொதுமக்கள் இலக்கியம் எனக் குறித்ததும் நாட்டுப்புறவியல் துறையில் அவருக்கு இருந்த பற்றினை விளக்கும் சான்றாகும். நாட்டுப்புற ஆய்வு இன்றியமையாதது என்பதைத் தொடர்ந்து வலியுறுத்தி வந்துள்ளார்.

மக்கள் வாழ்க்கை முறையில் எத்தனைப் பிரிவுகளுண்டோ அவர்தம் சூழல் எத்தனைக்கெத்தனை மாறுபடுகின்றதோ அத்தனைக்கத்தனை வகையில் அவர்தம் பேச்சும் வழக்கும் சாதாரண எழுத்து வழக்கும் மாற்றம் பெறுகின்றன. அவற்றை ஆங்கில முறைப்படி 'கொச்சை மொழி' என்றாலும் அம்மொழியே நாட்டுப் பெரும்பான்மையான மக்களின் வாழ்வைப் படம் பிடித்துக் காட்டுகின்றமையின் அதுபற்றிய ஆய்வு இன்றியமையாததாகின்றது. இன்று மொழித்துறையை ஆராய்கின்ற உலக அறிஞர்கள் பலரும் இத்தகைய மக்கள் மொழியாகிய கொச்சை மொழியை ஆராய்ந்து உணர்த்தும் நெறியிலேயே பாடுபடுகின்றனர் என்பதும் கண்கூடு'

என உலகில் நடைபெற்று வந்த நாட்டுப்புற ஆய்வினையும் விளக்குவதோடு, நாட்டுப்புற வழக்காறுகளின் சொற்களைச் சிதைக்காமல் ஆராய்வதும் வேண்டுவதாகும் என விளக்கியுள்ள நுட்பம் சிந்திக்கத் தக்கதாகும்.

பதினெட்டாம் நூற்றாண்டிலேயே தமிழ் நாட்டுப்புற வழக்காறுகளைச் சேகரிக்கும் பணியை மேலைநாட்டினர் தொடங்கியதை ஆராய்கின்றார் அ.மு.ப. "பதினெட்டாம் நூற்றாண்டின் இறுதியிலும், பத்தொன்பதாம் நூற்றாண்டின் தொடக்கத்திலும் வாழ்ந்து, சிறந்த பணியாற்றித் திகழ்ந்த - தம் ஊதியப் பணியையும் தமிழ் உணர்வுப் பணியையும் திறம்படச் செய்த - லெப்டினண்ட் கர்னல் காலின் மெக்கன்சி அவர்கள் சிறந்தவர் என்பது மறக்க முடியாத உண்மை. அரசியல் துறைப் பணியாளராக ஆங்கில நாட்டிலிருந்து தமிழ்நாட்டிற்கு 1782இல் வந்த அவர், தம் பணியோடு பணியாகச் செல்லுமிடங்களி லெல்லாம் வாழ்ந்த கல்லா மக்களோடு கலந்து உறவாடி, அவர்தம் கொச்சை மொழியையும் வளமுற்ற இலக்கிய வளனையும் ஆராய்ந்து எழுதி வைத்துள்ளார்."[8]

"அவரது அறுபத்தெட்டாவது வயது வரை அதாவது மெக்கன்சியின் இறுதி நாள் வரை (1821) நாட்டுப்புற வழக்காறுகளைத் தொகுத்துக் கொண்டிருந்தார். அவரது ஆய்விற்கு உதவியவர் கர்னல் வில்க்ஸ். இவற்றையெல்லாம் சேகரிக்க அக்காலத்திலேயே பதினையாயிரம் பவுண்டு செலவாயிற்று. 1828இல் பேராசிரியர் வில்சன், தாமே வலியவந்து அத்தொகுப்பினை வெளியிட்டார். அந்த வெளியீட்டில் பெரும்பான்மை தமிழிலேயே உள்ளன"[9] முதலிய செய்திகளையும் குறித்துள்ளார் அ.மு.ப.

"மெக்கன்சி தொகுத்தவற்றை ரெவரெண்டு வில்லியம் டெய்லர் முதலிய பலர் ஆராய்ந்து அடிக்கடி ஆய்வுக் கட்டுரைகளும் வெளியிட்டனர்"[10] எனும் செய்தியையும் குறித்து உள்ளார்.

மெக்கன்சி அரும்பாடுபட்டுத் தொகுத்ததை அவரே விவரித்துள்ளதைக் குறிப்பிட்டுத் தமிழில் அவர் தொகுத்துள்ள 192 தமிழ்க் கையேட்டுப் படிகளையும் விவரித்துள்ளார். அவற்றுள் புராண, கட்டுக் கதைகள் என 44, கதை, பாட்டு, நாடகம் என 72, உள்நாட்டு (அ) ஊர் வரலாறு என 39 தொகுப்புகள் உள்ளன.[11]

நாட்டுப்புற ஆய்வாளர்க்குரிய தரவுகள் இவை. கீழ்த்திசைக் கையேட்டுப் பிரதித் தொகுப்பில் இடம் பெற்றுள்ள ஆய்வாளர் ஆயும் முயற்சியை மேற்கொள்ளலாம். ஜான் மெக்கன்சியின் பணியை விவரித்ததின் தொடர்ச்சியாக ஜான்மொர்டாக் பணியையும் குறிப்பிட்டுள்ளார். அவர் 1865இல், நாட்டில் தமிழ் மொழியில் அச்சேறி வெளிவந்த நூல்களையெல்லாம் தொகுத்து, அத்தொகுதிக்குத் தெளிந்த தேவையான ஒரு முன்னுரையையும் எழுதி வெளியிட்டுள்ளார்.

"ஒரு நூற்றாண்டு கழிந்ததும் - உரிமை பெற்று மொழி வளர்க்கின்றோம் என்று கூறிக்கொள்ளும் இன்று வரையும் இவர் காட்டிய வகையில் செயலாற்றுவாரை நாட்டில் இன்னும் காண இயல வில்லை" என்ற ஆதங்கத்தினையும் அ.மு.ப. வெளியிட்டுள்ளார்.[12]

ஜான்மொர்டாக் தொகுத்தவற்றுள் தமிழ் நாட்டுப்புற மருத்துவம், சோதிடம், தந்திரம் முதலியன உள்ளன.

கோவை மாவட்டத்து அந்தியூர் தாலுக்காவைச் சேர்ந்த வரதநல்லூர் கிராம மக்கள் அவ்வூரின் பழைய வரலாறாக, வாய்மொழியாகவே வழங்கி வந்ததை நேரில் கூற, மெக்கன்சி துரையிடம் கூறியதை அவ்வாறே அவருடைய உதவியாளர் எழுதி வைத்ததைப் பதிவு செய்துள்ளார் அ.மு.ப.

> கோயமுத்தூர் ஜில்லா அந்தியூர் தாலுக்காவிற்குச் சேர்ந்த அக்ரகாரம் ஒபனி 'பாவானிகூடல்' மிட்டர் பயிசி மவுசே 'வரதநல்லூர்' அக்கிரகாரம் மகாஜனங்கள் எழுதிக் கொடுத்த கை பியத்து என்னவென்றால் –
>
> பூருவத்தில் சாலிவாகன சகாப்தம் (1100) ஷூ வருஷத்துக்கு மேல் ஊராட்சிக் கோட்டை கிராமத்துக்குச் சேர்ந்தது 'அல்லப்பச்செட்டி' பாளையம் என்று பேட்டையிலிருந்து ஷெ பேட்டைப் பாளையக்கார ராஜகத்தில் காலியாய்ப் போயிற்று.

> *அப்புறம் சகாப்தம் ஆடீள காளயுத்தி வருஷம் தேவராய மகராய மேற்படி அல்லப்பச் செட்டி பாளையத்தில் அல்லாளப் பட்டர், சங்கம பட்டர், வகையரா பிராமணர்களுக்கு அக்கிரகாரமும் கட்டுவித்துக் கொடுத்து 'சோமக்கிரஹன' புண்ணிய காலத்தில் மேற்படி பிராமணர்களுக்கு முப்பத்து நாலு பங்கும் தானம் பண்ணிச் சிவப்பிரதிஷ்டையும் பண்ணுவித்துக் கொடுத்தார். அது முதல் வெகுதானிய வருஷம் வரையில் நிருபாதிக சருவ மானியமாய் நடந்து வந்தது.*[13]

இவ்வாறு தொடங்கியதைக் குறித்த அ.மு.ப., முடிவையும் பதிந்துள்ளார்.

> *நின்ற சர்க்கார் இரண்டு பங்குக்குச் சர்க்கார் மானியம் போட்டுக் கொண்டார்கள். அதுமுதல் எதத் க்ஷணம் வரையில் ஷெ பூமி அனுபவத்து வருகிறோம். இது நடந்த கைபீயத்து இக்கைபீது எழுதினது ஷெயூர் ஜனம் பேர், குப்பன் எழுத்து இராமையன் கையெழுத்து, இரங்கையின் ருசுவு, திருமலைராயன் ருசுவு நாராயணன் ருசுவு*[14]

எனக் குறிப்பிட்டு விட்டு, அவற்றுள் காணும் சில சொற்களுக்கு விளக்கமும் தந்துள்ளார்.

கைபீயத்து, கைபீது என்பதற்கும் விவரக்குறிப்பு என்றும் கைபீயத்து நாமா என்பதற்குப் பிரமாணப் பத்திரம் (Affidavit) என்றும் ருசுவு என்பதற்குச் சாட்சி என்றும் விளக்கியபின், 'மிட்டாபயிசி மவுசே' என்பது அக்கிராமம் தானமாகக் கொடுத்த வகையை விளக்கும் தொடர் போலும் என்று குறித்துள்ளார்.[15]

இவ்வாறான கைபீதுகள் எண்ணற்றவை என்றும் அவற்றைத் தொகுக்கும் முயற்சி வேண்டும் என்பதை 1965லேயே அ.மு.ப. வெளியிட்டுள்ளமை, நாட்டுப்புற வழக்காறுகளைத் தொகுத்திடும் ஆர்வம் அவருக்கிருந்தமையைக் காட்டும். அன்றே தொடங்கியிருந்தால் இன்று நாட்டுப்புறவியல் ஆய்வு பெரு வளர்ச்சியைப் பெற்றிருக்கும் என்பதில் மாற்றுக் கருத்து இல்லை.

வாய்மொழி வழக்காறுகள் பல்வேறு வகைப்பட்ட வரலாறுகளை எழுதச் சான்றாதாரங்களாகப் பயன்படும். வரலாறுகள் பலவற்றை மீட்டுருவாக்கம் செய்யவும் அவை பயன்படும். இவற்றை மனங் கொண்டே வழக்காறுகளைத் தொகுக்க வேண்டும் என வலியுறுத்தினார் அ.மு.ப.

குறும்பர் நாடு என்பது சதுரங்கப்பட்டினத்தை அடுத்த நிலப்பகுதியான குறும்பரை நாடாகும். ஆனால் குறும்பர் என்னும் மரபினர் வாழ்வைக் காணல் அரிது. இதற்கான காரணத்தை இன்றும் நம்மால் அறிய முடியவில்லை. ஆனால் வாய்மொழியாக வழங்கும் வரலாறு "குறும்பர் வாழ்வு வீழ்ந்த வரலாற்றை அப்படியே படம்பிடித்துக் காட்டுவது போன்று அமைந்துள்ளது" என்று குறிப்பிட்டு அந்த வரலாற்றை மூன்று பக்கங்களில் பதிப்பித்துள்ளார்."[16]

வரலாறு மட்டுமன்று நாட்டுப்புறக் கதைகள் பலவற்றையும் தொகுத்துள்ள மெக்கன்சியின் பணிகளைப் பாராட்டியுள்ளார். நடேச சாஸ்திரி தொகுத்த, திராவிட நாட்டுப் பூர்வகாலக் கதைகள், மத்திய காலக் கதைகள் முதலியன பற்றி அ.மு.ப. குறிப்பிட்டுள்ளமை அவரது வாய்மொழி இலக்கிய ஆர்வத்தினை உறுதிப்படுத்தும்.

நாட்டுப்புறப் பாடல்களை, குறிப்பாக ஒப்பாரிப் பாடல்களை வாழ்வியல் நோக்கில் அணுக வேண்டும் என்பதை விவரித்து உள்ளார்.

"கணவனை இழந்த கைம்பெண்ணைச் சுற்றி அழுவதைப் பற்றிய குறிப்பு ஒன்று அமரம் பேடு முத்துசாமி முதலியார் எழுதிய சமூக இயல் பற்றிய 'அபிமானம் என்பது என்ன?' என்ற 1886இல் வெளியான நூலில் உள்ளது"[17] என்று கூறி "அழுகை" பற்றிய விளக்கத்தினை முத்துசாமி தந்திருப்பதை முழுமையாக எடுத்துக் காட்டியுள்ளார்.

> பெண்கள் மயிரிழவு, மாரிழவு, காலடவு, கட்டியழல் என்னும் ஆசாரங்களை நடத்துகையில், கட்டியழும் போது வாசல் பெரியதாயிருக்குமாயின், திட்டுதிட்டாகப் பத்துப்பதினைந்து பேர் வட்டமாக நின்று, கைகோத்து அசைந்தாடி ஒருவித ராகத்தோடு பாடிக்கொண்டு, கொஞ்சகாலங்கழிந்தபிறகு வேறு நடைச் சந்தத்தோடு பாடிக்கொண்டு, காலடவு போட்டு மார்பிலடித்துக் கொண்டு சுற்றி வருகையில் புதிதாய்க் கற்றுக் கொள்ளுகிறவளாகவாவது விதரனை இல்லாதவளாகவாவது இருந்து, அடவுச்சரியாய்ப் போடாதவளைக் கையைப் பிடித்திழுத்து வெளியில் விட்டு விடுகிறார்கள்[18]

என்று ஒப்பாரி பாடும் முறையை விவரித்துக் கொண்டே செல்கின்றார்.

நாட்டுப்புற மருத்துவச் சோதனை முறை ஒன்றையும் வெளிப்படுத்தியுள்ளார் அ.மு.ப. வ.உ.சி. தொடக்கக் காலத்தில் எழுதிய சிற்றின்பச் சிரோன்மணிகளில் குறிக்கப்பட்டிருந்ததையும் ஆய்வு நெறிப்படிச் சுட்டிக்காட்டி உள்ளார்.

> ஆண்பெண்ணிருவரில் மலடர் இன்னார் என அறியும் தந்திரம் மொச்சை விரையை இரண்டு பாத்திரங்களிற் போட்டு புருஷனுடைய சிறுநீரை ஒரு பாத்திரத்திலும் ஸ்திரியினுடைய சிறுநீரை ஒரு பாத்திரத்திலும் தனித்தனி விட்டுவந்து 5 தினத்திற்குப் பிறகு யாருடைய நீர்விட்ட கொட்டை முளைக்கவில்லையோ அவர்களே மலடென்று கண்டு தகுந்த சிகிச்சை செய்ய வேண்டியது. இவ்வாறே சுரைக்கொடிப் பயிரிலும் திருஷ்டாந்தங் காணலாம். ஆனால் ஒரு நீர் விட்டு ஒரு மாதம் கழிந்த பின்னர்தான் மறுநீர் விட்டுப் பார்க்க வேண்டும். வெவ்வேறு கொடிகளினால் ஒரே காலத்தில் பரிக்ஷிக்கலாம்.[19]

ஒரு நூற்றாண்டிற்கு முன் வெளிவந்த இச்சோதனை போன்றே பழமொழி, வேடிக்கை, விடுகதைகள் முதலியவற்றைச் சார்ந்த உரைநடைகளும் இருந்தமையை அறிவித்துள்ளார்.

வாய்மொழிப் பாடல்களைப் பாடி நடித்திருக்கும் அனுபவமும் அ.மு.ப.வுக்கு உண்டு. அவரது ஊரான அங்கம்பாக்கத்தில் ஐந்தாம் வகுப்பு வரை இருந்த 'போர்டு' பள்ளிக்கூடம் சில ஆண்டுகட்கு முன் தொடங்கப்பட்டிருந்தது. முதல் தலைமை ஆசிரியராக நடேச ஐயர் என்பார் இருந்து நன்றாக நடத்தி நல்ல பெயர் வாங்க முயன்றார். அ.மு.ப. ஐந்தாம் வகுப்பு படித்துக் கொண்டிருந்த போது 'அல்லி அர்ச்சுனர்' நாடகம் நடத்த முடிவு செய்து அ.மு.ப.வை நடிக்கக் கூறினார். அவர் பாட்டி அழகாகப் பின்னுவார். 'சிலசமயம்' 'கிருஷ்ணன் கொண்டை' என்று தலையை முன்னே முடிந்து, அழகாகக் கட்டிக் கிருஷ்ண வேடமும் புனைவார்கள். அது அழகாகத் தெரியவே, தலைமை ஆசிரியர் அ.மு.ப.விற்குக் கிருஷ்ண வேடத்தைக் கொடுத்தார். அந்தப் பாத்திரத்திற்குரிய பாடல்களைப் பாடி நடித்திருக்கின்றார்.

> தக்க பாராங்கல்லைத் தூக்கி – மாமன் – தலைக்குயரமா தாக்கி
> பக்குவமாய் வழி நோக்கி – சென்று – பார்ப்போம் அல்லியைக்
> கண்டுத் தேடி அன்பாய் அல்லியை மணந்து – அவள் – ஆசை
> தணியவே சுகித்து இன்பமாய் நம்மோடழைத்து – நாம் –
> இந்திரப் பிரஸ்தம் செல்வோமே[20]

என்று எண்பத்தெட்டு வயதிலும் நினைவில் இருந்த பாடலைக் குறித்துள்ளார். அர்ச்சுனனும் அல்லியும் பாடிய பாடலொன்றையும் நினைவிலிருந்து எடுத்து மொழிந்துள்ளார்.

மாமதி மிகு மதுரை - வாழும் மாதரே அல்லி மகாராணி
- - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - -
உனக்கு இசைந்த கணவன் - நான்தான் - உத்தமியே
உந்தன் இருகாலைப் பிடித்தேன்

என்று அர்ச்சுனன் பாடி ஓடியபின், அல்லி ஆவேசத்தோடு பாடியதை நினைவுகூர்கிறார்.

அஞ்சாத நெஞ்சமுற்றிங்ஙனம் வந்தவன் ஆரடா ஆரடா சொல்
ஆண்மைத்தன மறியாத மடையனே ஓடாதேஓடாதே நில்
வஞ்சிமுன் நின்றிடில் நெஞ்சைப் பிளந்துனை வாட்டி
வதைத்திடுவேன்
வக்கணை பேசினாய் வெட்கமில்லாமலும் வாயைக் கிழித்திடுவேன்
கொஞ்சமும் அஞ்சாது மிஞ்சி எனக்கொரு கொச்சைக் கதை உரைத்தாய்
கோதைமுன் நின்று பதில் உரைக்காமலே பாதகா எங்கொளிந்தாய்[21]

என்னும் பாடல் மறக்க வொண்ணாப் பாடல் ஆனதைக் குறித்து உள்ளார். பாடத்தெரியாத அ.மு.ப.விற்கும் பாடும் வாய்ப்பினை ஏற்படுத்திக் கொடுத்த நாடகமது. கிருஷ்ணன் குறத்தியாக வந்து அல்லிக்குக் குறிசொல்லும் போது பாடினாராம். குறத்தியாக வந்தபோது தெய்வம் ஏறப்பெற்றுக் குளிகை மருந்தை அருச்சுனனுக்குக் கொடுத்துக் குளத்தில் கரைக்கச் சொன்ன காட்சியும் இடம் பெற்றது. குளிகையைக் குளத்தில் கரைக்கும் போது அர்ச்சுனன் பாடும் பாட்டும் நினைவில் இருந்திருக்கிறது.

வஞ்சிகுற மாதுதான் தந்த - மாத்திரை தன்னை - நேர்த்தியாக
வாகுடன் உறைக்கின்றேன் அந்த
வண்ணமுள தொரு - அன்ன நடை அல்லி தன்னிடமன
மிளகவில்லையே
மட்டிலா மதுரை ராணியே - வந்துமே என்னை - சிந்தை மகிழ
மாமணம் புரியவா நீயே
உந்தனை நினைந்தினிதாக - உல்லாசமாக - மெல்லியே யானும்
உறைக்கின்றேன் மருந்தை நேராக
உற்றதோர் ஆவலைத் தீர்ப்பாயே - உற்பனமுள்ள - விற்பனமாதே
உரியநேசம் என்னைக் கொள்வாயே.[22]

நான்கு மணிநேர நாடகமான இதில் பல பாடல்கள் இருந்திருப்பினும் சில பாடல்களே நினைவில் இருந்தன. இப்பாடல்கள் ஒன்றுமில்லாத பாடல்கள் என்ற கருத்துடையவராக இருந்தார் அமுப.

ஆனால் ஊர் மக்கள் நாடகத்தின் போது கை தட்டி ஊக்குவித்ததையும் தம்நினைவில் இருந்ததையும் குறித்துள்ளார். அந்த நாடகம் அவரது உற்றாரையும் மற்றாரையும் பாதித்திருக்கிறது.

> ஆனால் என்னை நாடகம் விடவில்லை. எனது எதிர் வீட்டில் இரண்டு பாட்டிகள் இருந்தார்கள். நாடகம் முடிந்த மறுநாளிலிருந்து எல்லாரும் எங்கள் தெருவில் கூடி விடுவார்கள். என்னை அந்த நாடகப் பாடல்களையெல்லாம் பாடச் சொல்லுவார்கள். நான் உள்ளே ஓடிவிட்டாலும் ஓடிவிடுவேன். என் பாட்டியும் கற்றதைக் காச்சியா குடிக்கப் போகிறாய், 'ஏதோ ஆசையாகக் கேட்கிறார்கள் பாட்டிகள் என்று பாடுவாயா! என்னமோ பிகுப் பண்ணுகிறாயே' என்பார்கள்.[23]

அதனால் எட்டாவது படிக்கும் காலத்திலும் அவர்கள் கேட்க அப்பாடல்களைப் பாடினாராம். பொருள் ஒன்றுமில்லாத பாடல்கள் என எண்ணினாலும் பின்னர், பொருள் பொதிந்த பாடல்கள் நாட்டுப்புறப் பாடல்களாக இருப்பதை உணர்ந்து கொண்டு அவற்றைப் போற்றுவாரையும் போற்றத் தொடங்கினார்.

இலக்கியக் கலைகளுக்குள்ளேயே கவிதை, கட்டுரை, கதை, நாடகம் முதலியன பழைமையான கலைகளாகி விட்டன. இதழியலும் வளர்ந்த பின் புதிய துறைகளாக விளங்கத் தொடங்கியவை மானிடவியலும் மொழியியலும். இலக்கியக் கலைகளான கவிதைத் துறையிலும், கட்டுரைத் துறையிலும், கதைத்துறையிலும், நாடகத்துறையிலும், இதழியல் துறையிலும் தம் தடம் பதித்தவர் அ.மு.ப. அவை தனித்தனியே ஆய்வதற்குரியன. புதிய துறைகளாக அ.மு.ப. காலத்தில் விளங்கிய மானிடவியல், மொழியியல் துறைகளில் மானிடவியல் பெற்ற பெருங் குழந்தை மொழியியல் என்பார் பேராசிரியர் ந. சஞ்சீவி.[24]

அந்த மானிடவியல் துறையிலும் 1966இல் ஆர்வத்தோடு ஈடுபட்டுச் சாதனை படைத்துள்ளார் அ.மு.ப. 1966இல் உஸ்மானியப் பல்கலைக்கழகத் தமிழ்த் துறைத் தலைவராக ஓர் ஆண்டு பணியாற்றினார். அங்கிருந்த போது பழங்குடி மக்களின் பண்பையும், வாழ்வையும் ஆராயும் வாய்ப்புக் கிடைத்தது. நாற்பது நாள் ஆராய்ந்து 'மலைவாழ் மக்கள் மாண்பு' எனும் நூலை எழுதி வெளியிட்டார். சேலம், தர்மபுரி, கோவை, நீலகிரி ஆகிய நான்கு மாவட்டங்களில் வாழும் பழங்குடி மக்களைக் களஆய்வு செய்து விரிவாக எழுதியிருக்கின்றார்.

மானிடவியல் துறையோடு நெருங்கிய தொடர்புடைய துறைகளுள் ஒன்று நாட்டுப்புறவியல் துறை. எனவே வாய்மொழி வழக்காறுகளைச் சேகரித்து, தொகுத்து அரிய நூலாக ஆக்கி உள்ளார். மலை வாழ்மக்களில் தோதவர் (உதகை), போதவர் (நீலகிரி), படகர் (உதகை) தனியார் - நாயக்கர் (நீலகிரி, கோவை, மாதண்ட ஹன்னி - தருமபுரி), இருளர் (நீலகிரி, மாதண்ட ஹன்னி - தருமபுரி), மலையர் (கோவை) பஸ்தர் (ஒக்கனக்கல் - தருமபுரி), சிவச்சாரத்தார் (குடகலை - தருமபுரி), மலையாளிகள் (ஏற்காடு - சேலம்) ஆகிய பத்துப் பழங்குடி மக்கள் இனத்தை ஆராய்ந்துள்ளார். 'மலைவாழ் மக்கள் மாண்பு' எனப் பெயரிட்டதற்கு அ.மு.ப. சொல்லியுள்ள காரணம் சுவையும் பயனும் நிறைந்ததாகும். அது, 'பழங்குடி மக்கள்' பெயர்களுள் பெருவரவினதாய் இருப்பன மாண்பன் - மாண்பி என்பவாம். அதனால் 'மாண்பு' எனப் பெயரிட்டாராம்.

மருதமலையில் வாழும் இருளர், தமக்கும் மருதமலை மருதாசலனுக்கும் உள்ள உறவினைக் கதையாக வழங்குவதை விரிவாக விளக்கியுள்ளார்.[25]

கோனியம்மன் தெய்வம் தோன்றிய வரலாறு, மருதமலையில் மருதமரம் வெட்ட வந்தவர் பட்ட வரலாறு, அம்மருத மரத்தின் கீழ் முருகன் தன் மனைவியருடன் இருப்பதாகக் கூறி, அவற்றை எடுத்துக் கோயிலமைத்துப் பூசை செய்வித்து வாரத்தில் இரண்டு நாள் திங்கள், வெள்ளிக்கிழமைகளில் பால்குடம் கொண்டு வந்து அபிடேகம் செய்தால், பட்டவர் பிழைப்பர் என்று கோனியம்மனிடம் மருதாசலன் கூறிய வரலாறு ஆகியன உள்ளன.

ஏற்காட்டை அடுத்த சிற்றூரில் நடந்த திருமணத்தை விவரித்துள்ளார். திருமணச் சடங்குகளைச் செய்பவர் காரியக்காரர். தப்பட்டையும் மேளமும் இடையிடையே முழங்கத் திருமண நிகழ்ச்சிகள் நடந்தன. வயதான காரியக்காரர் மணநிகழ்ச்சி ஒவ்வொன்றிற் கிடையிலும் பாடல்களைப் பாடிக் கொண்டிருந்ததைக் கண்டுகேட்டுக் களித்திருக்கின்றார் அ.மு.ப.

> அக்காரியக்காரரை மலையாளிகள் கணியர் என்றும் கரணத்தார் என்றும் அழைத்தார்கள். "நாள் கணித்தும் நேரம் கணித்தும் தருகின்ற முறையிலே நகரங்களில் உள்ள புரோகிதர் போன்றோர் அவர் என உணர்ந்தோம். கரணத்தார் என்ற சொல் என்னைத் தொல்காப்பியர் காலத்துக்கு ஈர்த்துச் சென்றது. . . . இவர்களுக்கு (மலையாளிகளுக்கு)த் தொல்காப்பியத்தின் பெயர்

> கூடத் தெரியாது. எனினும் அக்கரணத்தார் தன் கரணங்களைப் பாடிப்பாடி முறையாகச் செய்து வந்தார்[26]

என்று குறிப்பிட்டுள்ள அமுப. வாய்மொழி வழக்காறே எழுத்து வடிவம் பெற்றது என்பதற்கு மேலும் ஒரு சான்றிதழைத் தந்துள்ளார்.

திருமணத்தில் கணியருடன் வேறு இருவர் பாடுவதையும் நலுங்கு, வழிபாடு, தாலி அணிதல் முதலிய சடங்குகள் உள்ளமையையும் விவரித்துள்ளார். தோதவர் இனத் திருமணத்தை நேரில் கண்டு விவரித்திருக்கிறார். "மண நாளை முன் கூட்டியே எல்லா 'மந்து'களுக்கும் தெரிவித்து விடுகின்றனர்" என்றும் மணத்துக்கு முதல்நாள் மிக முக்கியமாகச் சில நிகழ்ச்சிகள் நடைபெறும் என்றும் குறித்த பின் திருமணத்தின் சில சிறப்புகளைக் குறித்துள்ளார்.

> இவர்கள் மணத்துக்கெனச் சோதிடரை அழைத்து நாளும் நேரமும் காண்பது இல்லை. நான் கண்ட மணம் நிறைந்த அமாவாசை நாளில் செவ்வாய்க்கிழமையில் பகல் 12 மணி அளவில் நடைபெற்றது. அதற்கு முந்தின நாள் மணமனைக்குச் சற்றுத் தொலைவில் தோட்டத்தில் ஒருவகை வழிபாடு நடைபெறும். முதல்நாள் மாலை (சில விடங்களில் மாலை இருட்டில்) அவ்விடத்தைத் துப்புரவு செய்து வழிபாடு தொடங்குவார்கள். இரு குச்சிகளை நட்டு வைத்து அவற்றிற்குக் கறுப்புத் துணியை ஆடையாக்குவர். ஆணைப் 'பீரி' என்றும் பெண்ணைப் 'பீனி' என்றும் அழைக்கிறார்கள். அவை தெய்வங்களாகப் போற்றப் பெறுகின்றன. அவற்றுக்கு உணவு படைப்பர். அவ்வுணவினை மணமகள் தன்கையாலேயே சமைக்க வேண்டும். அப்புதுப்பானையில் அமைந்த பொங்கலை இரு தெய்வங்களுக்கும் இலையிட்டுப் படைப்பர். அதே வேளையில் நூல்திரியைக் கொளுத்த மணமகள் கையில் நான்கு இடங்களில் சுடுவார்கள். அவை அச்சுட்ட இடம் தெரியும் அளவிற்கு அமையும் - பெரும் புண்ணாகாது. அதுபோது எல்லா உறவினரும் அருகிருந்து வாழ்த்துவர். நெருங்கிய உறவினர் செல்வனாகிய சிறுமகன் அப்போதுநீர் கொண்டு வந்து அந்த இரு உருவங்களின் பேரிலும் தெளிப்பான். பிறகு எருமை மீதும் தெளிப்பர். . . . சிறுவன் சிறு மூங்கில் மூன்று கொண்டு வந்து அதில் அப்பொங்கல் நீரை மறுநாள் விடியலில் மாடுகள் பேரிலும் பயிர்களின் மேலும் தெளித்து 'நல்ல வளம் பெருக வேண்டும்' என வணங்கும் முறையை இது ஒத்தது[27]

என்று தோதவர் மணச் சடங்குகளை விவரிக்கும் போது நாட்டுப்புறச் சடங்கினையும் ஒப்பிடும் சிந்தனை அவரது நாட்டுப்புறவியல் ஈடுபாட்டினைக் காட்டும். மறுநாள் நடைபெறும் மண நிகழ்ச்சி இயற்கையோடு இயைந்திருப்பதையும் விளக்கி உள்ளார்.

> அங்குள்ள காட்டு நாக மரத்தில் சிறுமுழையை உண்டாக்கினர். அதில் நெய் விளக்கிட்டு அது முன்னர்தான் மணத்தை நடத்தும் வழக்கம் அவர்களுடையது. அதற்கு முன் அங்கே மணம் நடைபெற்றமைக்கறி குறியாக அதில் பல முழைகள் இருந்தன. அந்த முழையின் அடியில் சிறுசிறு குவிந்த கற்கள் இட்டு நவதானியங்களை அவற்றுள் நிரப்பினர். அந்த இடத்துக்கே விழாக்காண வந்திருந்த அனைவரும் வந்து சேர்ந்தனர். வந்த பெரியவர்கள் எல்லாம் ஒருபுறம் அமர்ந்தனர்.
>
> மணமகனும் மணமகளும் பெரியவர்தம் அடிகளில் வீழ்ந்து ஒவ்வொரு பகுதியாகச் சென்று பணிந்து – வணங்கினர். அந்த நிகழ்ச்சி அவர்கள் பெரியவர் தம் வார்த்தையைப் பெரிதாகக் கொண்டனர் என்பதைக் காட்டிற்று.
>
> விளக்கின் முன் மணவினைக்குரிய பெருஞ் சடங்கு தொடங்கிற்று. மணமகன் கொடியை வளைத்து வில்லாக்கி மாமனாரிடம் உத்தரவு பெற்று அக்கொடி வில்லை மணமகள் கையில் கொடுத்தான்.[28]
>
> மணம் நிகழும் போது வந்திருந்த பெரியவர்கள் பல்வேறு வகைப் பாடல்களைப் பாடினர். அவை மணமக்கள் வாழ்வு இன்னின்ன வகையில் இன்னின்ன செல்வம் பெற்று ஓங்கி உயர வேண்டும் என்னும் பொருளைத் தருபவை.
>
> இம்மணவினைக்கு வாத்தியங்கள் – வேறு ஆரவார ஒலிகள் ஒன்றும் கிடையா. அமைதியான முறையில் அன்பரும் பெரியவரும் வாழ்த்தும் நல்வாழ்த்தொலியே மண ஒலியாக அமைந்தது. அப்படியே இவர்தம் விருந்திலும் ஆரவாரம் காண முடியவில்லை. எளிய உணவு. சோறு, கறி, குழம்பு, மோர் என்ற அளவிலே உணவு அமைந்தது. அப்படியே 'ஆரவார' வரவேற்பும் வாழ்த்துக் கூட்டங்களும் கிடையா. தம் மண வாழ்வு அமைதியான பண்பாட்டில் – ஆன்றோர் தம் நல்வாழ்த்தின் வளத்தாலும் தெய்வ நலத்தாலும் தொடங்கப் பெறுகின்றது[29]

என்று மனம் நிறைந்து போற்றியிருக்கின்றார். இறப்புச் சடங்குகளையும் விவரித்துள்ளார். எருமை அங்கும் இன்றியமையாத இடத்தைப் பெறுவதைக் குறிப்பிட்டுள்ளார். எல்லாச் சடங்குகளிலும் பாட்டுக்கள் இருப்பதையும் மறவாமல் குறிப்பிட்டுள்ளார். தோதவர், ஆண்டில் சில முறை விழாவைக் கொண்டாடுவதையும், அவ்விழா மார்கழி மாதத்தை ஒட்டி நடைபெறுவதையும் குறிப்பிட்டு,

> இவ்விழாவில் அனைவரும் களிக்கப் பாடுகின்றனர். நடனம் ஆடுவது முக்கிய நிகழ்ச்சி. பெண்கள் ஒன்று சேர்ந்து பாடியாடும் விழா நிகழ்ச்சி சிறப்பு வாய்ந்தது. பெண்கள் பாட்டிசைக்க ஆண்கள் கூடி நடனமாடும் சிறப்பும் போற்றற்குரியதாகும்[30]

என வாய்மொழி இலக்கியம் சிறப்பிடம் பெறுவதையும் நடனம் சிறப்பிடம் பெறுவதையும் போற்றியுள்ளார். பாடல்களின் பொருளை விவரித்துள்ளார். ஒப்பாரிப் பாடல்களும் சிறப்பாக உள்ளனவாம். காதல் பாட்டும், வீரப்பாட்டும் தோதவர் வாழ்வில் நிரம்ப இடம் பெற்றுள்ளனவாம். இவற்றை ஆராய்ந்தால் நல்ல பயன்பெறலாம் என்று குறிப்பிட்டு ஆர்வலரைஆராயுமாறு ஊக்குவித்துள்ளார்.[31]

தோதவர் கொண்டாடும் தீபாவளிப் பண்டிகை வேறுபட்டிருப்பதை விளக்கியுள்ளார்.

> மற்றவர் கொண்டாடும் தீபாவளிப் பண்டிகைக்கும் இதற்கும் யாதொரு தொடர்பும் கிடையாது. தத்தம் குடும்பத்தில் இறந்தவர்களைக் கொளுத்திய இடத்திலிருந்து சிறிது மண் எடுத்து வைத்திருப்பார்களாம். இரண்டாண்டுக்கு ஒருமுறை அவ்வாறு வைத்த மண்களையெல்லாம் ஒன்றாக வைத்து விளக்கினை வரிசையாக ஏற்றிப் போற்றுவார்கள், இதுவே இவர்கள் கொண்டாடும் தீபாவளியாக அமைகின்றது.. . . . ஒருவர் இறந்தாலும் சிலர் இறந்தாலும் அனைவரையும் சுட்ட இடத்து மண்களைச் சேர்த்து வைத்துத் 'தீபாவளி' கொண்டாடுவர். இந்த விழாவிற்கும் உறவினர் பலர் வரவழைக்கப் பெறுவர். பிறகு விருந்து நடைபெறும். இறந்தாருக்குச் செய்யும் இறுதிக்கடன் இத்துடன் முடிகிறது[32]

என வேறுபட்ட தீபாவளியை விவரித்து முடித்திருக்கின்றார்.

படகர் மாரியம்மன் விழாவினைக் கொண்டாடும் சிறப்பினைக் குறிப்பிட்டுள்ளார்.

"மாரியம்மன் விழாவும் இவர்களுக்கு மிக முக்கியமானது. இவ்விழாவில் ஊரில் உள்ள ஆண்கள் அனைவரும் ஒன்று சேர்ந்து கொம்மி அடித்து விளையாடுவார்களாம்" என்றும்,

"இவ்விழா மிகக் குறுகிய காலமாகிய ஒருவாரம் தொடங்கிச் சிலவிடங்களில் இரண்டு திங்கள் வரையில் நடைபெறுமாம். ஆயினும் எல்லா ஊரிலும் ஒரே காலத்தில் இவ்விழாவை வைத்துக் கொள்ள மாட்டார்களாம். தம் இனத்தவர் எல்லாரும் ஊர்தொறும் நடைபெறும் எல்லா விழாக்களிலும் கலந்து கொள்ள வேண்டும் என்ற மரபு உண்மையின், இவர்கள் ஒவ்வொரு ஊரிலும் வெவ்வேறு வாரங்களில் இவ்விழாவினை வைத்துக் கொள்வார்களாம். இவ்வாறே பல ஊர்களில் இவ்விழா தொடர்ந்து இரண்டு திங்கள் வரை நீடிக்கும் போலும். இவ்விழாவில் வெறும் விளையாட்டு மட்டுமின்றி நல்ல விருந்துகளும் நடைபெறும் என்றனர்"[33] என்றும் குறிப்பிட்டு, ஒற்றுமையுணர்வைத் தக்க வைத்துக் கொண்டிருப்பதை வெளிப்படுத்தியுள்ளார். காட்டிலும் காட்டாற்று வெள்ளத்திலும் சிலர் மறைந்து போகலாம். அதனால் கூட்டாக இறப்புச் சடங்கினைச் செய்யும் வழக்கம் படகரிடம் உள்ளது. அதனால்,

"பலவருடங்களுக்கு ஒருமுறை ஊரில் உள்ளவர்கள் எல்லோரும் கூடி அவ்வாறு காணாது மறைந்தவர்களுக்கும் அறிந்து மறைந்தும் சடங்கு ஆற்றாது நின்றவர்களுக்கும் சடங்கு ஆற்றப் பெற்றவர்களுக்கும் அனைவருக்கும் ஒன்றாக இறுதிச் சடங்குகளை நடத்தும் வழக்கம் இவர்களிடம் உள்ளது" என்று குறிப்பிட்டு, "ஆக இறந்தபின் செய்யும் சடங்கிலும் இவர்கள் கூட்டுச் சமுதாய வாழ்வையே மேற்கொள்கின்றனர்"[34] என்னும் சிறப்பான, தேவையான கருத்தைப் புலப்படுத்தும் அ.மு.ப. "இச்சடங்கினைப் 'பரசாவுச் சடங்கு' என்றே கூறுகின்றனர். இது தமக்குச் சம்பந்தமில்லாத தம் குடும்பத்தைச் சாராத வேறுமக்களாகிய பிறர் இறந்ததற்குச் செய்யும் சடங்கு என்ற பொருளில் வழங்கப்படும் சடங்காகும்" என்கிறார்.

> இறந்தவர்கள் பெயரைச் சொல்லி மண் கொண்டு வந்து வைத்து அந்த மண்ணையே சடங்குக்கு உரியவராக்கி எல்லாச் சாவுச் சடங்குகளையும் செய்வோம். சாவுக்குத் தேர் சிங்காரித்து, பிற வாத்தியங்கள் வைத்து எடுத்துச் சென்று செய்ய வேண்டிய சடங்குகள் அனைத்தும் செய்து முடிப்போம்[35]

என்று படகர் கூறியதைக் குறிப்பிட்டுள்ளார்.

உதகையில் வாழும் பனியர் குடும்பத்தில் ஒருவர் இறந்து விட்டால் எளிய வகையில் பிணத்தை அடக்கம் செய்வர். வேறு சடங்கு

ஒன்றும் இல்லை. ஆனால் மூன்றாண்டு கழித்து அவருக்கு வினை முடிவாகிய 'கரு மாந்திரத்தைச்' செய்வர். அதற்கு, அவர் குடியிலுள்ள பெரியவரே குருவாக இருந்து நடத்தி வைப்பார். மூன்றாண்டுகளில் இவர்கள் வாழும் ஊரில் இறந்தவர் அனைவருக்கும் அவரவர் உறவினர் அனைவரும் ஒன்று சேர்ந்து இவ்வினை முடிவினை மேற்கொள்வர் என்பதும் இவர்க்கென உள்ள தெய்வம் மயானத்தில் உறையும் 'மசானி அம்மன்' என்பதும் 'காடுகிழாள்' என்றும் வைகாசியில் பெருவிழா எடுப்பர் என்பதும் அ.மு.ப.வால் தொகுக்கப்பட்டுள்ளன.[36]

மஞ்சுமலை – தருமபுரி வாழ்குறும்பர் இன மக்களுக்கும் நீலகிரி வாழ் குறும்பர் இன மக்களுக்கும் வேறுபாடு உள்ளமையைச் சுட்டிகாட்டியுள்ளார். மஞ்சுமலை குறும்பர் திருமணப் பாடல்கள் சிறப்பானவை என்பதனை விளக்கி உள்ளார்.

"மணம் நடக்கும் போதும் முன்னும் பின்னும் இவர்கள் பலபாடல்களைப் பாடுகிறார்கள். ஆடவரும் பெண்களும் கலந்தே இப்பாடல்களைப் பாடுகின்றனர். பாடல்கள் பொருள் பொதிந்தனவாக உள்ளன" என்று கூறி அவை கன்னடத்தில் இருப்பதையும் குறித்து உள்ளார்.[37] மணமகளை வாழ்த்தும் பாடலின் பொருள், மணப்பொருள்கள் அனைத்தும் ஏற்று, அரிசி உணவுப் பொருள்கள் கொண்டு உன் மணாளனுக்கு உணவு செய்து ஊட்டு'[38] என அமைந்துள்ளது. மணநாளின் இரவில் இருவரையும் கூட்டுவித்துப் பெண்கள் பல பாடல்களைப் பாடி மகிழ்வாராம்.

குறும்பர் இன மணப்பாடல்கள் கருத்துச் செறிந்தவை. அவற்றை ஆராய்ந்தால் அவர்தம் மணம் பேசும் முறையும் செல்வ வளமும் பிற சிறப்பு இயல்புகளும் நன்கு விளங்கும் என்று குறிப்பிடும் அ.மு.ப. அப்பாடல்களின் கருத்துக்களையும் வெளியிட்டுள்ளார். மணவிருந்திற்கு விருந்து வைப்பர் என்றும் இறந்தவர் நினைவு நாளில் திதி கொடுக்காமல் உறவினருக்கு விருந்து வைப்பர் அதற்குத் 'தப்பு விருந்து'[39] என்று பெயர் என்றும் குறிப்பிட்டுள்ளார்.

பெண்கள் நன்றாகப் பாடுவார்களாம். வீட்டில் தயிரைக் கடைந்து வெண்ணெய் எடுக்கும் போது இனிமையான பாடல்களைப் பாடுவராம். விடியற்காலையில் இவ்வாறு பாடுவது இனிமையும் ஏற்றமும் பொருந்த இருக்கும் என்பதுடன்,

> மணச் சடங்குகளிலும் பிறவாழ்வுச் சடங்குகளிலும் சாவுச்சடங்குகளிலும் மகளிர் கூடிப் பாட்டிசைப்பர்.

> அப்பாடல்கள் நல்ல கருத்துச் செறிவும் செய்யும் செயல் பற்றிய விளக்கங்களும் பெற்றவையாக இருக்கும். சில காலங்களில் – விழாவாயினும் வேடிக்கையாயினும் இரவெல்லாம் பெண்கள் தமக்குரிய இன்னிசையுடன் பாடிக்கொண்டே இருப்பார்கள்[40]

எனக்கூறி வாய்மொழி இலக்கியச் சிறப்பில் மயங்கி நிற்கின்றார் அ.மு.ப.

இக்குறும்பருக்கு மாட்டுப்பொங்கல் விழா மிக முக்கியமானது. இவர்கள் அந்நாளினை 'ஆட்டுப் பொங்க'லாகக் கொண்டாடுகின்றனர். ஆடுகளில் பலவகை உண்டு. வாடிகுறி, யாடிகுறி, ஜன்னிகுறி, மொள்ள குறி என்னும் வகைபாடுகளைப் பற்றிய விளக்கத்தினைத் தந்து, இந்த வகை குறியீடுகளைப் பெற்றவை ஆட்டுப் பொங்கலன்று அதிக பூசையினைப் பெறுகின்றன என்று குறித்துள்ளார்.[41]

ஒக்கனக்கல்லில் வாழும் பஸ்தர்கள் விழா நாள்களில், நாள்தோறும் மாலை நான்கு மணி முதல் எட்டு மணி வரையில் ஆடும் 'சேவ ஆட்டம்' பற்றிக் குறிப்பிட்டுள்ளார். ஆண்கள் ஆடும் நடனம் இது.

> காலில் சிலம்பு அணிந்து கொண்டு, அது கலீர் கலீர் என ஒலிக்க வளைந்து வளைந்து ஆடும் அந்த ஆட்டம் மிக அழகாக இருக்கும் என்கிறார். மாலை நான்கு மணிக்குத் தொடங்கும் போது சிலரே அதில் பங்கு கொள்வார்கள் என்றாலும் இரவு எட்டு மணிக்கு முடியும் போது மிகப் பெருந்திரளாக மக்கள் அவ்வாட்டத்தில் பங்கு கொள்வர்[42]

என விளக்குகின்றார்.

ஏர்காட்டில் வாழும் மலையாளிகள், தமிழர்கள், சைவசமயத்தவர்கள், தமிழ் மொழிப்பற்றுள்ளவர்கள். இவர்தம் சிறப்புகளையும் வழக்காறுகளையும் விரிவாக விவரித்துள்ளார். எல்லா விழா நாள்களிலும் இளம் பெண்களும் பிள்ளைகளும், கொம்மி அடித்தல், கோலாட்டம், கோல்குச்சி சுழற்றல் முதலியவற்றை அழகுற ஆடுவராம்.[43]

திருமணம் நடைபெறுமுன் மணமகனுக்கும் மணமகளுக்கும் 'நலங்கு' வைப்பர்.

> மணமகனுக்கு ஆண்களே நலங்கு வைப்பர். 'காஞ்சி தீர்த்தமே தீர்த்தம் காவேரி தீர்த்தமே தீர்த்தம்' என்று பாடிக்கொண்டே ஆண்களுக்கு நலங்கு வைக்கின்றனர். அப்படியே பெண்களுக்கும் பெண்கள் நலங்கு வைப்பர். பாடுதலும் உண்டு, அச்சடங்கினைக் 'காரிய ஸ்திரிகள்' என உள்ளவரே செய்தல் வேண்டுமாம். வேறு யாரும் நலங்கிட மாட்டார்கள்[44]

என நலங்கில்

உள்ள வேறுபாட்டினைச் சுட்டியுள்ளார். தாலிகட்டும் சடங்கிலும் சிறப்பு உள்ளது.

> பெரிய தணக்காரனே பெண்ணை அழைத்து வந்து பாட்டுக்கள் பாடித் தாலிகட்டும் சடங்கையும் பிறவற்றையும் செய்துவைப்பார்

என்றும்

> இவர்கள் தெய்வம் 'வண்டிராமன்' என்றார்கள். இராமன் வண்டியில் வரும் போது அவ்வண்டி ஏரியில் இறங்கியதால் அப்பெயரிட்டனர் என்பர்

என்றும் விளக்கம் தந்துள்ளார். மேலும்,

> எல்லா நிகழ்ச்சிகளிலும் இவர்கள் பொருள் பொதிந்த பல பாடல்களைப் பாடுகின்றனர். வாழ்விலும் வீழ்விலும் இவர்தம் பாடல்களைப் பெண்கள் மட்டுமன்றி ஆண்களும் பாடுகின்றனர். மணம் நடப்பதன் முன்பு அருகு எடுத்தல் என்று ஒரு சடங்கினைச் செய்கின்றனர்.
>
> கல்லிலே நெல்முளைத்து – கற்பகத் தாமரை பூத்து
> ஆறுப்பூச் சூட்டி – அறுபது வேர் ஓடி
> மூங்கில் பூச்சூட்டி – முன்னின்று பலர்வாழ்த்த
> கட்டின மங்கியம் – காமாட்சி மங்கியம்
> உமையவள் மங்கியம் – ஒன்று கோடி சுகமாக

இவ்வாறு பாட்டிசைத்து அருகெடுத்து விழாவைத் தொடங்குகின்றனர். மேலும் இதே வேளையில்,

> சேருமேலே சேரும் ஏறுமேலே ஏறும்
> பன்னாடியும் பைதாடியும்
> பத்தும் பெற்றுப் பெருவாழ்வு வாழ்க
> என எல்லோரும் வாழ்த்துகின்றனர்[45]

என்று கூறி மேலும் ஒரு வாழ்த்துப் பாடலையும் தொகுத்துள்ளார்.

> அல்லி கிளைகிளை ஆயிரம் கிளை ஓடி
> முள்ளு முறியாமல் முதிர வாழ்ந்தோங்கக்
> கட்டின மங்கியம் காமாட்சி மங்கியம்
> உமையவள் மங்கியம் ஒன்று கோடி சுகமாக
> வாழ்க எனவும் வாழ்த்துகின்றனர்

என்பதோடு, 'இவ்வாறே நலங்கிடும் போதும் தாலி கட்டும் போதும்பிற சடங்குகளிலும் ஆண்களும் பெண்களும் பாடுகின்ற பாடல்கள் அளவில'[46] என்னும் குறிப்பினையும் தந்துள்ளார். இங்ஙனம் மலைவாழ் மக்களின் வாய்மொழி வழக்காறுகளை விரிவாக ஆராய்ந்துள்ளார்.

வேற்று நாகரிகமும், பிறமொழிகளும் தமிழகத்தில் பல காலமாகத் தொடர்ந்து புகுந்து வந்த போதும் கிராமங்களில் வாழும் பாமர மக்கள் தம் வாழ்விலும் வாக்கிலும் பழந்தமிழ்ப் பண்பாட்டினைப் பாதுகாத்து வருகின்றனர். தம் வாய்மொழியாகவே காலங்காலமாகப் போற்றிப்பாடி வருகின்ற நாட்டுப்புறப் பாடல்களில் வாழ்வின் அடிப்படைத்தன்மையும் பண்பும் மாறாமல் அமைந்திருக்கின்றன. அவற்றோடு பண்பாடும் விரவியுள்ளது. இந்த நாட்டுப்புறப் பாடல்களின் வழியே தமிழக வரலாற்றையும் பண்பாட்டையும் அறிந்து கொள்ள முடியும் எனக் கண்டு ஆய்வை மேற்கொள்ளத் தொடங்கியிருந்த காலம் நாற்பதாண்டுகட்கு முந்திய காலமாகும்.

பல்கலைக்கழகத்திற்குள் நாட்டுப்புறப் பாடல்களை இலக்கியமாக ஏற்றுக் கொள்ளும் மனநிலை ஏற்படாமல் இருந்தது. அந்த நிலையில் பேராசிரியர் அ.மு.ப. தமிழ் முதுகலை வகுப்பிற்குத் தனிப்பாடமாக வைத்திடப் பெரிதும் முயன்றார். எதிர் வந்த எதிர்ப்புகளை எல்லாம் விலக்கி நாட்டுப்புறவியலின் சிறப்பை விளக்கினார். முதன் முதலாகத் தமிழ் நாட்டுப் பல்கலைக்கழகங்களுள் சென்னைப் பல்கலைக்கழகத்தில்தான் நாட்டுப்புறவியல் பாடமாக அமைந்தது. அவர் தமிழ்த்துறைத் தலைவராக இருந்த பச்சையப்பன் கல்லூரியிலேயே விருப்பப் பாடமாக அமைத்தும் பெருமையுறச் செய்தார். அத்துறை இன்று பெரு வளர்ச்சி பெற்றிருக்கின்றது. நாட்டுப்புற இலக்கியம் பாடமாக அமைந்த போது படித்த முதல் மாணவருள் நானும் ஒருத்தி. பாடத்திற் கேற்ப நூல்கள் அப்போது எழுதப் பெறவில்லை. பாடநூலை முதன் முதலாக உருவாக்கியவரும் பேராசிரியர் அ.மு.ப. அவர்களே!

உலகெங்கும் அறிவியல் முறையில் ஆய்வுகள் நடத்தப் பெற்று முடிவுகள் சமூகத்திற்குப் பயனளிக்கும் வகையில் கண்டறியப்பட்டு வருகின்றன. தமிழிலும் அறிவியல் ஆய்வு நெறிமுறைகள் பின்பற்றப்பட்டு வருகின்றன. சமூகத்திற்குப் பயனளிக்கிற இலக்கியம் பற்றியும் ஆய்வுகள் விரிவாக வளர்ந்தன. பாமர மக்களால் உருவான இலக்கியம் பெருமளவில் நாட்டுப்புறங்கள் நிறைந்திருக்கிற தமிழகத்துச் சமுதாயத்திற்குப் பயன்படும் தன்மையையும் ஆராயத் தொடங்கினர்.

செவ்வியல் இலக்கியம் யாவும் நாட்டுப்புற இலக்கியத்திலிருந்தே முகிழ்த்தன என உலக நாட்டு ஆய்வாளர்கள் ஆய்ந்து கண்டறிந்து

வருகின்றனர். அவர்களைப் போலவே பேராசிரியர் அ.மு.ப.வும் வாய்மொழி இலக்கியத்திலிருந்தே தமிழ் இலக்கியம் முகிழ்த்தது என்பதைப் போதுமான சான்றுகளுடன் தம் 'வாய்மொழி இலக்கியம்' 'மலைவாழ் மக்கள் மாண்பு' நூல்களில் விளக்கியுள்ளார். நாட்டுப்புற இலக்கியக்கூறுகள் சங்க இலக்கியம் தொடங்கிப் பாரதி காலம் வரை தமிழ் இலக்கியப் பரப்பில் இடம் பெற்று நிற்கும் தன்மையை வாய்மொழி இலக்கியம் நூலில் விரிவாக ஆராய்ந்துள்ளார்.

நாட்டுப்புற ஆய்வில் பெரும்பணி ஆற்றியவராகக் கருதப்படுபவர் வி. ரட்லவ் என்பவராவார். அவர் தார்த்தாரியரின் நாட்டுப்புறப் பாடல்களை ஆராய்ந்து நாட்டுப்புற இலக்கிய உத்திகளைப் பகுத்தார்.

1. பாடுவோர் - கேட்போர் தொடர்பு
2. பாடப்படும் சமூக விழாக்கள்
3. பாடல்களைப் பகுப்பதனால் புலனாகும் இலக்கிய உத்திகள்

ஆகியவற்றைத் தெளிவுறுத்தினார் ரட்லவ். இச்செய்தி ஒப்பிலக்கியம் எனும் புதிய துறை தமிழ்நாட்டுக்கு அறிமுகமான பின் எழுபதுகளில் தான் தெரியவந்தது. ஆனால் பேராசிரியர் அ.மு.ப. அறுபதுகளிலேயே இப்போக்கில் ஆராய்ந்து மேலே கண்ட மூன்று நிலைகளிலும் நூலை எழுதியிருக்கின்றார். இதனால் அறிவியல் முறை ஆய்வு அன்றே மேற்கொண்டவர் என்பதும் விளங்குகின்றது. வாய்மொழி இலக்கியம் பெரும்பாலும் கூட்டுப் பாடல்களைக் கொண்டது என்பதும் விளங்குகின்றது. இத்தொடர்பு மறைமுகமாகப் பல நன்மைகளையும் செய்கிறது. சமுதாயத்தில் கூட்டுத்தன்மைக்குரிய இடத்தில் இடைவெளி பெரியதாகிக் கொண்டிருக்கிற காலமிது. கூட்டுச் சமுதாயத்தை உருவாக்கி வளர்த்து வாழ வைத்துப் பல நன்மைகளைப் பெற வேண்டிய கட்டாயத்தினை இளைஞர்க்கு உணர்த்தியாக வேண்டும். வாய்மொழி இலக்கியமே கூட்டுச்சமுதாயத்தை உருவாக்க இன்றியமையாத் தொண்டாற்றி வருகின்றது. இக்கருத்தினைப் பேராசிரியர் முதல் கட்டுரையில் தெளிவாக எடுத்துக்காட்டியுள்ளார்.

இரண்டாவது இலக்கிய உத்தியாக ரட்லவ் கூறியது, பாடப்படும் சமூக விழாக்களைப் பற்றியதாகும். 'வாய்மொழி இலக்கிய நூலின் இறுதியில் விழா - விருந்து - வேடிக்கை - விளையாட்டுப் பாடல்கள் பற்றிய கட்டுரை உள்ளது. தமிழ்நாட்டு மக்கள் கை வருந்தப் பாடுபட்டுப் பெற்றது கொண்டு சுற்றம் அருத்தி விழாக் கொண்டாடும் மரபினர் என்பதைப் பாடல்கள் கொண்டே எடுத்துக்காட்டி விளங்க வைத்துள்ளார். சில பாடல்களுக்குப் பண்ணமைப்பையும் குறித்துள்ளார்

பாடல்களைப் பகுப்பதனால் புலனாகும் இலக்கிய உத்திகளைப் பற்றிப் பிற கட்டுரைகள் அமைந்துள்ளன. அக்கட்டுரைகளில் ஆங்கில ஆய்வாளர் காட்டும் வரையறையைக் காட்டிலும் சிறந்த வகையில், எல்லை கடவா நெறியில் மக்களோடு ஒன்றியுள்ள நாட்டுப்புறப் பாடல்களின் சிறப்புகளைப் பகுத்து விளக்கி உள்ளனர். இங்ஙனம் முப்பெரும் உத்திகளை அன்றே ஆய்ந்த அறிஞர் பேராசிரியர் தாம் என்பதில் பெரு மகிழ்வு கொள்ளலாம்.

நாட்டுப்புறக் கதைகள், கதைப்பாடல்கள் போல்வன எவ்வாறு நாடுவிட்டு நாடு பெயர்ந்து செல்கின்றன என்பதனை மேலை நாடுகளில் ஆய்வின் அடிப்படையாகக் கொண்டு சிலர் ஆராய்ந்தனர். நாட்டுப்புறக் கதைக் கருத்துகள் எங்ஙனம் எழுத்து வடிவ இலக்கியங்கட்குள் புகுந்து நிலைபெறுகின்றன என்றும் அவர்கள் ஆராய்ந்தார்கள். மேலும், வாய்மொழி இலக்கியத்திற்கும் எழுத்து மொழி இலக்கியத்திற்கும் இவ்வாறு இடைத் தொடர்பு இருந்து கொண்டே இருப்பதை அவர்கள் எடுத்துக் காட்டினர். பேராசிரியர் அ.மு.ப. தம்நூல் முழுமையும் நாட்டுப்புற இலக்கியத்திற்கும் வரிவடிவ இலக்கியத்திற்கும் உள்ள இடைத் தொடர்புகளை நன்கு எடுத்துக்காட்டியுள்ளார். இலக்கிய வகைகளின் தோற்றம் வளர்ச்சியைக் காண்பதற்கும் இலக்கிய உத்திகளை ஆராய்வதற்கும் நாட்டுப்புற இலக்கியம் பற்றிய அறிவு இன்றியமையாதது என எவரும் ஏற்றுக் கொள்ளும் வகையில் பேராசிரியரின் 'வாய்மொழி இலக்கியம்' நூல் அமைந்துள்ளது.

'பத்தொன்பதாம் நூற்றாண்டு உரைநடை' நூலும் 'மலைவாழ் மக்கள் மாண்பு' நூலும் பெரிதும் இக்கருத்திற்குத் துணை நிற்பன. வானொலிப் பேச்சுக்காகச் சிந்தித்த பேராசிரியர் அதனை முறையான ஆய்வுப் போக்கில் அமைத்து நூலாக்கி 'வாய்மொழி இலக்கியம்' என்று வெளியிட்டார். 1964இல் வெளிவந்த இந்த ஆய்வு நூலைப் படித்த பலரும் நாட்டுப்புற ஆய்வில் ஈடுபட்டனர். பல நிறுவனங்களும், கருத்தரங்குகளையும், ஆய்வுகளையும் நடத்தி வருகின்றன. இன்று தூய சவேரியர் கல்லூரியில் நாட்டுப்புறவியலுக்கு என்றே 'நாட்டார் வழக்காற்றியல் முதுகலைத்துறை' உருவாகி உள்ளது. தமிழகத்திலேயே முதன் முதலாகத் தொடங்கப்பட்ட முதுகலைத்துறை இது. இதன் தலைவர் தே. லூர்து ஆவார். முதுகலையில் ஒரு பாடமாக வைக்கப் பெரிதும் முயற்சி செய்த பேராசிரியருக்குக் கிடைத்த பெரும் வெற்றி இதுவாகும். 'வாய்மொழி இலக்கியம்' பற்றிய ஆய்வு நூலை அவர் எழுதியதால் இன்று மிகச் சிறந்த ஆய்வு நூல்கள் தொடர்ந்து வெளிவந்து

கொண்டிருக்கின்றன. தமிழ்ப் பண்பாட்டின் சிறப்பு யாவும் பேராசிரியரிடத்தில் விளங்குவதை அவர் தம் நூல்களும் விளக்குகின்றன. வாய்மொழி இலக்கியம் வரிவடிவம் பெற உழைத்த அவரது உழைப்பு இன்று ஆல்போல் தழைத்து அருகுபோல் வேரோடியிருக்கிறது.

## அடிக்குறிப்புகள்

1. அ.மு.ப. காஞ்சி வாழ்க்கை முன்னுரை.
2. ஆனந்த முதல் ஆனந்த வரை, பக். 21-22.
3. மேலது, ப. 25.
4. அருந்திறலாளர் அ.மு.ப. ந. சஞ்சீவி, பழங்குடி மக்கள் ஆய்வு, ப. 66.
5. மேலது.
6. பத்தொன்பதாம் நூற்றாண்டின் தமிழ் உரைநடை வளர்ச்சி ப. 62.
7. மேலது, ப. 63.
8. மேலது, பக். 63-64.
9. மேலது, ப. 64.
10. மேலது, ப. 65.
11. மேலது, ப. 67.
12. மேலது, ப. 70.
13. மேலது, ப. 79.
14. மேலது, ப. 80.
15. மேலது, ப. 80.
16. மேலது, பக். 84-86.
17. மேலது, ப. 115.
18. மேலது, ப. 115.
19. மேலது, ப. 116.
20. ஆனந்த முதல் ஆனந்த வரை, ப. 52.
21. மேலது, ப. 53.
22. மேலது, ப. 54.
23. மேலது, ப. 55.
24. அருந்திறலாளர் அ.மு.ப. ப. 63.
25. மலைவாழ் மக்கள் மாண்பு, பக். 65-67.
26. மேலது, பக். 113-114.
27. மேலது, பக். 113-114.

28. மேலது, ப. 116.

29. மேலது, ப. 125.

30. மேலது, ப. 125.

31. மேலது, ப. 127.

32. மேலது, பக். 138-139.

33. மேலது, பக். 146-147.

34. மேலது, ப. 151.

35. மேலது, ப. 152.

36. மேலது, ப. 158.

37. மேலது, ப. 179.

38. மேலது, பக். 179-180.

39. மேலது, ப. 184.

40. மேலது, ப. 184.

41. மேலது, பக். 173-174.

42. மேலது, ப. 227.

43. மேலது, ப. 255.

44. மேலது, பக். 257-258.

45. மேலது, ப. 263.

46. மேலது, ப. 264.

# இதழ்ப்பணி

முகிலை இராசபாண்டியன்

1554 ஆம் ஆண்டு முதன் முதலில் ஜெர்மனியில் ஓர் அச்சுக் கூடம் உருவாக்கப்பட்டது. அதே ஆண்டில் அங்கே பைபிள் அச்சிடப்பட்டது. பைபிள் அச்சிடப்பட்ட ஆண்டிலேயே தமிழ் ஒலி வடிவிற்குப் போர்ச்சுக்கீசிய வரிவடிவம் கொண்ட கார்ட்டிலா (Cartilha) என்ற புத்தகம் போர்ச்சுகல்லின் லிஸ்பன் நகரில் அச்சாகியுள்ளது. இந்த நூல் பொதுமக்களுக்காக அச்சிடப்பட்ட நூல் அல்ல. போர்ச்சுக்கீசிய குருமார்கள் மந்திரங்களைத் தமிழில் ஒலிப்பதற்காகத் தமிழ் வரிவடிவத்திலும் போர்ச்சுக்கீசிய வரிவடிவத்திலும் அச்சிட்டுள்ளனர். இந்த நூல் தமிழில் உருவாக்கப்பட்ட நூல் இல்லை என்றாலும் போர்ச்சுக்கீசிய மந்திரங்கள் தமிழில் ஒலி பெயர்க்கப்பட்ட அச்சு நூல் ஆகும். தமிழ் எழுத்துக்களால் அச்சிடப்பட்ட முதல் நூல் என்று இதைக் கொள்ளலாம்.

### தம்பிரான் வணக்கம்

தமிழ் மொழியில் முதன்முதலில் அச்சான நூல் என்ற பெருமையையும் இந்தியாவில் முதன் முதலில் அச்சான நூல் என்ற பெருமையையும் கொண்ட நூல் தம்பிரான் வணக்கம் என்னும் தமிழ் நூல் ஆகும். பதினாறு பக்கங்களைக் கொண்ட இந்த நூல் அண்ட்ரிக் அடிகளாரால் 1578ஆம் ஆண்டு கோவாவில் அச்சிடப்பட்டது. மலபார் பகுதியைச் சேர்ந்த கோவாவில் அப்போது தமிழ் மொழி பேச்சு வழக்கிலிருந்தது. இந்த நூலை அச்சிடுவதற்குத் தேவையான எழுத்துருக்கள் கோவாவிலும் கொல்லத்திலும் தயாரிக்கப்பட்டன. தம்பிரான் வணக்கம் என்னும் இந்நூல் டாக்ட்ரினா கிறிஸ்டம் (Doctrina Christam) என்னும் பெயரில் போர்ச்சுக்கீசிய மொழியில் மார்க்கோ ஜார்ஜ் (Marcos Jorge) என்பார் எழுதிய நூலின் மொழிபெயர்ப்பு ஆகும். அண்ட்ரிக் அடிகளார், பீட்டர் மானுவல் என்னும் குருவுடன் சேர்ந்து இந்த நூலை மொழிபெயர்த்துள்ளார். இவ்வாறு இந்தியாவில் முதன் முதலில் அச்சுவாகனம் ஏறிய மொழி என்னும் பெருமை பெற்ற தமிழ் மொழியில் இதழியல் துறையும் சிறப்புற வளர்ந்துள்ளது. அந்த இதழியல் துறை பற்றிக் காண்போம்.

## தமிழ் இதழ்கள்

1802 ஆம் ஆண்டில் இலங்கையில் சிலோன் கெசட் என்னும் இதழ் வெளிவந்தது. இந்த இதழில் தமிழ், சிங்களம், ஆங்கிலம் ஆகிய மூன்று மொழிகளும் இடம் பெற்றிருந்தன. தமிழ் மொழி இடம் பெற்ற முதல் இதழ் இந்த சிலோன் கெசட் ஆகும். இந்தியாவில் முதன் முதலில் வெளிவந்த தமிழ் இதழ் மாகசின் (Tamil Magazine) என்னும் இதழ் ஆகும். இது 1831 ஆம் ஆண்டு வெளிவந்தது. இதைத் தொடர்ந்து 1833 இல் விருத்தாந்தி என்னும் இதழும் 1835 இல் மெட்ராஸ் கிரானிக்ஸ் என்னும் இதழும் வெளிவந்தன. 1852இல் தினவர்த்தமானி என்னும் முதல் தமிழ் வார இதழைப் பெர்சிவல் பாதிரியார் சென்னையில் தொடங்கினார். 1812 ஆம் ஆண்டிலேயே மாசத் தினச் சரிதை என்னும் இதழ் தமிழில் வெளிவந்துள்ளது என்றும் இந்த இதழ் சென்னையில் மாசத் தினச் சரிதை அச்சுக் கூடத்தில் அச்சிடப்பட்டு, தஞ்சாவூரைச் சேர்ந்த ஞானப்பிரகாசத்தால் வெளியிடப்பட்டுள்ளது என்றும் இந்தியாவில் இந்தியரால் தொடங்கப்பட்ட முதல் இதழ் இதுதான் என்றும் அமாசாமி என்பார் தமது இசுலாமிய இதழ்கள் என்னும் நூலில் குறிப்பிட்டுள்ளார்.

1841 இல் தொடங்கிய உதயதாரகை என்னும் மாதம் இருமுறை இதழ்தான் இலங்கையில் தோன்றிய முழுமையான தமிழ் இதழ் ஆகும். இது யாழ்ப்பாணத்திலிருந்து வெளிவந்தது. 1840இல் பாலதீபிகை என்னும் சிறுவர் இதழ் நாகர்கோவிலிருந்து வெளிவந்திருக்கிறது. தமிழில் வெளிவந்த இந்த இதழ்தான் இந்தியாவிலேயே சிறுவர்களுக்கு என்று தொடங்கப்பட்ட முதல் இதழ் ஆகும்.

## முதல் தமிழ் நாளிதழ்

தமிழில் வந்த முதல் நாளிதழ் தினவர்த்தமானி என்பது ஆகும். இது 1886 ஆம் ஆண்டு இலங்கையில் வெளிவந்தது. இதை ராஜூ பிள்ளை என்பவர் தொடங்கி நடத்தியுள்ளார் என்று மா.சு. சம்பந்தம் தமது தமிழ் இதழியல் வரலாறு என்னும் நூலில் தெரிவித்துள்ளார் (ப. 33). 1882 இல் வார இதழாகத் தொடங்கப்பட்ட சுதேசமித்திரன் 1889 இலிருந்து நாளிதழாக வரத் தொடங்கியது.

## தமிழ் இலக்கிய இதழ்கள்

தமிழ் மொழியில் நூறு ஆண்டுகளுக்கு முன்பே இலக்கிய இதழ்கள் தோன்றிவிட்டன. இலக்கியத்தின் பல கூறுகளைத் தன்னகத்தே கொண்டு வெளிவரும் இதழ்களை இலக்கிய இதழ்கள் எனலாம். அவ்வகையில் இலக்கிய இதழ்களில் முதலில் 1902 ஆம் ஆண்டு

செந்தமிழ் என்னும் இதழ் மதுரைத் தமிழ்ச் சங்கத்தாரால் வெளியிடப் பெற்றது. இந்த இதழ் தற்போதும் வெளிவருகிறது. 1902 ஆம் ஆண்டில் மறைமலை அடிகள் ஞானசாகரம் என்னும் இதழை வெளியிட்டார். இந்த இதழ் 1923ஆம் ஆண்டு முதல் அறிவுக்கடல் என்னும் பெயரில் வெளிவந்தது. 1915ஆம் ஆண்டில் ஆரணி குப்புசாமி முதலியாரை ஆசிரியராகக் கொண்டு ஆனந்த போதினி என்னும் இதழ் வெளிவந்தது. 1921இல் திரு.வி. கலியாணசுந்தரனாரை ஆசிரியராகக் கொண்டு நவசக்தி என்னும் இதழ் வந்தது. பி.வி. கண்ணன் என்பாரை ஆசிரியராகக் கொண்டு 1922ஆம் ஆண்டு ஒற்றுமை என்னும் இதழ் வெளிவந்தது. இது சைதாப்பேட்டை யிலிருந்து வந்தது. இதே ஆண்டில் புவன நண்பன் என்னும் மாத இதழ் சிந்தாதிரிப்பேட்டையிலிருந்து வெளிவந்தது. 1923ஆம் ஆண்டு சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தாரால் செந்தமிழ்ச் செல்வி என்னும் இதழ் வெளியிடப்பெற்றது. இந்த இதழ் தற்போதும் வெளிவருகிறது. அ.மாதவையாவை ஆசிரியராகக் கொண்டு 1924ஆம் ஆண்டு வெளிவந்த இதழ் பஞ்சாமிர்தம் ஆகும். தஞ்சையில் உள்ள கரந்தைத் தமிழ்ச் சங்க வெளியீடாகத் தமிழ்ப் பொழில் என்னும் இதழ் 1925ஆம் ஆண்டு வெளியானது. கலாநிலயம் என்னும் இதழ் 1928 முதல் டி.என். சேஷாசலம் என்பாரை ஆசிரியராகக் கொண்டு புரசைவாக்கத்திலிருந்து வெளிவந்தது. 1937இல் தொடங்கப்பட்டு, பின் நிறுத்தப்பட்டு மீண்டும் 1950இல் பி.எஸ். இராமையாவால் தொடங்கப்பட்டு வெளிவந்தது மீண்டும் நிறுத்தப்பட்ட இதழ் மணிக்கொடி ஆகும்.

## தமிழ்க் கலை

தமிழ் மொழியில் 1902 முதல் பல்வேறு இலக்கிய இதழ்கள் வெளிவந்துள்ளன என்பதை மேலே கண்டோம். இந்த இலக்கிய இதழ்களைத் தொடர்ந்து தமிழில் காஞ்சிபுரத்திலிருந்து அ.மு.பரமசிவானந்தத்தால் 1938ஆம் ஆண்டில் தொடங்கப்பட்ட இதழ் தமிழ்க்கலை என்னும் இலக்கிய இதழ் ஆகும். தமிழ்க்கலை இதழின் தொடக்கம் பற்றி அ.மு.ப. பின்வருமாறு கூறியுள்ளார். "நான் என் சொந்தப் பொறுப்பில் என் மைத்துனர் உக்கல் வடிவேலு அவர்களைப் பதிப்பாளராக்கி நான் ஆசிரியராக இருந்து கொண்டு தமிழ்க்கலை என்ற திங்கள் இதழைத் தொடங்கி நடத்தி வந்தேன். அக்காலத்தில் அதிக இதழ்கள் இல்லாமையும் இந்தி எதிர்ப்பு இயக்கத்தின் வலுவும் சேர்ந்து என் இதழுக்கு ஏற்றம் தந்தன. இத்தமிழ்க்கலை இதழினைப் பற்றிப் பேரறிஞர் அண்ணா அவர்கள், 'நாட்டில் நம் கொள்கையைப் பரப்ப

நல்ல இதழ்கள் இல்லை' என்று நைந்து கடிதம் எழுதிய கலைஞர் டி.கே. சண்முகம் அவர்களுக்குப் பதில் எழுதிய வகையில் தமிழ்க்கலை இதழ் பற்றிக் குறிப்பிட்டார். (அது பற்றி டி.கே. சண்முகம் அவர்தம் மணிவிழா மலரைப் பார்த்த பிறகே நான் அறிந்து கொண்டேன்)" என்று ஆனந்த முதல் ஆனந்த வரை என்னும் நூலில் குறிப்பிட்டுள்ளார் (ப. 243).

## தமிழ்க்கலை அச்சகம்

தமிழ்க்கலை இதழைப் பிற அச்சகங்களில் அச்சிடுவதால் பல இடையூறுகள் ஏற்பட்டன. எனவே தமக்கு என்று ஓர் அச்சகத்தைத் தொடங்க எண்ணம் கொண்டார் அ.மு.பரமசிவானந்தம். அந்த எண்ணத்தைச் செயல்படுத்துவது என்றால் பெருந்தொகையை முதலீடு செய்ய வேண்டும். எனவே கூட்டாகச் சேர்ந்து அச்சகத்தை நிறுவுவது என்று முடிவு செய்து தமது நண்பர்கள் காளப்பர், இராசகோபால் ஆகியோருடன் தமது மைத்துனரையும் இணைத்துக் கொண்டு அச்சகம் தொடங்க ஏற்பாடு செய்தார். அவர்களுடன் காங்கிரஸ் கட்சியைச் சேர்ந்த ஒருவரும் இணைந்தார். ஐவர் கூட்டணியில் தமிழ்க்கலை அச்சகம் உருவாயிற்று. தமிழ்க்கலை இதழில் இந்தி எதிர்ப்புத் தொடர்பான கருத்துகள் வன்மையாக இடம் பெற்றமை அந்தக் காங்கிரஸ் நண்பருக்குப் பிடிக்கவில்லை. தமிழ்க்கலை இதழுக்கும் தமிழ்க்கலை அச்சகத்திற்கும் தொடர்பு இல்லை என்றாலும் தொடர்ந்து இருக்க விரும்பாமல் அந்தக் காங்கிரஸ் நண்பர் அச்சகத்திலிருந்து விலகிக் கொண்டார்.

## தமிழ்க்கலை நின்றது

காஞ்சிபுரத்தில் தொடங்கப்பட்ட தமிழ்க்கலை இதழ் நான்கு ஆண்டுகள் வெளிவந்தது. உலகப்போரின் காரணமாகத் தாள் பற்றாக்குறை முதலிய இன்னல்கள் ஏற்பட்டதால் காஞ்சிபுரத்தில் தமிழ்க்கலை இதழ் 1942ஆம் ஆண்டில் நிறுத்தப்பட்டது. தமிழ்க்கலை அச்சகத்தையும் தமது நண்பருக்கு உரிய மதிப்பீட்டுடன் வழங்கிவிட்டார்.

1944ஆம் ஆண்டு பச்சையப்பன் கல்லூரியில் விரிவுரையாளர் பணி ஏற்ற அ.மு. பரமசிவானந்தம் காஞ்சிபுரத்திலிருந்து சென்னைக்கு வந்து குடியேறினார்.

## மீண்டும் தமிழ்க்கலை

சென்னையில் குடியேறிய அ.மு. பரமசிவானந்தம் மீண்டும் தமிழ்க்கலை இதழைத் தொடங்க விரும்பினார். அப்போது அவருடன்

பச்சையப்பன் கல்லூரியில் விரிவுரையாளராகப் பேராசிரியர் க. அன்பழகன் பணியாற்றிக் கொண்டிருந்தார். அவர் புதுவாழ்வு என்னும் இதழை நடத்திக் கொண்டிருந்தார். அமுப. தமிழ்க்கலை இதழைத் தொடங்க எண்ணியதை அறிந்த அவர் ஊக்கம் ஊட்டினார். திருவிகவின் சாது அச்சுக்கூடத்தில் அச்சிடுவது என்று ஏற்பாடு ஆனது. அதன்படி அமுப. தமிழ்க்கலை இதழ் மீண்டும் 1946ஆம் ஆண்டு தொடங்கப்பட்டது என்று மு.பி. பாலசுப்பிரமணியன் பத்திரிகைப் பணி என்னும் கட்டுரையில் குறிப்பிட்டுள்ளார். ஆனால் மா.சு. சம்பந்தம் தமது தமிழ் இதழ்களின் வரலாறு என்னும் நூலில் தமிழ்க்கலை இதழ் 1947ஆம் ஆண்டு வெளிவந்ததாகக் குறிப்பிட்டுள்ளார் (ப. 106).

அ.மு.ப. தாம் எழுதிய 'ஆனந்த முதல் ஆனந்த' வரை என்னும் தன்வரலாற்று நூலில் மீண்டும் சென்னையில் தமிழ்க்கலை தொடங்கப்பட்டது பற்றிக் குறிப்பிட்டுள்ளாரே ஒழிய எப்போது வெளியிடப்பட்டது என்று குறிப்பிடவில்லை. மா.சு. சம்பந்தம் தமிழ்க்கலை தொடங்கப்பட்ட ஆண்டு என்றுதான் குறிப்பிட்டுள்ளாரே ஒழிய அது முதலில் காஞ்சிபுரத்தில் தொடங்கப்பட்ட ஆண்டா, சென்னையில் தொடங்கப்பட்ட ஆண்டா என்றும் குறிப்பிடவில்லை. மு.பி.பா. பேராசிரியர் அ.மு.ப.வுடன் பச்சையப்பன் கல்லூரியில் பணியாற்றியுள்ளார் என்பதால் அவர் குறிப்பிட்டுள்ள ஆண்டே பொருத்தம் உடையது என்று கருத இடம் உள்ளது.

1946இல் மீண்டும் சென்னையில் தொடங்கப்பட்ட தமிழ்க்கலை ஐந்து ஆண்டுகள் தொடர்ந்து வெளிவந்துள்ளது. இதில் மு. வரதராசனார், ரா.பி. சேதுப்பிள்ளை முதலானோரும் பச்சையப்பன் கல்லூரி ஆசிரியர்களும் மாணவர்களும் தொடர்ந்து கட்டுரைகள் எழுதியுள்ளனர். கல்விப்பணியில் மிகுந்த ஆர்வம் கொண்ட அ.மு.ப. பள்ளிகள் ஆரம்பித்து நடத்துவதில் ஆர்வம் காட்டியதால் தமிழ்க்கலையைத் தொடர்ந்து நடத்த அவரால் இயலவில்லை. ஆனால் தமிழ்க்கலை என்னும் பெயரில் அவர் தொடங்கிய பதிப்பகம் இப்போதும் இயங்கி வருகிறது.

## தமிழ்க் கலையின் உள்ளடக்கம்

தமிழ்க்கலை இதழின் பொருளடக்கப் பகுதியின் மேல்பகுதியில் பாரதியாரின்,

விரியும் அறிவு நிலை நாட்டுவீர் – அங்கு
வீழும் சிறுமைகளை ஓட்டுவீர்

என்னும் வரிகள் அச்சிடப்பட்டு வெளிவந்துள்ளது. அ.மு.ப. தமிழ் மொழியின் மீது தணியாத பற்றுடையவர் என்பதை அவர் திருவள்ளுவர் ஆண்டைத் தமிழ்எண் வடிவில் வழங்கியுள்ளதிலிருந்து அறிந்து கொள்ள இயலும். ஆங்கில ஆண்டையும் மாதத்தையும் அடைப்புக் குறிக்குள் கொண்டு தமிழ்க்கலை வெளிவந்துள்ளது. 01-02-1949 என்னும் நாள் கொண்ட தமிழ்க்கலை இதழ் தைச் சிறப்பிதழாக வெளிவந்துள்ளது.

"தமிழ்நாட்டை உழவாலும் உழைப்பாலும் உயரச் செய்து தாமும் வாழ்ந்து மற்றவரையும் வாழ வைக்கும் ஏழைத் தொழிலாளிகட்கு வாழ்வின் மேடு பள்ளங்களைக் கலங்காமல் தாண்டி அவ்வாழ்வுப் போராட்டத்தே வீரராக நின்று வெற்றி பெற்ற அஞ்சா அறவோர்க்கு நாடு நலம் பெற, மொழி தழைக்க, கலை ஓங்க எல்லா வகையிலும் பாடுபடும் நல்லோர்க்கு, சொல்லைக் குறைத்து, செயலாற்றும் துறையில் முன்நின்று பணியாற்றும் வல்லவர்களுக்கு, என்றும் உலகில் யாதொரு வேற்றுமையும் இன்றி அனைவரும் ஒன்றி வாழ வழிகாண முயல்வோர்க்கு இம்மலரை உரிமையாக்குகின்றோம்'' என்று உழைப்பாளர்களுக்கும் அறவோர்களுக்கும் நல்லவர்களுக்கும் அந்தத் தைச் சிறப்பிதழை உரிமையாக்கியுள்ளார்.

### தலையங்கம்

ஒரு பத்திரிகையில் பல்வேறு பகுதிகள் இடம் பெற்றிருந்தாலும் தலையங்கம் மட்டுமே பத்திரிகையின் குரலாகக் கருதப்படும். பிற படைப்புகள் அனைத்தும் படைப்போரின் மனப்போக்குக்கு ஏற்பவே அமையும். ஆனால் தலையங்கம் மட்டும் பத்திரிகையின் அல்லது ஆசிரியரின் போக்குக்கு ஏற்ப அமையும். ஒரு பத்திரிகையில் தொடர்ச்சியாக வெளிவரும் தலையங்கத்தைப் படித்தாலே அந்தப் பத்திரிகையின் நோக்கத்தை நாம் அறிந்து கொள்ள முடியும்.

எம்.வி. காமத் என்பார் தலையங்கத்தைச் செய்தித்தாளின் கருத்துக் கண்ணாடி என்றும் மிகப்பெரிய அழிவற்ற ஆன்மா என்றும் அதனுடைய மனச் சான்று என்றும் ஒரு நல்ல தலையங்கம் செயலைத் தூண்டுகிறது, பணிகளை முடுக்குகிறது என்றும் குறிப்பிட்டுள்ளார்.

மேத்தா என்பவர், ஒரு குறிப்பிட்ட கொள்கை, திட்டம், நிகழ்ச்சி, பற்றிய இதழின் கண்ணோட்டத்தைத் தலையங்கம் வெளிப் படுத்துகிறது. அது குறிப்பிட்ட கருத்தை அல்லது கொள்கையைத் தூண்டவோ விளக்கவோ கவர்ந்திழுக்கவோ குறை கூறவோ மறுக்கவோ செய்யும். கருத்தைக் கூறுவதன் மூலம் பொதுமக்களின் கருத்தை

உருவாக்க உதவுகின்றது என்று குறிப்பிட்டுள்ளார். அந்த வகையில் அ.மு. பரமசிவானந்தம் தலையங்கத்தின் மூலம் தமது கருத்தைத் தமிழ்க்கலை இதழின் கருத்தாக வெளியிட்டுள்ளார்.

> ". . . . பொங்கல் நாள் ஆண்டு தோறும் வருகின்றது. ஆனால் உழவர் வாழ்வோ – தொழிலாளி வாழ்வோ ஒரு சிறிதும் உயர்ந்ததாகக் காணோம்.
>
> நாடு அந்நியருக்கு அடிமைப்பட்டிருந்த காலம் கழிந்தது. உரிமைப் போரால் இந்திய உபகண்டத்தை இந்தியரே ஆளத் தலைப்பட்டனர். நம்மை நாம் ஆளுகின்றோம் என்று பேசினாலும் கூடச் செயல்முறை அந்நிய ஆட்சியினும் அதிக அல்லல் நிறைந்ததாக இருக்கக் காரணம் பலப்பல. காங்கிரஸ் தலைவர்கள் பல இடங்களில் வற்புறுத்தியவாறு மக்கள் தாங்கள் அன்று செய்த சிறுசிறு தியாகங்களுக்காகப் பெரும் பெரும் பலனை எதிர்பார்க்கின்றனர். . . . செய்யாத தியாகத்துக்கெல்லாம் மெய்யான பலனைப் பல வகையில் பெற முயல்கின்றார். மக்களின் – ஏழை மக்களின் – நலனைக் கோரும் நல்லவர் நாட்டில் அருகிவிட்டனர். பொருளாதாரச் சமத்துவம் என்று அன்று பேசிய பெருந்தலைவர்களெல்லாம் கூட இன்று முதலாளிகளைச் சார்ந்து நிற்கின்றனர்"

என்று தைச் சிறப்பிதழில் அவர் வரைந்துள்ள தலையங்கம் அவரது தன்னலமற்ற தொண்டுள்ளத்தைக் காட்டுவதுடன் அவர் தொண்டு செய்யும் நோக்கில் தமிழ்க்கலை என்னும் இதழைத் தொடங்கி நடத்தியதையும் உணர்த்துகிறது.

### படங்கள்

பத்திரிகையின் ஒரு பக்கம் முழுதும் எழுத்துகளே இருந்தால் அது படிப்போரை விரைவில் சலிப்படையச் செய்யும். எனவேதான் பத்திரிகைகள் ஓவியர்களைக் கொண்டு வரைந்த பல வண்ணப் படங்களையும் நிழற்படங்களையும் வெளியிடுகின்றன. பத்திரிகைகளில் இத்தகைய படங்கள் வருவதாலேயே பல்லாயிரக் கணக்கான இதழ்கள் விற்பனையாவதுடன் அவை ஒவ்வொன்றும் பலரால் படிக்கவும் பார்க்கவும் படுகின்றன. ஆனால் படம் இல்லாமல் அச்சிடப்பட்ட புத்தகங்கள் ஆயிரம் படிகள் அச்சிடப்பட்டால் கூட அவை விற்பதற்குச் சில ஆண்டுகள் ஆகி விடுகின்றன. பல நூறு சொற்களில் வெளிப்படுத்தும் கருத்தை ஒரு சிறு படத்தின் மூலம் வெளிப்படுத்திவிடலாம் என்பதைத்

தற்போதும் பத்திரிகைகளில் வெளிவரும் கருத்துப்படங்களிலிருந்து (கார்ட்டூன்) அறிந்து கொள்ள முடியும். இத்தகைய சிறப்புமிக்க படங்களைத் தமது இதழின் பல பகுதிகளில் அ.மு.ப. தந்துள்ளார்.

பத்திரிகையில் படம் இடம்பெற வேண்டும் என்பதற்காகக் கையில் இருக்கும் படங்களை எல்லாம் பத்திரிகையில் போட்டுவிட முடியாது. பொருத்தமான படங்களை மட்டுமே போட முடியும். படங்களின்தேவைகளுக்கு ஏற்பத் தலைப்புகள் அல்லது படம் பற்றிய விவரங்களைத் தரவேண்டும். அவ்வாறு தந்தால் மட்டுமே அந்தப் படங்களால் பலன் விளையும். அ.மு.ப. தமிழ்க்கலையில் படங்களைப் பயன்படுத்தியதுடன் அவற்றிற்குப் பொருத்தமான தலைப்புகளையும் தந்துள்ளார்.

ஒரு குடிசையையும் ஒரு மாடி வீட்டையும் அருகருகே இடம்பெறச் செய்து அதற்கு இரு துருவம் என்று தலைப்பிட்டுள்ளார். அருவியையும் ஆற்றையும் தனித்தனி நிழற்படங்களாகப் போட்டுவிட்டு அதற்கு வீழ்ந்தோடும் பேராறு என்று தலைப்புத் தந்துள்ளார்.

தமிழ் உணர்வு, தமிழின உணர்வு, இலக்கிய உணர்வு, இந்தி எதிர்ப்பு உணர்வு, பொருளாதாரச் சமத்துவ உணர்வு முதலிய உணர்வுகளை வெளிப்படுத்தும் உயர்ந்த நோக்கில் வெளிவந்த தமிழ்க்கலை இதழில் திரைப்பட விமர்சனமும் இடம் பெற்றுள்ளது. பேரறிஞர் அண்ணாவின் நல்லதம்பி திரைப்படத்தின் விமர்சனத்தைப் பேராசிரியர் க. அன்பழகன் வழங்கியுள்ளார்.

### சித்தாந்தம்

சித்தாந்தம் என்னும் இதழ் சமயச் சார்புடைய இதழ் ஆகும். இது சைவ சமய இதழ். சமயச் சார்புடைய இதழ்களை முதலில் கிறிஸ்தவர்கள் வெளியிட்டனர். 1831ஆம் ஆண்டில் தமிழின் முதல் இதழாக வெளிவந்த தமிழ் மாகசின் என்னும் இதழ் கிறிஸ்தவ இதழ் ஆகும். இதைக் கிறிஸ்தவ சங்கத்தினர் சென்னையிலிருந்து வெளியிட்டுள்ளனர். வைதீக சமய இதழாக 1864ஆம் ஆண்டில் தத்துவப் போதினி என்னும் இதழ் வெளிவந்துள்ளது. சைவ சமய இதழாக 1877 ஆம் ஆண்டில் இலங்கை நேசன் என்னும் இதழ் இலங்கையிலிருந்து வெளிவந்துள்ளது. 1880 ஆம் ஆண்டில் சைவ உதயபானு, 1881இல் விஞ்ஞான வர்த்தினி, அதே ஆண்டில் சைவ சம்போதினி, 1884 இல் சைவாபிமானி, 1889 இல் இந்து சாதனம் ஆகிய சைவ சமய இதழ்களும் இலங்கையிலிருந்தே வெளிவந்துள்ளன. சென்னையிலிருந்து முதல் சைவ

இதழாக 1891 இல் ஞானமித்திரன் வெளிவந்துள்ளது. அதே ஆண்டில் சிவரத்ன மகுடம் என்ற இதழும் 1894 இல் சண்முக விஜயம், சண்முக விலாசம் ஆகிய இதழ்களும் சென்னையிலிருந்து வெளிவந்துள்ளன. 1900 இல் சிவபக்தி சந்திரிகை என்ற இதழும் 1910 இல் சித்தாந்த தீபிகை என்ற இதழும் வெளிவந்துள்ளன. சித்தாந்தம் என்னும் சைவ சமய இலக்கிய இதழ் சென்னையிலிருந்து 1912 ஆம் ஆண்டு முதல் வெளிவந்தது. அந்த இதழின் துணை ஆசிரியராக அ.மு.பரமசிவானந்தம் 1944 ஆம் ஆண்டில் பொறுப்பேற்றார்.

1931 ஆம் ஆண்டு முதல் அ.மு.ப. பல சைவசித்தாந்த மாநாடுகளில் பங்கேற்றுள்ளார். என்றாலும் 1934ஆம் ஆண்டில் திரு.வி.க.வின் தலைமையில் திருவதிகையில் நடைபெற்ற மாநாட்டிலிருந்துதான் அவர் அதில் முழுமையாக ஈடுபாடு காட்டியுள்ளார். அந்த ஈடுபாட்டின் விளைவாக அவர் சென்னைக்கு வந்ததும் சைவ சித்தாந்த சமாஜத்தின் துணைச் செயலர் பொறுப்பும் சித்தாந்தம் இதழின் துணையாசிரியர் பொறுப்பும் அவருக்கு வழங்கப்பட்டன. பாலசுப்பிரமணிய முதலியார், திருவிக. ஆகியோரின் வழிகாட்டுதலுடன் அ.மு.ப. சித்தாந்தத்தின் துணை ஆசிரியராகச் சிறப்பாகச் செயல்பட்டார். அ.மு.ப. குடியிருந்த அமைந்தகரையிலிருந்து சித்தாந்தம் அலுவலகத்திற்குச் செல்வதற்குச் சரியான பேருந்து வசதி இல்லாத அக்காலத்திலும் தொடர்ந்து சென்று சித்தாந்தத்திற்குரிய பணிகளை ஆற்றியுள்ளார். பெரும்பாலும் சித்தாந்தம் இதழின் தலையங்கம் எழுதும் பொறுப்பும் பிழை திருத்தும் பொறுப்பும் அ.மு.ப.விடமே இருந்துள்ளன.

## கூட்டுறவு

கூட்டுறவுக் கொள்கையை விளக்குவதற்காகப் பல இதழ்கள் வெளிவந்துள்ளன. 1910 ஆம் ஆண்டு மதராஸ் புல்லட்டின் ஆப் கோவாப்பரேசன் என்னும் கூட்டுறவு இதழ் சென்னையில் வெளிவந்தது. 1927 இல் ஐக்கிய போதினி என்னும் இதழ் சாத்தான்குளம் என்னும் ஊரிலிருந்து வெளிவந்தது. 1929 ஆம் ஆண்டு கோவையிலிருந்து கூட்டுறவு என்னும் பெயர் கொண்ட இதழ் வெளி வந்தது. 1934 ஆம் ஆண்டில் ஐக்கிய அரசு என்னும் இதழ் திருச்சியிலிருந்தும் அதே ஆண்டில் கூட்டுறவு என்னும் இதழ் சென்னையிலிருந்தும் வெளிவந்தன. சென்னையில் தொடங்கப்பட்ட இந்தக் கூட்டுறவு இதழுக்கு என்று ஓர் ஆசிரியர் குழு உருவாக்கப்பட்டது. அ.மு.ப. சென்னைக்கு வந்த காலம் முதல் அவர் ஐதராபாத்திற்குச் செல்லும் வரையில் 1966 வரை அந்த ஆசிரியர் குழுவில் ஓர் உறுப்பினராக இருந்து செயல்பட்டார். இந்த

இதழில் கூட்டுறவு தொடர்பான செய்திகளுடன் பல கட்டுரைகளும் வெளியிடப்பட்டன. அந்தக் கூட்டுறவு இதழின் பிழைதிருத்தும் பணியுடன் கட்டுரைகளைச் செம்மைப் படுத்தும் பணியும் அ.மு.ப.விற்கு வழங்கப்பட்டது.

## பாரததேவி முதலியன

1939 ஆம் ஆண்டு முதல் வார இதழாக வெளிவந்து கொண்டு இருந்த பாரததேவி என்னும் இதழ் பின்னர் நாளிதழாக வெளிவரத் தொடங்கியது. அந்த இதழின் பொறுப்பு 1952 இல் முன்னாள் முதல்வர் பக்தவச்சலத்திற்கு வந்தது. அதன் உரிமையாளராக ஆதம்பாக்கத்தைச் சேர்ந்த இராமகிருஷ்ண ஐயர் இருந்தார். இவர்கள் இருவரும் அ.மு.ப.விற்கு நெருங்கியவர்கள். எனவே அவர்கள் அ.மு.ப.வை அழைத்து அதன் பொறுப்பாசிரியராகவும் மேலாளராகவும் பணியாற்றுமாறு கேட்டுக் கொண்டனர். அந்தப் பொறுப்பை ஏற்று நடத்துவதற்கு வசதியாக அவர் பணியாற்றிய பச்சையப்பன் கல்லூரியில் அவருக்குரிய பாட வேளைகளை நண்பகல் ஒரு மணியுடன் முடியுமாறு ஏற்பாடும் செய்தனர். அதன்படி ஒவ்வொரு நாளும் பிற்பகல் மவுண்ட் ரோட்டில் உள்ள காஸ்மோபாலிடன் கிளப்பிற்குப் பின்புறம் உள்ள பாரததேவி நாளிதழ் அலுவலகத்திற்குச் சென்று பணியாற்றினார். பெரும்பாலும் இரவு பத்துமணி வரை பணியாற்ற வேண்டியிருந்ததால் பத்திரிகை அலுவலகக் காரிலேயே வீட்டிற்கு வந்தார். பக்தவச்சலமும் அ.மு.ப.வும் இணைந்து பாரததேவியின் நிர்வாகத்தை மேற்கொண்டு வந்தனர். இவ்வாறு சில மாதங்கள் கடந்தன. இராஜாஜி தமது அமைச்சரவையில் பக்தவச்சலத்தைச் சேர்த்துக் கொண்டதால் பாரததேவியின் முழுப்பொறுப்பும் அ.மு.ப.வுக்கு வந்தது. கொஞ்ச காலத்தில் பாரததேவி நின்று விட்டது.

1967 இல் முதல் அமைச்சர் பணியிலிருந்து விலகிய பிறகு சுதேசமித்திரன் இதழின் ஆசிரியர் பொறுப்பைப் பக்தவச்சலம் ஏற்றுக் கொண்டார். அப்போதும் அடிக்கடி சுதேசமித்திரன் அலுவலகத்திற்குச் சென்று அ.மு.ப. அவருக்கு உதவியாக இருந்தார். சுதேசமித்திரன் இதழில் கட்டுரைகள் எழுதியதுடன் அ.மு.ப. நூல் விமர்சனமும் செய்துள்ளார்.

அமுதசுரபியில் அ.மு.ப., சீவகன் வரலாற்றைத் தொடர்ந்து எழுதி வந்தார். அதைப் பிற்காலத்தில் தனிநூலாகவும் அவர் வெளியிட்டார். கவிஞர் கண்ணதாசன் நடத்திய தென்றல் என்னும் இதழிலும் அ.மு.ப. பல கட்டுரைகள் எழுதியுள்ளார். சொக்கலிங்கம் நடத்திய தினசரி என்னும்

நாளிதழின் சிறப்பிதழ்களிலும் அ.மு.ப. கட்டுரைகள் படைத்துள்ளார். இலண்டன், மலேயா, இலங்கை முதலிய நாடுகளிலிருந்து வெளிவந்த இதழ்களிலும் அ.மு.ப. பல கட்டுரைகள் எழுதியுள்ளார். சென்னை வானொலியிலும் பல சொற்பொழிவுகளை அ.மு.ப. ஆற்றியுள்ளார்.

## இதழ்ப் படைப்புகள்

அ.மு.பரமசிவானந்தம் பல்வேறு இதழ்களில் படைத்த படைப்புகளும் வானொலி உரைகளும் நூல்களாக வெளிவந்துள்ளன. அவை,

**கொய்த மலர்கள்**
**எல்லோரும் வாழ வேண்டும்**
**நாலும் இரண்டும்**
**வானொலி வழியே**
**சிறுவர்களுக்கு**

என்பவை ஆகும். அந்தக் கட்டுரைகள், உரைகள் பற்றி இங்கே காண்போம். கொய்த மலர்கள் என்னும் நூலில் அ.மு.ப. பல்வேறு மலர்களில் எழுதிய கட்டுரைகள் தொகுத்துத் தரப்பட்டுள்ளன.

1. வண்ண ஆடைகள்

   சேலம் வண்ணக் களஞ்சியத்தார் அவையின் வெள்ளிவிழா மலரில் வெளிவந்தது (பிப்ரவரி 1960)

2. உடையும் தையற்கலையும்

   தையற்கலை என்னும் இதழின் பொங்கல் மலரில் வெளிவந்தது (சனவரி 1960)

3. பேர் வேண்டேன்

   அவள் இவள் நல்லூர் சட்டநாதர் குடமுழுக்கு விழா மலரில் வெளிவந்தது (பிப்ரவரி 1960)

4. உயிர்த் துன்பம் உன் துன்பம்

   அவள் இவள் நல்லூர் சட்டநாதர் குடமுழுக்கு விழா மலரில் வெளிவந்தது (பிப்ரவரி 1960)

5. சமதர்மச் சமுதாயம்

   மதுரைச் சித்திரை விழா மலரில் வெளிவந்தது.

6. எல்லைப் போராட்டம்

நக்கீரன் பொங்கல் மலரில் வெளிவந்தது (சனவரி 1960)

7. எல்லாரும் உவப்பது

மலேயா மலரில் வெளிவந்தது.

8. ஒரு சொல் கேளீர்

பம்பாய் கலை விழா மலரில் வெளிவந்தது.

9. வள்ளுவர் காட்டிய காதல் நெறி

கல்கத்தா எழுத்தாளர் சங்க மலரில் வெளிவந்தது.

10. வடமொழி - ஆரியம் சமஸ்கிருதம்

தென்றல் பொங்கல் மலரில் வெளிவந்தது (சனவரி 1960)

11. உள்ளும் புறமும்

முல்லை இதழில் வெளிவந்தது (ஏப்பிரல் 1960)

12. கவிஞன் யார்?

தென்றல் கவிஞர் மலரில் வெளிவந்தது (06-08-1960)

13. நாடகத் தமிழ்

கல்கத்தா இதழில் வெளிவந்தது.

## வானொலி உரைகள்

1924 ஆம் ஆண்டு இந்தியாவில் முதன் முதலில் சென்னையில் வானொலி நிலையம் அமைக்கப்பட்டது. சர். முத்தையா முதலானோர் ஒருங்கிணைப்பில் சென்னை வானொலிக் கழகம் என்ற அமைப்பு உருவாக்கப்பட்டது. அவர்களால் தொடர்ந்து நடத்த முடியாததால் அதைச் சென்னை மாநகராட்சியிடம் வழங்கிவிட்டார்கள். 1938 வரை சென்னை மாநகராட்சியின் இந்த ஒலிபரப்பு இலங்கையையும் உள்ளடக்கி நடைபெற்றது. 1927 இல் மும்பையிலும் கல்கத்தாவிலும் தொடங்கப்பட்ட இந்திய ஒலிபரப்புக் குழுமத்தை 1930 இல் இந்திய அரசு எடுத்துக் கொண்டு ஒலிபரப்பியது. 1936 இல் அது அனைத்து இந்திய வானொலி என்ற பெயருடன் ஒலிபரப்பியது. 1957 இல் அது ஆகாசவாணியாக மாறியது. 1938 ஆம் ஆண்டில் சென்னையில் அனைத்து இந்திய வானொலி நிலையம் அமைக்கப்பட்டதால் சென்னை மாநகராட்சி ஒலிபரப்பு நிறுத்தப்பட்டது.

அ.மு.பரமசிவானந்தம் வானொலி வாயிலாகப் பல்வேறு உரைகளை ஆற்றியுள்ளார். அவற்றை இங்கே காண்போம். வானொலி வழியே என்னும் நூலில் இடம் பெற்றுள்ள உரைகள் பின்வருமாறு:

| | | |
|---|---|---|
| 1. | தமிழ் இலக்கியமும் நாட்டு ஒருமைப்பாடும் | 13-04-1966 |
| 2. | தொல்காப்பியர் கண்ட தமிழகம் - பாலை | 18-09-1971 |
| 3. | வாய்மொழி இலக்கியம் | 21-01-1963 |
| 4 | ஐம்படைத் தாலி | 20-06-1966 |
| 5. | காவடிச்சிந்து | 11-02-1968 |
| 6. | மலைவாழ் மக்கள் | 22-03-1971 |
| 7. | தமிழ் இலக்கியம்-உரைநடை | 26-20-2967 |
| 8. | நோக்கு | - - - - |

திருக்குறள், நாலடியார், அறநூல்கள் முதலியவற்றிலிருந்து அ.மு.ப. ஆற்றிய உரைகள் நாலும் இரண்டும் என்னும் நூலாகத் தொகுக்கப்பட்டுள்ளன. அவற்றில் இடம் பெற்றுள்ள வானொலி உரைகளைக் காண்போம்.

இந்த வானொலி உரைகள் நான்கு தலைப்புகளில் உள்ளன. அதிகாரங்கள் என்ற தலைப்பில் மூன்று உரைகளும் குறள் நெறி என்ற தலைப்பில் பன்னிரண்டு உரைகளும் நாலடி என்னும் தலைப்பில் ஆறு உரைகளும் அறநெறி என்ற தலைப்பில் ஐந்து உரைகளும் இடம் பெற்றுள்ளன.

## அதிகாரங்கள்

| | |
|---|---|
| 1. அடக்கமுடைமை | 27-08-1971 |
| 2. ஒழுக்கமுடைமை | 28-08-1971 |
| 3. பிறனில் விழையாமை | 29-08-1971 |

## குறள் நெறி

| | |
|---|---|
| 4. அன்பீனும் ஆர்வமுடைமை | 13-01-1973 |
| 5. அன்புற்றமர்ந்த வழக்கென்ப | 14-01-1973 |
| 6. அறத்திற்கே அன்பு சார்பென்ப | 15-01-1973 |

| | |
|---|---|
| 7. தெளிவலதனைத் தொடங்கார் | 07-02-1974 |
| 8. வகையறச் சூழாது எழுதல் | 08-02-1974 |
| 9. செய்தக்க அல்ல கெடும் | 09-02-1974 |
| 10. மடியுளான் மாமுகடி என்ப | 10-07-1974 |
| 11. பொறியின்மை யார்க்கும் பழியன்று | 11-07-1974 |
| 12. தெய்வத்தான் ஆகாது எனினும் | 12-07-1974 |
| 13. மிகச் செய்து தம் எள்ளுவாரை | 18-01-1975 |
| 14. பகை நட்பாம் காலம் வருங்கால் | 19-01-1975 |
| 15. பேதமை என்பதொன்று | 20-01-1975 |

நாலடி

| | |
|---|---|
| 16. அறுசுவை உண்டி | 28-09-1975 |
| 17. துகள்தீர் பெருஞ்செல்வம் | 29-09-1975 |
| 18. யானை எருத்தம் | 30-09-1975 |
| 19. அறிமின் அறநெறி | 17-03-1976 |
| 20. அடைந்தார்ப் பிரிவும் | 18-03-1976 |
| 21. இறப்ப நினையுங்கால் | 19-03-1976 |

அறநெறி

| | |
|---|---|
| 22. அறம் வெல்லும் பாவம் தோற்கும் | ---- |
| 23. யாதும் ஊரே யாவரும் கேளிர் | ---- |
| 24. எல்லாரும் இன்புற்றிருக்க | ---- |
| 25. ஊழ் வினையும் ஆள் வினையும் | ---- |
| 26. நல்ல உள்ளம் | ---- |

இவை தவிரவும் வானொலியின் சிறுவர் பகுதியில் அ.மு.ப. ஆற்றிய உரைகள் சிறுவர்க்கு என்னும் நூலாக வெளியிடப் பட்டுள்ளன.

## மொழிநடை

இதழ் ஆசிரியராகவும் இதழ்களுக்குப் படைப்புகள் படைத்தவராகவும் வானொலியிலும் பல கருத்தரங்குகளிலும் உரையாற்றியவராகவும் தமிழ்ப் பேராசிரியராகவும் விளங்கும் அ.மு. பரமசிவானந்தத்தின் மொழிநடை எவ்வாறு அமைந்திருந்தது என்பதை அவரது இதழ்ப் படைப்புகள் வாயிலாகவும் வானொலி உரைகள் வாயிலாகவும் இங்கே காண்போம்.

பத்திரிகைகளின் மொழிநடை பற்றி உரைநடை வரலாறு என்னும் நூலில் அதன் ஆசிரியர் வி. செல்வநாயகம் என்பார், "தமிழுரை நடை விருத்திக்குச் சாதகமாய் இருந்தவற்றுள் அவ்வக் காலங்களில் எழுந்த பத்திரிகைகள் மிக முக்கியமானவை. பத்திரிகைகள் பலரும் படித்து அறிதற்கெனப் பிரசுரிக்கப்படுபவை. அதனால் அவற்றில் கையாளப்படும் நடைவகை பலரும் படித்து அறியத்தக்கதாய் அக்காலத்து வழங்கும் நடையை ஒட்டி அமைக்கப்படுதல் முக்கியமாகும்" (ப. 110) என்று கூறியிருப்பதை ஆராய்ந்தால் பத்திரிகையின் மொழிநடை எப்படி இருக்க வேண்டும் என்பது புலனாகும்.

தமிழ் இதழியல் உலகில் பாமரர்களையும் பத்திரிகை படிக்க வைத்த பெருமை சி.பா. ஆதித்தனாரையே சாரும். அதற்கு அவர் பின்பற்றிய மொழிநடை முக்கியமான காரணம் ஆகும். பேச்சு வழக்கில் உள்ள தமிழைக் கொச்சை நீக்கி எழுத வேண்டும் என்ற ஒரு பொன் விதியை (Golden Rule) அவர் தமது பத்திரிகைக்கு என்று உருவாக்கியிருந்தார். இதன் பொருள், பிறமொழிக் கலப்பில்லாமல் தமிழ் மொழியைப் பயன்படுத்த வேண்டும், ஆனால் அது பாமரர்கள் பேசும் எளிமையான தமிழாக இருக்க வேண்டும் என்பது ஆகும்.

"உலகில் ஒவ்வொரு நாளும் நடைபெறும் அரசியல், சமூக நிகழ்ச்சிகள், விஞ்ஞானத் துறையின் புதிய கண்டுபிடிப்புகள், சாதனைகள் போன்ற புதிய செய்திகளுக்கே நாளிதழ்கள் சிறப்பிடம் அளிக்கின்றன. வெளியாகவிருக்கும் சில வினாடிகளுக்கு முன்வரை வரும் தகவல்களையும் அச்சடிக்க வேண்டிய நெருக்கடியில் மிக விரைந்து எழுதும் அல்லது மொழிபெயர்க்கும் கட்டாயம் ஏற்படுவதால் ஆற அமர எண்ணி இலக்கிய இன்பம் வளர்க்கும் வாய்ப்பு நாளிதழுக்குக் கிடையாது" என்று நாளிதழ்களின் மொழிநடையில் மொழித்தூய்மை இல்லாமைக்கும் பிழைகள் இருப்பதற்கும் உரிய காரணங்களைச் சோமலெ தமது தமிழ் இதழ்கள் என்னும் நூலில் (பக். 14-15) குறிப்பிட்டுள்ளார்.

"தமிழ் இதழ்களை முதலில் தொடங்கியவர்கள் பெரும்பாலும் தமிழ்மொழிப் புலமை பெற்றவர்களாக இருக்கவில்லை. அரசியல் விழிப்புணர்ச்சியைத் தோற்றுவிக்கும் நோக்கில் பத்திரிகைகளைத் தொடங்கினர். எழுதப் படிக்கத் தெரிந்த மக்கள் மிகவும் குறைவாக இருந்த காலம் ஆதலால் மொழி உணர்வின்றியே இதழ்களை நடத்தினர். இதழ்களில் எழுதுகின்றவர்கள் தங்கள் பேச்சுத் தமிழில் எழுதுவதையே இதழியல் தமிழாகக் கருதினர்" என்று தமிழ் இதழ் நடையின் தரக்குறைவுக்கு உரிய காரணத்தை மா.பா. குருசாமி குறிப்பிட்டுள்ளார்.

## பிழை இல்லா நடை

ஓர் இதழின் மொழி நடை இலக்கிய நடையாக இருக்க வேண்டும் என்ற கட்டாயம் இல்லை. ஆனால் இலக்கணப் பிழைகள் மிகுந்த நடையாக இருக்கக் கூடாது. இந்தக் கட்டுக்கோப்புடன் அ.மு.ப.வின் இதழ் நடை காணப்படுகிறது. இலக்கிய நடை இல்லாமல் இலக்கணப் பிழை இல்லாமல் அமைந்துள்ளதைக் காண முடிகிறது. அக்காலத்தில் தமிழ் படிக்காதவர்களே பெரிய இதழ்களின் ஆசிரியர்களாக இருந்த வேளையில் தமிழ் இலக்கியம் படித்த அ.மு.ப. இதழ் ஆசிரியராக இருந்ததால் இலக்கணப் பிழை இல்லாத நடையைத் தர முடிந்தது எனலாம். தமிழ் இலக்கியம் படித்தவர் என்றாலும் தமது இதழ் நடையை எல்லாரும் புரிந்து கொள்ளும் வகையில் அமைத்தது அவரது தனிச்சிறப்பு எனலாம்.

## எளிய நடை

இதழ்களில் இடம்பெறும் தொடர்கள் சிறுசிறு தொடர்களாக இருந்தால் அனைவராலும் விரும்பிப் படிக்கப்படும். அவ்வகையில் சிறிய தொடர்களைத் தமது இதழ்நடையாகக் கொண்டுள்ளார் அ.மு.ப.

"ஆடை மனிதனுக்கு நெடுநாட்களாகவே உரிய ஒரு பொருள். அவன் தன் அறிவு பெற்ற காலத்திலேயே அது தேவைப்பட்டது. விலங்கொடு விலங்காகத் திரிந்து கண்டதைத் தின்று வாழ்ந்த அந்தப் பழம்பெருங் காலத்திலேயே அவனுக்குத் தன் உடலை மறைக்க வேண்டும் என்ற உணர்வு தோன்றியது. மனித உணர்வின் முதற்படியிலேயே இவ்வாடை பற்றி உணர்வு பிறந்தது." (கொய்த மலர்கள்: ப. 23) என்னும் பத்தியில் மூன்று தொடர்கள் உள்ளன. இவற்றில் இரு தொடர்கள் மிகச் சிறியவை. ஒரு தொடர் கொஞ்சம் பெரியது. என்றாலும் அதில் உள்ள சொற்கள் எல்லாம் மிக எளிய சொற்கள். அன்றாடம் மக்கள் பேச்சில் காணப்படும் எளிய தமிழ்ச் சொற்கள். இத்தகைய எளிய தமிழ் நடையே

இதழுக்கு உரிய நடை பிற மொழி கலவாத, இலக்கணப் பிழை இல்லாத எளிய நடை .

## நிறுத்தக் குறிகளைப் பயன்படுத்தல்

தமிழில் உரைநடை எழுதும்போது தேவையான இடங்களில் கால்புள்ளி, அரைப்புள்ளி, முக்கால் புள்ளி, முற்றுப்புள்ளி, வியப்புக்குறி, வினாக்குறி, இடைக்கோடு போடுதல் முதலியவற்றைப் பயன்படுத்தினால் அந்த உரைநடை படிக்க எளிமையாக இருப்பதுடன் உணர்வையும் வெளிப்படுத்தும். அவ்வகையில் தேவையான இடங்களில் அ.மு.ப. நிறுத்தக் குறிகளைப் பயன்படுத்தியுள்ளார். "நீலகண்டன், ஆலமர் செல்வன், பிறைசூடி, நீறணிந்தோன், மழுவேந்தி, பிஞ்ஞகன், பரசுபாணி, முருகன், வேலன் என்ற பல பெயர்கள் அவ்விறைவன் தோற்ற நிலைகளுக்கு ஒப்ப அமைகின்றன." (கொய்தமலர்கள், ப. 39) என்னும் தொடர் சற்றுப் பெரிய தொடர்தான். ஆனால் அனைத்துப் பெயர்களுக்கும் அடுத்து உரிய கால்புள்ளி இடம் பெற்றுள்ளதால் இத்தொடரைப் படிப்பதிலும் பொருள் கொள்வதிலும் எந்த இடையூறும் எழவில்லை என்பதைக் காணலாம்.

"அவர் அத்துடன் நிற்கவில்லை, அதற்கு மேலும் சொல்கிறார். தானவனை மறக்க முடியுமா? என்ற வினாவினை எழுப்பிக் கொள்ளுகிறார். அதற்கு அவரே பண்பாட்டின் உச்சியில் நின்று பதிலும் தருகிறார். மறக்க முடியும் என்கிறார். எப்போது? ஆம்! ஒரே ஒரு வேளையில்தான். தன்னை மறக்க முடியுமன்றோ!" (கொய்தமலர்கள், ப. 138) இந்தப் பகுதியில் அ.மு.ப. சிறு தொடர்களை அமைப்பதற்கு வியப்புக்குறியும் வினாக்குறியும் துணைபுரிந்துள்ளன என்பதைக் காணமுடிகிறது.

## உருபுகளை வெளிப்படுத்தும் நடை

வேற்றுமை உருபு முதலான உருபுகள் வெளிப்படையாகத் தோன்றுமாறு மொழிநடை அமைந்தால் அது எளிமையான மொழிநடைக்கு வழிவகுக்கும். வளவன் கண்டான் என்று சொல்லும் போதும் வளவனைக் கண்டான் என்று சொல்லும் போதும் பொருள் வேறுபாடு அடைவது எளிதில் தெரிகிறது அல்லவா? எனவே வேற்றுமை உருபுகளைத் தேவைப்படும் இடங்களில் வெளிப்படையாக அமைப்பதே சிறந்த நடையாகும்.

"ஆடைகளை அழகு செய்யும் முறையால்" (கொய்த மலர்கள், ப. 25) என்னும் தொடரை ஆடைகள் அழகு செய்யும் முறையால் என்று

எழுதினால் ஆடைகள், அழகு செய்யும் முறை என்று பொருள் வேறுபடுகிறது.

"தனக்கென வாழாப் பிறர்க்குரியாளராக இருந்த ஒரு சிலரையே .. ..." (கொய்தமலர்கள், ப. 65) என்னும் தொடரில் இடம் பெற்றுள்ள ஏகார இடைச்சொல் பிரித்தல் பொருளில் வந்து விளக்கம் பெறுவதைக் காண முடிகிறது. இவ்வாறு உருபுகள் வெளிப்படையாக வரவேண்டும் என்று திட்டமிட்டு அ.மு.ப. தமது மொழிநடையை அமைக்கவில்லை என்றாலும் அவரது புலமை, அனுபவம் காரணமாக இத்தகைய மொழிநடை இயல்பாகவே அமைந்துள்ளது எனலாம்.

## கருத்துரு விளக்கம்

வாய்மொழி இலக்கியம் என்ற தலைப்பில் அ.மு.ப. 21-01-1963 அன்று வானொலியில் ஓர் உரை வழங்கியுள்ளார். வானொலியைப் படித்தவர், படிக்காதவர் என்று எல்லோரும் கேட்பார்கள். வாய்மொழி இலக்கியம் என்ற தலைப்பு இலக்கியப் பயிற்சி உடையவர்களுக்கு மட்டுமே எளிதில் புரியும். ஏட்டில் எழுதப்படாமல் வாய்மொழியாகப் பாடப்படும் பாடல்கள், சொல்லப்படும் கதைகள் முதலியவற்றைக் குறிப்பதுதான் வாய்மொழி இலக்கியம் என்பதன் பொருள் என்பதை வானொலியில் கேட்ட அந்தச் சில நொடிகளுக்குள் பாமர மக்களால் புரிந்து கொள்ள இயலாது. எனவே வாய்மொழி இலக்கியம் என்னும் தலைப்பு எதை விளக்குகிறது என்பதைத் தெளிவாக விளக்கியுள்ளார் அ.மு.ப. இது எளிதில் புரியாத சொற்களைப் பயன்படுத்த வேண்டிய தேவை ஏற்பட்டால் அதை நன்றாக விளக்க வேண்டும் என்னும் இதழ் மொழிநடைக்கூற்றுக்கு ஏற்ப அமைந்துள்ளதைக் காண முடிகிறது.

## கிரந்த எழுத்துகள்

தமிழ்மொழியில் பிறமொழிச் சொற்களைச் சரியாக ஒலிப்பதற்காகக் கிரந்த எழுத்து வடிவத்தைப் பயன்படுத்துகிறோம். அந்தக் கிரந்த எழுத்துகளைத் தமிழ் அறிஞர்கள் பயன்படுத்தத் தயங்குவர். ஆனால் அ.மு.ப. பெயர்களைக் குறிக்கும் இடங்களில் கிரந்த எழுத்துகளைத் தயங்காமல் பயன்படுத்தியுள்ளார்.

"ஆண்டு தோறும் சட்டசபைகள் பட்ஜெட் கூட்டம் கூடிச் செலவாகும் தொகையை அரசாங்கம் கணித்து மத்திய மாநில ஆட்சிகளுக்கு ஜூலை ஆகஸ்டில் ஒப்படைக்கின்றன. பின் மாநில ஆட்சிகள் மாவட்டங்களுக்குப் பகிர்ந்து கொடுக்கப் பின்னும் இரண்டு மாதங்கள் ஆகின்றன.அவை உரியவருக்கு வேலை கொடுத்துத் தொடங்க

ஜனவரி பிறந்து விடும்" (கொய்த மலர்கள், ப. 87) என்னும் பகுதியில் பல கிரந்த எழுத்துகள் பயன்படுத்தப் பட்டுள்ளதைக் காண முடிகிறது.

இப்பகுதியில் பயன்படுத்தப்பட்டுள்ள கிரந்த எழுத்துகளில் பட்ஜெட் என்னும் சொல்லை வரவு-செலவு என்று மொழிபெயர்த்துப் பயன்படுத்தமுடியும். பிற மாதங்களின் பெயர்களை அப்படியே தான் பயன்படுத்த முடியும். சூலை என்றோ சனவரி என்றோ கிரந்த எழுத்துக்கு மாற்று எழுத்துகளைப் பயன்படுத்த இயலும் என்றாலும் இதழ்களில் பெரும்பாலும் அவ்வாறு மாற்று எழுத்துகளைப் பயன்படுத்துவதில்லை. இவ்வாறு கிரந்த எழுத்துகளைப் பயன்படுத்தியுள்ள அ.மு.ப. சாதி என்னும் சொல்லை ஜாதி என்று குறிப்பிடாமல் சாதி என்றேதான் குறிப்பிட்டுள்ளார் (கொய்தமலர்கள், ப. 106).

## பிறமொழிச் சொற்கள்

அ.மு.ப.வின் இதழ் நடையில் பிறமொழிச் சொற்கள் பெரும்பாலும் இடம்பெறுவதில்லை. என்றாலும் சில இடங்களில் மக்கள் நடுவே பரவலாகப் பேசப்படும் பிறமொழிச் சொற்களைப் பயன்படுத்துவதைக் காண முடிகிறது. சர்பத் (கொய்தமலர்கள், ப. 94), ராக்கெட்டு (கொய்தமலர்கள், ப. 95) முதலிய சொற்களைப் பயன்படுத்தியுள்ளார். இந்தச் சொற்களுக்குப் பதிலாகப் பழச்சாறு அல்லது சாறு என்றோ ஏவுகணை என்றோ பயன்படுத்த முடியும். என்றாலும் அக்காலப் பெருவழக்குக் கருதி இச்சொற்களை அப்படியே பயன்படுத்தியிருப்பார் எனக் கருதமுடியும்.

## துணை நூல்கள்


1. அ.மு.ப. — ஆனந்த முதல் ஆனந்த வரை (1992), தமிழ்க்கலைப் பதிப்பகம், சென்னை.
2. அ.மு.ப. — கொய்த மலர்கள் (1975), தமிழ்க் கலைப் பதிப்பகம், சென்னை.
3. அ.மு.ப. — நாலும் இரண்டும் (1976), தமிழ்க்கலைப் பதிப்பகம், சென்னை.
4. அ.மு.ப. — வானொலி வழியே (1976), தமிழ்க்கலைப் பதிப்பகம், சென்னை.
5. மாயாண்டி இரா. வளவன். சா. (தொகுப்பாசிரியர்கள்) — அருந்திறலாளர் அ.மு.ப. (1991) தமிழ்க்கலைப் பதிப்பகம், சென்னை.

6. ஆதித்தனார், சி.பா., — இதழாளர் கையேடு (1996), ராணிமுத்து, சென்னை - 7.

7. இளங்கோவன், மா.ரா. — இந்திய இதழ்கள் (1998), பூங்கொடி பதிப்பகம், சென்னை - 4.

8. இன்னாசி, சூ. எட்வர்ட் சாலமோன் ராஜா. மா. — இதழியல் (1995) சென்னைப் பல்கலைக்கழகம், சென்னை - 5.

9. கலைவாணி. சோ — பத்திரிகைக் கலை (1988), சாரதா வெளியீடு, வேலூர்.

10. குருசாமி, மா.பா. — இதழியல் கலை (1996), குரு-தேமொழி, திருச்செந்தூர்.

11. சம்பந்தன், மா.சு., — தமிழ் இதழியல் வரலாறு (1987), தமிழர் பதிப்பகம், சென்னை 1.

12. சாமி. அ.மா. — தமிழ் இதழ்கள் தோற்றம், வளர்ச்சி (1987), நவமணி பதிப்பகம், சென்னை 4.

13. சிவசுப்பிரமணியன், ஆ., — அன்ரிக் அடிகளார் (2003), உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை 113.

14. சோமலெ — தமிழ் இதழ்கள் (1975), சென்னைப் பல்கலைக்கழகம், சென்னை 5.

## உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சென்னை - 600 113

### அண்மை வெளியீடுகள்

| | ரூ.பை. |
|---|---|
| உலகத் தமிழிலக்கிய வரலாறு கி.பி. 901 - கி.பி. 1300 | 100.00 |
| பண்டிதமணி மு. கதிரேசன் செட்டியார் | 40.00 |
| பெண்ணிய உளப்பகுப்பாய்வும் பெண் எழுத்தும் | 40.00 |
| தொல். பொருள். (அகம்-புறம்)-ஆங்கில மொழிபெயர்ப்பு | 50.00 |
| தமிழ் ஆய்வு இதழ்கள் | 50.00 |
| வேதாத்திரியத்தில் சமூகவியல் இறையியல் சிந்தனைகள் | 130.00 |
| தமிழிலக்கிய வகைமையியல் தொகுதி - 3 | 150.00 |
| தமிழிலக்கிய வகைமையியல் தொகுதி - 2 | 115.00 |
| தமிழிலக்கிய வகைமையியல் தொகுதி - 1 | 130.00 |
| தமிழரின் மரபுச் செல்வங்கள்-அறிவியல் - தொழில்நுட்பம் II | 100.00 |
| தமிழரின் மரபுச் செல்வங்கள்-அறிவியல் - தொழில்நுட்பம் I | 90.00 |
| மௌனத்தின் அதிர்வுகளும் மொழியும் - பெண் | 40.00 |
| உலகத் தமிழிலக்கிய வரலாறு கி.பி. 1851 - 2000 | 180.00 |
| இதழாளர் பெரியார் | 160.00 |
| திராவிட இயக்க இதழ்கள் - தொகுதி 1 | 60.00 |
| சைவ சித்தாந்தத்தில் ஆன்மக் கொள்கை | 65.00 |
| பெரியபுராணம் - திருமுறைகளின் கவசம் | 55.00 |
| காஞ்சிபுரம் கி.பி. 6-ஆம் நூற்றாண்டுக்கு முன் | 65.00 |
| திருவாவடுதுறைப் புராணம் | 250.00 |
| மகாவித்துவான் ரா. ராகவையங்கார் | 30.00 |
| சித்தாந்தச் செல்வர் க. வெள்ளைவாரணனார் | 25.00 |
| திருக்குறளில் பொதுநிலை உத்திகள் | 30.00 |
| தமிழிலக்கித்தில் மனித நேயம் | 115.00 |
| தமிழ்க்கடல் இராய சொக்கலிங்கம் | 30.00 |
| தமிழ் இதழ்கள் - விடுதலைக்குப் பின் | 40.00 |
| பாவாணரின் ஞாலமுதன்மொழிக் கொள்கை | 45.00 |
| பெண்ணியப் படைப்பிலக்கியம் | 75.00 |
| தமிழக வானவியல் சிந்தனைகள் | 35.00 |
| பள்ளு இலக்கியம் மறுவாசிப்பு பிரதிக்கு வெளியே | 75.00 |
| இருபதாம் நூற்றாண்டுத் தமிழ்க் கவிதை | 80.00 |
| தமிழியல் ஆய்வுச் சிந்தனைகள்-நாட்டுப்புறவியல்,கலை,பண்பாடு | 90.00 |
| தொல்காப்பியம்-எழுத்ததிகாரம் மூலமும் நச்சினார்க்கினியர் உரையும் | 150.00 |
| வாழிய செந்தமிழ் | 140.00 |

**572 பேராசிரியர் அ.மு.பரமசிவானந்தம் 40.00**